# முகவுரை.

இஃது தமிழ்க் கிறிஸ்தவர்களிற் சிலருக்கு வேண்டுமெ ன்கிற நோக்கத்தைக்குறித்தும், அவர்களுக்குப் பிரிமாயெ ழுப்புதலுண்டாகுதலைக்குறித்து, மற்றவர்களியற்றிய ஞா னப்பாட்டுகளிற் சிலவற்றை யாராய்ந்தெடுத்துக், கீதமா லையாகச் செய்யப்பட்டது. இதனுலவர்கள், தேவாலை யங்களிலும் வீடுகளிலுஞ் செலுத்துகிற துதிகளுக்கும் விசு வாசம், அன்பு, தைரியம், சாக்கிரதை, முதலான நற்குண ங்களுக்குமுதவியாயிருக்கிறதுமல்லாமற், றுன்பப்படுகிறகா லத்திலுமாறுதலாயிருந்தாலெங்களுக்கு மன மகிழ்ச்சியா யுந் திர்ப்தியாயுமிருக்கும்.

சிலர் பாடும்பொழுது, பாட்டினிராகத்தை மாத்திரம் கவனிக்கிறூர்களே யொழிய, க. கொரி. ௧௪ : ௧௫. வசன த்திற் கூறியபடி, ஆவியினுலு முண்மையினுலும் பொருள் விளங்கும்படிக், கவனிக்கிறதில்லை; ஆகையாலிந்த மாலை யை யேற்றுக்கொள்ளுகிறவர்களவருடைய கருத்தின்படிக் கவனிப்பீர்களாக.

இதைப்பாடுவதற்காக வதிகவழக்கமுள்ள விராகத்தி ன் மாதிரி யிதனேடு சேர்க்கப்பட்டிருக்கிறது : மற்றவைக ட்கு முன்னச்சிற் பதிப்பித்திருக்கிற பழைமையான பெப்ரி சியுஸ் ஐயரவர்கள் செய்த புத்தகத்திற்காகச் செய்யப்பட் டிருக்கிற விராகப்புத்தகத்திற் காண்பீர்களாக.

நமக்காக விந்தப்பாட்டுகளைப் பாடினவர்களாகிய வனேகம்பெயர்கள் மரித்தவர்களாக விருந்தாலுமிப்பொ ழுது வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களை விசுவாசத்தினு

லுநீடிய பொறுமையினாலுஞ் சுதந்திரித்துக் கொள்ளுகிறவர்களைப் பின் பற்றும்படி நம்மோடு பேசுகிறவர்களாயிருக்கிறார்கள். அவர்கள் பரமண்டலங்களிலிருக்கிற பரம பிதாவினுடைய சிங்காசனத்திற்கு முன்பாக, மோட்சவாசிகளோடு கூடவிருந்து, புதிய சிறந்த மோசேயின் பாட்டையு மாட்டுக்குட்டியானவருடைய பாட்டையு மெக்காலமும் பாடிக்கொண்டு வருகிறார்கள் நாமுமிதனை நினைத்து விரைவாக வவர்களோடு கூடவிருந்து பாடுவதற்கு முயற்சிச்செய்வோமாக.

பெங்களூர்<br>
ஆவணி மீ உகூ உ<br>
௲அ௱சகூ ஹூ.



# அட்டவணை.

—o—

பக்கம்.

பக்கம்.



---

# CONTENTS.

---

# கீதமாலை.

## முதற் பிரிவு.

## தேவாராதனை.

### தனித்த தேவாராதனை.

**1.** க-ம், கீதம். P. M.

*Praise to God.* PSALM CXLVIII.

க. என் நெஞ்சமே, நீ மோட்சத்தை
விரும்பி த்தேடிக் கர்த்தனை
வணக்கத்துடனே
துதித்துப்பாடி, என்றைக்கும்
புகழ்ச்சி செய்து வாழ்ந்திரு
மாபயத்துடனே.

உ. நட்சத்திரங்கள் சந்திரன்,
வெயிலெறிக்குஞ் சூரியன்,
ஆகாய சேனையே,
கிராணம், மின், முழக்கமும்
வானங்கள் மேல் வானங்களும்,
செய்யுங்கள் துதியே.

௩. விஸ்தாரமான பூமியே,
நீயும் எழுந்து வாழ்த்தல் செய்,
கர்த்தர் உன் ஆண்டவர்.
உன்னில் இருக்கும் யாவற்றும்
அவர் சொற்படி நடக்கும்,
கர்த்தாவே காரணர்.

௪. எல்லை இல்லாச் சமுத்திரம்,
மாகோஷ்டமுள்ள கடலும்
மோதி அடிக்கவே,
களிப்பாய் நீந்தும் மீன்களும்
மகா திமிங்கலங்களும்
கர்த்தாவைப் போற்றவே.

௫. வானோர், பூவோர், மாசேனையாய்
பூமியின் கீழோர் ஆழமாய்
வணங்க வாருங்கள்.
ஏகோவா தாமே காரணர்,
சித்திக்கவும் நடத்துவர்,
துதியாய்ப் பாடுங்கள்.

2. உ-ம். கீதம். C. M.

*The same.*

௧. மகாவதிசயங்களை
அருளிச்செய்தவர்,
என்னுத்துமாவில்த்தயவை
பெருக்கி வந்தவர்.

௨. உபத்திரவத்தின் பாரத்தை
அன்பாக நீக்கினோர்:
இலக்கமற்ற பாவத்தை
மன்னித்திரட்சித்தோர்.

௩. குரூரமான மனதை
உருகச் செய்தவர்,
நோறுக்கப்பட்ட நெஞ்சத்தை
சந்தோஷிப்பித்தவர்.

௪. இருள் அடைந்த புத்தியை
வெளிச்ச மாக்கினோர்,
பொல்லாங்குக்கான ஏதுவை
அன்பாக நீக்கினோர்,

௫. இவ்வளவான மேன்மையை
இரங்கிச் செய்தவர்
இடைவிடாத வாழ்த்தலை
அடையத்தக்கவர்.

௬. இதை யறிந்தேன் நெஞ்சமே
புகழ் செலுத்தப்பார்:
இரக்கமுள்ள நாயனே
அதிற் சந்தோஷிப்பார்.

C. M.

3. ௩-ம். கீதம். L. M.

*The goodness of God.*

௧. மகா கர்த்தாவே! உமது
இராசாசனத்தண்டைக்கு

பணிந்து தாழ்மையாய் வரும்
இப்பாவியைத் தள்ளாதேயும்.

௨. பிதாவே என்னைத் தேவரீர்
தெய்வீக ரூபாய்ச் சிஷ்டித்தீர்:
நீர் தான் என்சீவன் உம்மையே
பற்றுவிட்டால் அழிவேனே.

௩. நான் சாவுக்குச் சாண் தூரமாய்
இருந்த போதெல்லாம் அன்பாய்
உண்டான மோசங்களை நீர்
விலக்கிப் போட்டிருக்கிறீர்.

௪. திவ்விய மைந்தனே உம்மால்
நான் மீட்கப்பட்டோன் ஏனென்றால்
அடியேன் தப்பத்தேவரீர்
பலியாய்ச் சீவனை விட்டீர்.

4. ச–ம். கீதம். C. M.

*The same.*

க. என் தேவனே, என் ஆத்துமா
நீர் தந்த நன்மையே
சிந்தித்துப்பார்க்க, மா மகா
எண்ணடங்காததே.

௨. உற்பத்தியானது முதல்
என்னை நடத்தினீர்:
எனது ஆத்துமா உடல்
இரண்டும் தாங்கினீர்.

ங. மயக்கம் நீங்க நெஞ்சத்தை
  செம்மைப்படுத்தினீர்:
அநேக ஆறுதல்களை
  என்னிற்பிரயோகித்தீர்.

ச. என் சீவகாலம் யாவையும்
  விசாரித்தீர், அதே
என் ஞாபகத்தில் என்றைக்கும்
  இருக்கவேண்டுமே.

ரு. இடைவிடாது போற்றுவேன்,
  கர்த்தாவே, ஏற்றிடும்:
உம்மை எப்போதும் பற்றுவேன்,
  என்னை விடாதிரும்.

5. ரு-ம். கீதம். C. M.

"*My God the spring of all my joys.*"

க. என் களிப்புக்குக் காரணர்,
  என் செல்வச் சீவனே,
பகலிலே என் மகிமை,
  ராவில் என் சோதியே.

உ. இருளிலே நீர் தோன்றினால்
  என்மனம் மகிழும்:
நீ காலை வெள்ளி ஆனதால்
  என்னிற் பிரகாசியும்.

ங. தன்தயை யேசு காண்பித்து
  என் செல்வமானதால்

என் ஆத்துமாச் சந்தோஷித்து
நிறையும் வாழ்விஞல்.

ச. நரகத்துக்குஞ் சாவுக்கும்
அஞ்சாமல் நடப்பேன்,
தேவன்பும் விசுவாசமும்
சிறகாய் பறப்பேன்.

## குடும்ப ஆராதனை.

6. சூ–ம். கீதம். 6-8's.

*" These words which I command thee this day, shall be in thy heart &c."*

க. வீட்டில் நின்றும் இளைப்பாறி
வேதநூலை தியானஞ்செய்து,
தெய்வவாக்கை யார்க்குஞ் சொல்லி
வியந்து மனமகிழ்ந்து,
ஆத்துமார்த்தம் பெறுமட்டும்
வேதம் சோதிப்பேனே என்றும்.

உ. அருள் ஊற்றுந் தெய்வ வாக்கில்
அனுதினம் மனம் வைத்து,
தெய்வ தொண்டனகச் செல்லில்,
சேர்ப்பார் தேவன் என்னைக்காத்து,
அன்பு என்னிற் சுவாலிக்க
அருள்வாரோ தயவாக.

௩. தேவர் என்னை மார்பிற்றுங்க
துயில் கொண்டு கனுக்கண்டு,
மோட்ச இன்பங் காட்சியாக
பார்க்கும்படி தயைசெய்து,
மீட்சிதரும் சுத்த வேதம்
நெஞ்சையாற்ற, அருள்பண்ணும்.

௪. காலை துயில்விட்டு நீங்கி
மாலை மட்டுந் துதிசெய்து,
மருள்தீர வேதங்காட்டி
அருள்கூரும், துணைநின்று
அன்பென்னெஞ்சிலூறச் செய்யும்:
இன்ப வாழ்விற் சேரப்பண்ணும்.

7. எ-ம். கீதம். L. M.

*Family worship.*

௧. உம்மாற் றேன்றி, உம்மிற் சார்ந்து,
பேணப்படும் எங்கள் வீடு:
நாம் உம்மாற் பெற்ற நன்மைக்கே,
உம்மைத்துதிப்போம் பிதாவே!

௨. விண்ணேர் கர்த்தர்வந்து சுத்தம்
செய்வார் எங்கள் தாழ்ந்த இல்லம்:
துதிக்கேற்ற மகாதெய்வ
பீடம் சேர்வோம் செபம்பண்ண.

௩. சாதனர் தொண்டர் ஏகமாய்,
வேதவிதிக்கமை வோராய்,

காலை மாலை வீடுதோறும்,
போற்றக் கடவார்கள் என்றும்.

ச. செல்லுந்தலைமுறை தோறும்
உம்மைத் துதிசெய்ய ஏவும்:
பேரின்ப வீட்டில் யாவரும்,
தயையுடன் சேரப்பண்ணும்.

8. அ-ம். கீதம். L. M.

*Prayer.*

(க-ம். பங்கு.)

க. பராபரனே! உமது
ராசாசனத்தினண்டைக்குப்
பணிந்து தாழ்மையாய் வரும்
இப்பாவியைத்தள்ளாதேயும்.

உ. திவ்விய மைந்தனே! உம்மால்
நான் மீட்கப்பட்டோன், ஏனென்றால்
அடியேன் தப்பத்தேவரீர்
பலியாய்ச் சீவனை விட்டீர்.

ரு. நீர் என்னுட ஆசாரியர்,
என் ஆறுதல், என் ரட்சகர்.
நான் மோட்சத்தைப் பெறுங்கதி
நீர் உத்தரித்ததின் கனி.

(உ-ம். பங்கு.)

க. தேவாவியே! என் நெஞ்சை நீர்
திருப்பி புதிதாக்கிறீர்:
என னேன்ன நன்மை என்னிலே
உண்டோ, உம்மாலேதான் உண்டே,

உ. நீர் சோதனையில்த் தாங்கிறீர்,
உபத்திரத்தில்க் கைவிடீர்:
உம்மால்த்திடனும் வெற்றியும்
மனமகிழ்ச்சியும் வரும்.

ஙா. ஆகையினுலே உமது
மகாபெரிய அன்புக்கு
இப்போதேப் போதும் என்றைக்கும்.
இஸ்தோத்திரம் உண்டாகவும்.

ச. இந்நாளிலும் என்பேரிலும்
என் வீட்டார் நேசர்மேலேயுங்
கர்த்தாவே! நீரோ உம்முட
கரங்களை வைத்தருள.

## சபை ஆராதனை.

9. கூ-ம். கீதம். L. M.

*The presence of Christ desired.*

க. இங்கே சபையிடத்திலே
இரும், அன்புள்ள ஏசுவே!

மெய்வேதமும், சன்மார்க்கமும்
இங்கே விளங்கச் செய்திடும்.

உ. இதே! பிரியகாலமாம்:
கர்த்தாவே! வேதவாக்கியம்
தன்முத்திரைகளோடேயும்
தரிக்கக் கட்டளை யிடும்.

10. ய-ம். கீதம், S. M.

*The same.*

க. அன்புள்ள ஏசுவே!
எங்களிடம் வாரும்:
உமது வாக்கின் படிக்கே,
விண்ணபத்தைக் கேளும்.

உ. இன்றிங்கே ஏகமாய்,
கூடியிருக்கிறோம்:
விண்ணப்பந் துதி, உண்மையாய்
செய்யத்துணிகிறோம்.

ங. இவ்வாலயத்திலே,
இங்குள்ள தேசத்தார்,
கூடிவந்தும்மைத் தேடியே,
வண்ங்கக்கடவர்.

ச. இத்தலமே பேத்தேல்
சாட்சியின் கூடாரம்;
சீயோன் நகருள்ள கோயில்
என்ற பேரிடலாம்.

௫. எங்களெல்லாரையும்,
உமக்கே ஆலயம்
ஆக்கித்தெய்வீக மேன்மையும்
விளங்கப்பண்ணிடும்.

௬. பிதா, சுதன், ஆவி
என்னுந்திரியேகரோ!
இன்றும் என்றும் எவராலும்
உமக்குத்துதியே.

S. M.

11. ௰௧-ம். கீதம். L. M.

*Praise to God.*

௧. கர்த்தாவே! இங்கே எங்களை
அன்பாய்ச் சேர்த்துமதாவியை
அதின் நல்லீவுகளையும்
அருளிச்செய்திரட்சியும்.

௨. பரத்தில் நாங்கள் ஸ்வாமியே!
நீர் சுத்த சுத்த சுத்தரோ
என்றோதி உம்மை என்றைக்கும்
துதிக்கும் வாழ்வை அருளும்.

௩. தினமும் உம்மைப் பற்றியே,
தேவன்பை நன்றாயோசித்தே,
இருப்பதற்குப், புத்தியும்
நல்லாவியுங் கடாட்சியும்.

௪. ஒன்றாக ஆண்டிருக்கிற
திரியேக தெய்வமாகிய
பிதாக் குமாரன் ஆவிக்கே,
இஸ்தோத்திர முண்டாகவே.

12. ௰௨-ம். கீதம். L. M.

*The same.*

௧. சபையீர்! ஏகசித்தத்தை
அடைந்து பூரிப்பாகுங்கள்:
வணக்கமாகக் கர்த்தனை
எல்லாரும் வாழ்த்தல் செய்யுங்கள்.

௨. ஏகோவாவே மெய்த்தேவனார்,
எல்லாரையும் படைத்தாரோ;
அவர் அனாதி தந்தையார்,
எல்லாரையும் ரட்சித்தாரோ.

௩. இவ்வண்ணமான நன்மையை
குறித்து, இவ்விடத்திலே
சந்தோஷப்பட்டு நாயனை
துதித்தல் செய்யத்தக்கதே.

௪. தேவாவியே! இரக்கமாய்
நல்யோசனையைத் தந்திடும்:
எல்லாரும் அன்பு உண்மையாய்
நல்வார்த்தைக் கேட்கச்செய்திடும்.

13. ௰௩-ம். கீதம். 6-8's.

*Looking to Jesus.*

க. என்றும் மாறாத ஏசுவே!
எங்கள் வேண்டுதலைக் கேளும்.
பலமற்ற எங்களுக்கே
உம்மைச் சேவிக்க உணர்த்தும்.
செபத்தின் ஆவியை யூற்றும்:
எங்களைத் திடப்படுத்தும்.

உ. சோதிக்கப்பட்ட உமது
சீஷரைப்பாரும் ஏசுவே!
எம்மைத்திடமாக்க வந்து,
ஆவியைத்தாரும், சுவாமியே!
எங்களை ஆவியாலேயும்
என்றுஞ்செபிக்க உணர்த்தும்.

௩. பாவ வியாதியாலான
நோவைப் பலவீனத்தையும்
நீக்கி, நெஞ்சைத்தகுமான
செப ஆலயமாக்கவும்,
தேற்றரவனை யளியும்;
உம்மையும் வெளிப்படுத்தும்.

௪. உமக்குக் காத்திருக்கிற
எங்களுக்காவியால் வரும்,
செபத்தை நடப்பிக்கிற
ஆவியை மாத்திரந் தாரும்,

இவ்விண்ணப்பத்தைக் கேளும்:
அப்போ மற்றெல்லாங்கிடைக்கும்.

14. ௰௪-ம். கீதம். P. M.

*Desiring sanctification.*

௧. இயேசு சுவாமி உமது,
வசனத்தின் பாலைத்தேட
வந்தோம், எங்கள் மனது
மண்ணைவிட்டு உம்மைச்சேர
எங்கள் சிந்தையை நீர் முற்றும்
தெய்வசொல்லுக்குட்படுத்தும்.

௨. உமதாவி எங்களில்
அந்தகாரத்தை யறுத்து,
ஒளிவை வீசாராகில்,
புத்திக்கண்ணெல்லாம் இருட்டு.
சீர் உண்டாகும் நற்சிந்திப்பு
உம்முடைய நடப்பிப்பு.

௩. மகிமையின் சோதியே,
சுவாமி நாங்கள் மாயமற
பாடிக்கெஞ்சி நெஞ்சிலே
வசனத்தைக் கேட்டுணர,
வாய் செவி மனமுங்கண்ணும்
திறவுண்டு போகப்பண்ணும்.

15. ௧௫-ம். கீதம். C. M.

*"Where two or three are gathered together in my name there am I in the midst."* Mat. xviii. 20.

P. M.

க. ஏசு! சீஷரெம்மைப்பாரும்,
ஆசீர்வாதந் தந்து,
உம்மை நோக்கி நம்பிவந்தோம்:
பேணும், அருள்செய்து.

உ. சத்ய தேவே! உம்மை நம்பி
வந்தருள்வீர் என்று,
தேவர் சொன்ன வாக்கின்படி
நிற்போம், உம்மைக்காத்து.

௩. கூடிவந்தீர்; எங்களிடம்
தோன்றும், பேணி நம்மை.
தேவசுதன்! நம்மில் வாரும்:
நெஞ்சு பற்றும் உம்மை.

ச. தேவே! காய்ந்த எலும்புய்ய,
நம்மிற் சுவாசமிடும்.
ஆவி ஏற்றுக்கொள்வீர் என்ன
சொல்லிச், சாந்தஞ் செய்யும்.

௫. [அறைப்பட்ட ஏசு! உம்மை
தேடிக்காணச் செய்யும்.
மாய்ந்து, ரட்சை செய்தீர் எம்மை.
கைகால் ரத்தங் காட்டும்.

சா. உங்கள்மூலம் மாய்ந்தேன் என்னும்
வாக்கை நாங்கள் நம்பி,
உம்மைச் சார்ந்து கொள்ளச்செய்யும் :
பேசுஞ் சின்னங்காட்டி.]

16. ௰சா-ம். கீதம். C. M.

*"Let us join ourselves to the Lord in a perpetual covenant."* JER. L. 5.

க. கர்த்தரான கிறிஸ்துவிடம்
நம்மை ஒப்புவித்து,
அருள் பெற்று, நாங்கள் செய்வோம்
நித்திய உடன்பாடு.

உ. ஏசுதரும் பலன் வாங்கி,
சாகும் மட்டும், நம்மை
ஒப்புவித்து, தேவைப்போற்றி,
செய்வோம் உடன் பாட்டை.

ஙா. இப்போசெய்த உடன் பாட்டில்
என்றும் மனம் வைத்து,
இனித்தேவை விலக்காமல்,
நிற்போம் நிலைகொண்டு.

ச. சங்கற்பங்கேட்பவர்க்கஞ்சி,
நிற்போம் எந்த நாளும்.
கேட்கச்சித்தமானல்; இனி,
வந்து நம்மை நோக்கும்.

ரு. பிதா, சுதன், ஆவி! உம்மை
மனந்தியானிக்கும்.
விண்ணோர்க்காதி தேவே! தயை
தந்து, சாந்தஞ்செய்யும்.

17. ௰எ-ம். கீதம். L. M.

*Divine Worship.*

க. நன்மேய்ப்பரே இக்கூட்டத்தை
கண்ணோக்கிப்பார்த்திரட்சியும்.
அது பணிந்திருத்தலை
அரோசியாமல் ஏற்றிடும்.

உ. விண்ணப்பஞ்செய்ய தயவாய்
நற்புத்திக்கட்டளையிடும்,
தேவன்பைக்காட்டி ஏற்றதாய்
துதிக்கச்செய்திரட்சியும்.

ரு. இவ்வாலயத்திற் சுத்தமாய்
பத்தியும் அன்பும் ஐக்கமும்
உண்டாயிருக்க மேன்மையாய்
கடாட்சம் பண்ணி ரட்சியும்.

ச. இங்கும்முடைய ஆவியால்
சனங்களுக்குப் புத்தியும்
தெய்வீக சிந்தையும் வந்தால்
நல்வார்த்தை மாட்சிமைப்படும்.

## பொது ஆராதனை.

18. கூ-ம். கீதம். 6-8's.

*Adoring God.* Genesis xxviii. 16, 17.

க. தெய்வ சன்னிதானஞ் சேர்ந்து,
பயபத்தியோடே போற்றி,
அவர் வல்லரென்று கண்டு,
சொல்லுவோமே, அவர் கீர்த்தி.
அருள் திடம்பெற்ற சுத்தர்,
அஞ்சுவாரோ, தேவ நேசர்.

உ. விண்ணோர் எல்லாம் போற்றுந்தேவன்.
இங்கே யல்லோதோன்றி நிற்பர்?
சர்வலோகம் ஆளும் ராசன்
வானோர் செய்யுந்துதி கேட்பர்.
ஆயின் எங்கள் அற்ப கீதம்
கேட்பீரல்லோ மகாதெய்வம்?

ங. விட்டோம் செல்வம். இன்பம், கீர்த்தி,
நீரே செல்வம், நீரே இன்பம்:
எங்கள் தேகம், பொருள், ஆவி,
உமதாக ஏற்றுக்கொள்ளும்.
எங்கும் ஆள வல்ல கர்த்தர்,
யாரும் போற்றத்தக்கச்செல்வர்.

ச. ஏசுநாதர்! எங்கள் துதி,
தூபமாக ஏற்றுக்கொள்ளும்;

நாம் அமைந்துமக்கிணங்கி,
நடக்கும்படி அருளும்.
எங்கள் நெஞ்சமென்னும்பலி
நோக்கிக்கொள்ளுந்தயா நிதி!

19. ௰௯-ம். கீதம். 6-8's.

*The God of all grace.*

க. கிருபையுள்ளபிதாவே!
உமது தயை தேடவே
வந்தோமென்றதாய்த்தோன்றிலும்,
உமக்குமாத்ரந்தெரியும்
வஞ்சகரையுந் தேவரீர்.
நல்லவரையும் அறிவீர்.

உ. எங்களிலே பேதமானல்,
அதுமது கிருபையால்.
எங்களிற் சுத்த விருப்பம்
இருந்தால், தெய்வச்செய்கையாம்.
இப்போ, தெங்களெல்லாரையும்
கூப்பிட்டு, மனந்திருப்பும்.

௩. பாவிகள் தங்களைத்தாமே
அறிவதற்கு, இன்றைக்கே
பாவத்தின் பாரங் காண்பித்து
செபிக்க எடுத்து விட்டு,
கெட்டசுபாவ நிமித்தம்
மனதைத் துக்கப்படுத்தும்.

ச. மேய்ப்பராய் ஆடுகளை நீர்
மீட்டிரட்சிக்க மரித்தீர்;
உம்மைத்தாம் இவர்களுக்கும்
இப்பொழுதும் அறிவியும்:
ஒருவன் ஒழியாமலும்
எல்லார்க்கும் ரட்சிப்பைக்கொடும்.

20. உ௰-ம். கீதம். S. M.

*Call to worship God.*

க. சர்வலோக ஆதி
சுயம்பே, கடவுள்:
அவர் மகா திவ்ய கீர்த்தி
துதித்துப், பாடுங்கள்.

உ. ஆழி படைத்தனர்,
எல்லை நியமித்து;
கடல் தரையாவும். அவர்
காப்பார், வசம்செய்து.

௩. சுயவாக்கைக்கொண்டு
நம்மைச் சிருஷ்டித்த
தேவன் சன்னிதானஞ் சேர்ந்து,
வாருந், துதிசெய்ய.

ச. நிக்கிரகம் நீங்க
அனுக்ரகம் பெற்று;
வாரும் தெய்வ பத்தராக;
கேளும் அவர் வாக்கு.

21. உக-ம். கீதம். C. M.

*Come, let us join our cheerful songs.*

க. பேரின்பத்தில் மூழ்குந்தூதர்!
என்றும் வாழ்ந்திருக்கும்
கோடாகோடி மோட்ச வாசர்!
கூடிப், பாடவாரும்.

S. M.

உ. மீட்பருக்கு முடிசூட்டி,
போற்றுவார்கள் அங்கே:
ஏசு என்னும் பாவப்பலி,
மீட்கும் நம்மை, இங்கே.

ந. கனம் பெலம் செயம் கீர்த்தி
உள்ள தெய்வ ஏசு!
மண் விண் எல்லாம் செய்யும் துதி.
கேட்பீர், தயை செய்து.

ச. விண்ணையாளும் ஆட்டுக்குட்டி
தன்னைத்துதிசெய்ய,
லோகம் எங்கும் கூடிப்பாடி,
கீர்த்தி சொல்வதாக.

22. உஉ-ம். கீதம். C. M.

*Coming to Jesus.* Rev. iii, 20.

க. பத்தரோ! கிறிஸ்தைத்துதிக்க
ஒன்றாகப் பாடுங்கள்.

அவர் கிருபை காண்பிக்க,
மகிழ்ந்து சொல்லுங்கள்.

௨. பாவியின் மனக்கதவை
தட்டுவர் அவர் தாம்,
ஆரும் அவரால் ரட்சிப்பை
அடைந்து கொள்ளலாம்.

௩. உமது சத்தத்தைக்கேட்டு
பாவத்தில் நீங்குவோம்,
உட்பிரவேசியுமென்று
உம்மை வேண்டுகிறோம்.

௪. சீக்கிரம் உட்பிரவேசித்து,
என்றும் நீங்காதிரும்:
எங்களில் அன்பை மிகுத்து
திருத்தியாய்த்தாரும்.

23. ௨௩-ம். கீதம். 10's & 11's.

*Rejoicing in Christ.*

௧. வானோரோடென்றும் மகிழ்ந்துபாடி,
இயேசுவின் பலம் நேசமும்பற்றி,
கொண்டாடித்துதித்துச்சத்தமிடுங்கள்:
ரட்சிப்புங்களுக்குத்தந்தாரென்னுங்கள்.

௨. துன்பந்துக்கமுமன்றாய் நீக்கினீர்
தேவாறுதலும் எங்களுக்குத்தந்தீர்:

நீர் ஆவியால் பலஞ்சந்தோஷத்தையும்.
இட்டீர், ஆதலாலும் சம்பூரணமும்.

௩. தேவனைச்சலும் மகிழ்ச்சியென்றும்
அசையாமல் நிற்கும் ஞானபாக்கியமும்.
எங்கள் ஏசுவினால் இப்பூமியிலும்
மோட்சத்தின்வாழ்குதல்துவக்கப்படும்.

௪. லோகசேற்றிலே பன்றிகளைப்போல்
தீயோர்புரண்டே எங்களை அழைத்தால்
சேராமலிருப்போம: அவர்கள் செல்வம்
சந்தோஷம் நகைப்பும் எல்லாம் வியர்த்தம்.

௫. நாங்கள் மனதாய் அதேல்லாம் விட்டு,
புதுச்சிருட்டிகளாய்த்திருப்பப்பட்டு,
ஏசுவின்மேல் நம்பி அன்பினிது
அதிகமாய் வாங்கி வாழக்கடவது.

24. உ௪-ம். கீதம். S. M.

"*Lo! I am with you always,*" Mat. xxviii 20. *&c.*

.க நாங்கள் நோக்கும் ஏசு!
சொன்னபடி வாரும்.
இங்கே வந்தோம் உம்மைச்சேர்ந்து,
பிரசன்னப்படும்.
எங்களுக்குச்செய்யும்,
உம்மாலாகும் ரட்சை.
தாரும் சீவன், சோஸ்தம், சாந்தம்,
நித்திய நேசம், இவை.

உ, இஷ்டம் அகங்காரம்,
சேரோம் நாங்கள் இனி.
லோகமாயை நீங்கிவிட்டோம்,
பரவசமாகி.
தேவர் தந்த அருள்
மோட்சசெல்வம் இவை
பெறும்படி வந்தோம்: நாங்கள்
நாடுவோமே உம்மை.

௩. பிரசன்ன தெய்வம்!
தெரிவியும் உம்மை:
பூரித்திடும் நெஞ்சில் வாரும்:
தாரும் தெய்வ சிந்தை;
உயிர்ப்பிக்கும் சத்தம்!
பாவச்சாவை நீக்கி,
நிறையன்பு நாடும், உள்ளம்
பூர்ணமாக்கும் ஏவி.

## 25. உரு-ம். கீதம். C. M.

*The presence of God desired.*

க. கர்த்தாவே இந்த நேரத்தில்
சமீபமாயிரும்,
இங்கும்முடைய கோவிலில்
பிரகாசமாயிரும்.

உ. இங்கும்முடைய வார்த்தையை
பிரசங்கஞ் செய்கையில்,

தேவாவி எங்கள் நெஞ்சத்தை
நிரப்ப கேட்கையில்,

ரு. வேண்டுதல் கேளுங் கர்த்தரோ!
கடாட்சமாயிரும்,
அன்பினால் எங்கள் நெஞ்சமே
நிறைய செய்திடும்.

ச. கடைசியில் அநேகம்பேர்
அங்கே குணப்பட்டேன்,
என்றே அறிக்கை சொல்லுவார்
இருக்கச்செய்யுமேன்.

ரு. இதுமக்கும், சுதனுக்கும்,
தேவாவிக்கும், எல்லா
தலங்களிலும் என்றைக்கும்
புகாழாம் அல்லவா?

C. M. 26. உசு-ம். கீதம். C. M.

*Praise to God.*

க. மனித புத்திரர்களே!
மனோவாக்குடனே
கர்த்தாவை நோக்கிப்பாடுங்கள்,
சந்தோஷத்துடனே.

உ. தேவ வணக்கத்தோடேயும்
வந்து மன்றுடுங்கள்:

மிகுந்த கருத்தோடேயும்
பயந்து சேருங்கள்,

ந. பிதாக், குமாரன் ஆவியும்
எங்களைச் சிஷ்டித்தார்,
சருவ பூதலத்தையும்
நடத்தி வருவார்.

ச. சரீரத்துக் கடுத்ததை
நமக்குக்கொடுக்கிறார்,
ஆத்துமாவுக்கடுத்ததை
அருளிக்காட்டுகிறார்.

ரு. சந்தோஷமுள்ள தோழரே,
பிதாவைப் பாடுங்கள் :
ரட்சிக்கப்பட்ட மாந்தரே,
ஏசுவைத் தேடுங்கள்.

சு. ஆத்துமாவைத் தன் வாக்கினால்
வெளிச்சமாக்குவார் :
சரீரத்தை தன் கரத்தால்
நன்றாகக் காக்கிறார்.

27. உஎ-ம். கீதம். L. M.

*The same.*

க. பூலோகத்தாரெல்லாருமே
கர்த்தாவிற் களிகூருங்கள் ;
மகிழ்வாராதனையையே
செலுத்தப்பாடி வாருங்கள்.

௨. ஏகோவாவே மெய்த்தேவனும்,
நாமல்ல, அவர் சிஷ்டித்தார்:
நாம் மக்கள், அவர் பிதாவாம்,
நாம் மந்தை, யவர் மேய்ப்பனுர்.

௩. கெம்பீரித்தவர் வாசலை
கடந்து போய்ப்பிரகாரத்துள்,
சிறந்த அவர் நாமத்தை
கொண்டாடிப்புகழ் செய்யுங்கள்.

௪. கர்த்தாவே நல்லோர் என்றைக்கும்
விளங்குமவர் மெய்மையே,
சனங்களாமனைவர்க்கும்
இருக்குமவர் தயையே.

28. உ௮-ம். கீதம். C. M.

*The same.*

*"I will praise thee, O Lord with my whole heart."*

Ps. IX 1.

(க-ம். பங்கு.)

௧. நான் தேவரீரை கர்த்தரோ
துதிப்பேன் அடியேன்,
எல்லாரின் முன்னும் உம்மையே
அறிக்கை பண்ணுவேன்.

௨. ஆ! எந்தப்பாக்கியங்களும்
உம்மால்தான் வருதே ;

உண்டான எந்தநன்மைக்கும்
ஊற்றானவர் நீரே.

௩. உண்டான நன்மை யாவையும்
நீர் தந்தீர் கர்த்தரே!
உம்மாலொழிய எதுவும்
உண்டாக்ககூடாதே.

௪. ஆ! இதெல்லாந்தயாபரா
நீர் செய்யுஞ் செய்கையே,
நீர் எங்களைத்தற்காக்கிற
அன்புள்ள கர்த்தரே!

(உ-ம். பங்கு.)

க. உம்மாலே வருஷாந்தரம்,
அல்லோபிழைக்கிறோம்:
உம்மாலே நாங்கள் விக்கினம்
வந்தாலுந்தப்பினோம்.

உ. பாவிகளான எங்களைச்
சுறுக்காய் த்தண்டியீர்;
உம்முடவரின் பாவத்தை
யன்பாய் மன்னிக்கிறீர்.

௩. இக்கட்டில் நாங்கள் கூப்பிட்டால்,
நீர் கேட்டிரங்குவீர்;
நீர் எங்களை மாதயவால்
ரட்சித்து த்தாங்கிறீர்.

ச. அடியார் அழுகைக்கெல்லாஞ்,
சேவிகொடுத்து, நீர்
எங்கள் கண்ணீர்களை யெல்லாம்
எண்ணியிருக்கிறீர்,

ரு. அனந்தவாழ்வையும் இனி
கொடுக்கப்போறீரோ:
அடியாருக்கு அக்கதி
அப்போதுண்டாகுமே.

(ரூ-ம். பங்கு.)

க. ஆ! களிகூர்ந்து பூரித்து
மகிழ், என்மனதே!
பராபரன்தான் உனது
அனந்த பங்காமே.

உ. உன்நெஞ்சு ராவும் பகலுந்
துக்கிப்பதேன்ன? நீ
உன்கவலை யனைத்தையுங்
கர்த்தாவுக்கோப்புவி.

ரு. உன் சிறுவயதுமுதல்
பிராமரித்தாரோ,
கர்த்தாவால் வெகுமோசங்கள்
விலக்கப்பட்டதே.

ச. கர்த்தாவின் ஆளுகையெல்லாந்
தப்பற்றதல்லவோ?

ஆம் அவர் செய்கிறதெல்லாம்
நன்ருய் முடியாதோ?

ரு. ஆகையினுல் கர்த்தாவுக்கு
நீ பிள்ளைப்பத்தியாய்
எப்போதுங்கீழ்ப்படிந்திரு,
அப்போதே நீவாழ்வாய்.

29. உகூ-ம். கீதம். L. M.

*Praise to God.*

க. விஸ்தாரலோக மக்களே,
கர்த்தாவின் முன் நடுங்குங்கள்;
அவர் பலத்த தேவனே,
அதை அறிந்து போற்றுங்கள்.

உ. நம்மால் துணை பெருதவர்
மண்ணுலே நம்மைச்செய்தாரே,
நம்மால் இகழப்பட்டவர்
அன்போடு நம்மைச்சேர்த்தாரே.

௩. அவர் நன்ருய் விசாரித்து,
எப்போதும் நோக்கிப்பார்த்தாரே,
மிகுந்த இந்த நன்மைக்கு
என்னத்தைச்செய்வோம் மாந்தரே?

௪. பரத்தில் சத்தம் செல்லவும்
களித்துப்போற்றிப்பாடுவோம்,

தராதலத்தில் யாவரும்
துதிக்க ஏகமாகுவோம்.

ரு. நீர் எங்கும் ஆளும் வேந்தரோ,
நீர் செய்த அன்பு என்றுமாம்,
இக்காலம் போன பின்னுமே
தேய்வீக உண்மை மேன்மையாம்.

## கடவுள்.

### உ-ம் பிரிவு.

### திரியத்துவம்.

30. ௩0-ம். கீதம். 2-6's, & 4-7's.

*The Trinity in unity.*

௧. தேவர் திரியேகர்;
சர்வம் ஆள வல்லர்;
பரஞ்சோதி சன்னிதி,
சுத்தர், நித்தம்வாழுவார்.
தூதர், உள்ளம், உருகி,
தேசுக் கடல் மூழ்குவார்.

௨. தேய்வ நேசம் பாடி,
முத்தரின்பம் கூடி,
தேவைச்சேர்ந்து வணங்கி,
தாழ்ந்து பாடி வியந்து,
"மாசுத்தர்" என்று சொல்லி,
முத்தி அடைவதேன்று.

௩. சுதன் ஆவி தோற்றும்
பிதா! தாழ்ந்து வாரும்.
திரியேக, மகா வல்லர்!
உம்மைக்காண அருளி,
நித்தம் வாழும் மாதேவர்!
நெஞ்சிற் சேரும், தழுவி.

31. ௩௧-ம். கீதம். 4-6's, 2-8's.

*A song of praise to the blessed Trinity.*

க. இகம் மேவும் நன்மை
பரம் நிற்கும் செல்வம்
எண்ணித், தந்த ஈவை,
துதிப்பேனே, என்றும்.
நரர் செய்த பாவ மூலம்,
நித்ய சுதற்றந்தார், தெய்வம்.

உ. தெய்வச் சுதனுக்கும்
ஆகும், நித்த ஸ்துதி.
விட்டார், அவர், ரத்தம்;
மீட்டார், பாவம், போக்கி;
இப்போ வாழ்ந்து ஆண்டு நிற்பர்,
தம்மால் வந்த பலன் காண்பர்.

௩. தேவாவிக்கு, ஸ்துதி,
நித்தம், சொல்லப்படும்:
அவர் செய்தாற்சிருஷ்டி,
எல்லாம் நவமாகும்.

அவர் செய்கை தரும் பூரணம்;
ஈவார் என்றும் மனோரம்யம்.

௪. [சர்வ வல்லர்! யாரும்
உம்மைத்துதி செய்வர்;
மனோதீதமாகும்.
அபின்னத்ரியேகர்!
யுத்தி செல்லா இடம் எங்கே,
பத்தி நேசம் செல்லும் அங்கே.]

32. ௩௨-ம். கீதம். L. M.

*The same.*

௧. எல்லாம் படைத்த நமது
தயாபர பிதாவுக்கு,
படைப்பின் செய்கைக்காகவே,
இஸ்தோத்திரம் உண்டாகவே.

௨. இவ்வீனருக்கு மீட்பரும்
கர்த்தாவுமாஞ் சுதனுக்கும்.
ரட்சிப்பின் செய்கைக்காகவே,
இஸ்தோத்திர முண்டாகவே.

௩. சுதனிடத்தில் நேஞ்சத்தை
திருப்பி அதில் நம்பிக்கை
உண்டாகச்செய்யும் ஆவிக்கே,
இஸ்தோத்திர முண்டாகவே.

௪. படைப்பு, மீட்பு, சுத்தத்தை
நடத்தும் மா திரியேகனை!

சிருஷ்டியாவும், அன்போடு,
புகழ்செலுத்தத்தக்கது.

33. ௩௩-ம். கீதம். P. M.

*The same.*

க. தேவன்புக்காக உன்னத
கர்த்தாவுக்குப் புகழ்ச்சி;
என்பாவக்கேட்டை நீக்கின
அருள், மகா திரட்சி,
உலகில் சமாதானமும்
நரர்களுக்கு நன்மையும்
உண்டாகும் படிசெய்தீர்.

உ. மாறுமல் ஆண்டிருக்கிற
மகத்துவப் பிதாவே!
துதியோடும்மைக்கும்பிட்
பணிகிறோம் கர்த்தாவே:
அளவில்லாப்பலனாய்
நீர் நினைத்தயாவுஞ் செய்கிறீர்,
மாபாக்கியர் அடியார்.

௩. ஆ! ஏசு தேவமைந்தனே!
ஓர் பலியைச்செலுத்தி
கேட்டோரை மீட்டமீட்பரே!
மாசற்ற ஆட்டுக்குட்டி!
மா கர்த்தரே! தயாபரா:
அடியார் செபங்கேட்டெல்லா
சபைக்கும், நீர் இரங்கும்:

௪. மெய்யாகத்தேற்றும் உன்னத
நல்லாவியே! இறங்கும்
பூமியிற் கிறிஸ்து சகித்த
மா கஸ்தயின் நிமித்தம்,
மீட்டோரை சாத்தான்கண்ணியில்
விழாமற்காத்து, துன்பத்தில்
களிக்கப்பண்ணும், என்றும்.

34. ௩௪-ம். கீதம். C. M.

*The same.*

௧. வான பிதாவே! தொண்டரை
ரட்சித்தருள் செய்யும்;
முடியும் மட்டும் எங்களை
காத்துத், தயை வையும்.

௨. நீர் அன்பாய்ச்சிஷ்டித்தோர்களை
கைதூக்கிக், காத்திடும்:
மோட்சத்திற் களிப்பாய் உம்மை
துதிக்கச், செய்திடும்.

௩. குமாரனே! நாங்கள் உம்மை
பார்த்தோமாகில், முத்தி:
பத்தர்களுக்குக், கிருபை
சம்பூரணசித்தி.

௪. தேவாவியே! பிதாவையும்
குமாரனையும், நீர்

வெளிப்படுத்தி, அன்பையும்
அருளக்கடவீர்.

௩. மனுவாக்கெட்டாக்களிப்பை
நிசப்படுத்துவீர்:
ஆனந்த சமாதானத்தை,
பரத்தில் தருவீர்.

35. ௩௫-ம். கீதம். P. M.

*The same.*

௧. வாரும், மா தேவனே!
உம்மைத்துதிக்கவே,
எம்மை ஏவும்:
உமக்கே வல்லமை:
உமக்கே நன்றியை,
உமக்கே துதியை,
செலுத்துவோம்.

௨. ஆதியில் வார்த்தையே
நீர்தான், என் ஏசுவே!
தயை தாரும்:
ஆசீர்வதிக்கவும்,
நம்மைப் போதிக்கவும்,
உம்மைப் போலாக்கவும்,
நம்மோடிரும்.

௩. ஆ! சுத்த ஆவியும்,
நாம் உமதாலயம்,

நெஞ்சந்தானே ;
இங்கும் இருக்கிறீர்
உள்ளத்தைப் பார்க்கிறீர்
உண்மை விரும்புவீர்
சுத்தாவியே!

ச. ஏக த்ரியேகரோ!
ஆனந்த சீவனே,
உம்மாலே யாம் ;
வானோர் பூவோர்களும்,
இகபரத்திலும்,
தோத்திரஞ் செய்வதும்,
மோட்சமே யாம்.

36. ௩௬-ம். கீதம். 7's.

*Gloria Patri.*

க. யாரும் அஞ்சும் பிதாவே!
தந்தை போன்ற சுதனே!
நித்ய சுத்த ஆவி! நீர்
என்றும் வாழக்கடவீர்.

உ. ஏகத்வத்ரியேகரோ!
வாழ்த்துவோம் நாம் உம்மையே ;
மண் விண் யாவும், நித்தமும்,
ஸ்வாமி! உம்மைத்துதிக்கும்.

37. ௩௭-ம். கீதம். 6-7-8.

*Praise to the Trinity.*

௧. பிதாவே! தேகம் ஆவியாவும்
உம்மால் அல்லோ உண்டாயிற்று
சரீர ஈவாம் ஊன்றுந்தாவும்
நீர் என்னை மோட்சவாழ்வுக்குத்
தெரிந்து கொண்ட அன்புமே
மா உபகாரங் கர்த்தரோ.

௨. ஆ யேசு சுவாமி! நீர் அன்பாலே
எல்லாப்பிசாசுகளுட
கைக்கென்னை சாவின் நோவினாலே
விலக்கி நீங்கலாக்கின
ரட்சிப்புக்காக என்றைக்கும்
என் ஆவி உம்மைப்போற்றவும்

௩. மெய்யாகத்தேற்றுந் தெய்வ ஆவி
ஆ! உமக்குப்புகழ்ச்சியே
உம்மாலே இந்தக் கெட்டபாவி
ரட்சிப்புக்கு உள்ளானேனே
இங்கென்னில் நன்மை யேதுண்டே
அதும்முடைய பயிரல்லோ?

38. ௩௮-ம். கீதம். P. M.

*The same.*

௧. எல்லாஞ்சிஷ்டித்த நமது
தயாபர பிதாவுக்கு

அனந்தகாலமாக
அல்லேலூயா மகத்துவம்
பலன் துதி தோத்திரம்
உண்டாயிருப்பதாக
பார்ப்பார் காப்பார்
வல்லமையுங் கிருபையும் அன்பும் எங்கும்
அவர் செய்கையால் விளங்கும்.

உ. இந்நீசருக்கு மீட்பரும்
பத்தாவுமாஞ் சுதனுக்கும்
ரட்சிப்பின் அன்புக்காக
அல்லேலூயா புகழ்ச்சியும்
அனந்தநாசரிக்கமும்
உண்டாயிருப்பதாக
பாவஞ் சாபம் [றைக்கும்
எந்தத் தீங்கும் அத்தால் நீங்கும் என்றேன்
பாக்கியம் எல்லாங்கிடைக்கும்.

௩. மனந்திருப்பி எங்களை
பத்தாவாம் ஏசுவினண்டை
யழைத்து நேத்தியாக
சிங்காரிக்குந் தேய்வாவிக்கும்
அல்லேலூயா புகழ்ச்சியும்
வணக்கமும் உண்டாக
வார பார
வாழ்வினுலுஞ் செல்வத்தாலுந்தேற்றுகிறார்
அதின் முன் ருசி யீகிறார்.

ச. எல்லாச்சிஷ்டிகளாலேயும்
பிதா குமாரன் ஆவிக்கும்
அனந்த காலமாக
அல்லேலூயா மகத்துவம்
பலன் துதி தோத்திரம்
உண்டாயிருப்பதாக
ஆமன் ஆமன்
அவர் அந்தம் அருமந்தம் பரிசுத்தம்
பரிசுத்தம் பரிசுத்தம்.

39. ௲௯-ம். கீதம். P. M.

*The same.*

க. மகத்துவமும் நீதியும்
மா கிருபையுமான
உன்னதமான தேவனும்
ரட்சிக்கப்பலனான
பராபரனுமாங் கர்த்தர்
ஓர் வஸ்துவும் மூன்றுளும்.
இதை தாந்தான் வெளிப்பட
பண்ணுவிட்டால் என்றைக்கும்
மனோவாக்குக்கெட்டாது.

உ. பரத்தில்தாங்கி நீதியர்
சபையிலும் உலாவி
எங்குமிருக்கிற இவர்
பிதாகுமாரன் ஆவி,

இப்பரிசுத்த நாமமாய்
விளங்கிய அன்புள்ள
திரியேகர் கோடாகோடியாய்
இருக்குமெங்குமுள்ள
சேனைகளுக்குங் கர்த்தர்.

ந. அனாதியில் பிதாவே
குமாரனார் பிறந்தார்
இவ்வுலகத்தில் இவரோ
நரரை மீட்கவந்தார்.
இருவராலும் ஆவியார்
பளிங்குக்கு ஒப்பான
ஆறுய்ப்புறப்படுகிறார்.
இம்மூவர் ஏகமான
மகத்துவமுடையோர்.

ச. பிதா குமாரன் ஆவியே!
திரியேக கர்த்தரான
உன்னதமான தெய்வமே!
ரட்சிக்கப்பலனான
ராசாதி ராசா உம்மண்டை
வந்தும்மை என்றும் பாட,
அடியார் நற்போராட்டத்தை
இவ்வுலகிற் போராட
அனுக்கிரகம் அளியும்

## அவரின் மகத்துவம்.

40. சயி-ம். கீதம். L. M.

PSALM CXVII.

க. மண்ணோர் யாரும், தெய்வஸ்துதி
செய்வாராக, ஒழிவின்றி;
சர்வ தேசர், மீட்பர் நாமம்.
போற்றக்கடவாரோ, எங்கும்.

உ. தேவருள் பெற்று மகிழ்ந்து,
கெம்பீர சத்தமெடுத்து;
அவ்வருள், யாரும் பெறவே,
விளங்கப்பண்ணும், மண்ணோரே!

ஈ. சர்வ சீவ தயாபரர்
பிதா, சுதன், ஆவி, இவர்:
மண் விண் எங்கும், இவர் நாமம்;
போற்றக்கடவாரோ, என்றும்.

41. சக-ம். கீதம். 7's.

*The voice of many angels.* REV. v. 11.

க. விண்ணோர்க்காதி தேவனே!
மண்ணோருக்கு நேசனே!
தேவ தேவே! அற்பர் நாம்,
உம்மை, நித்தம், போற்றுவோம்.

உ. சிரேஷ்ட தூதர், தேவனை
போற்றிச், சொல்வார் கீதத்தை:

எதிரொலியாக, நாம்
முழங்கி, ஆராதிப்போம்.

ங. நித்தம் வாழ்க, சுத்தரே!
மண் விண்யாவும் உம்மையே
போற்றும் என்று துதித்து
சொல்வார், உள்ளம் மகிழ்ந்து.

42. சஉ-ம். கீதம். C. M.

*Blessed be thy glorious name.* NEH. IX. 5.

க. தந்தை! தேவர் மகத்துவம்
காணப்படும், விண்ணில்:
எண்ணில்லாத தெய்வற்புதம்
தோற்றப்படும், மண்ணில்.

உ. சிஷ்டிதோறும், திருநாமம்
விளங்கும், பதிந்து:
அவை யெல்லாம், சாட்சி சொல்லும்,
தேவர் செய்தீரென்று.

ங. பாபிஷ்டோரை மீட்கும் வழி
உற்றுப்பார்க்குங்காலம்,
கோபம், நேசம், ஒன்றாய்க்கூடி
காணப்படும் இடம்.

ச. இதில், நீதி நேசம் சேர்ந்து
தெய்வீகம் விளங்கும்:

ரண்டில் எது முக்யமென்று
சொல்வதரிதாகும்.

ரு. தெய்வ ஆட்டுக்குட்டி மேன்மை,
போற்றுவார்கள், முத்தர்:
இம்மானுவேலின் நாமத்தை
இனிதராராதிப்பர்.

43. சரு-ம். கீதம். L. M.

*Greatness of God.*

க. அனாதியான கர்த்தரே!
தெய்வீக விண் ஸ்தலத்திலே,
ஆகாசத்துக்கு மேலாய், நீர்
மகிமையோடிருக்கிறீர்.

உ. முதற்சம்மனசு, உம்மை
தொழுகையில், தன் முகத்தை
சிறையால் மூடி அஞ்சுவார்;
சாஷ்டாங்கமாக விழுவார்.

ங. அப்படியானால் தூசியும்
சாம்பலுமான நாங்களும்,
உம்மை ஆராதிக்கும்போது
என்னத்தைச்செய்யத்தக்கது.

ச. சுவாமி! உமதுன்னத
கீர்த்தியைக்கேட்டோமொழிய,

தெய்வீக ஞானமானது
மனோவாக்கைக்கடக்குது.

ரு. ஸ்வாமி உன்னதவானத்தில்,
நாங்களோ தாழ்ந்த பூமியில்,
இருப்பதால், வணங்குவோம்;
மவுனத்தோடாராதிப்போம்.

44. சசு-ம். கீதம். 7's.

*God glorified by his works.* Ps. XIX.

க. கர்த்தரை, விண், மண், கடல்,
அங்கமர்ந்தசெந்துக்கள்
வாழ்த்தல் செய்ய, நெஞ்சமே
நீயும்வாழ்த்து அன்பிலே.

உ. விண்ணிலுள்ள சூரியன்,
அதைச்சேர்ந்த சந்திரன்,
மற்றச்சுடர்களெல்லாம்,
கர்த்தருக்கு வாழ்த்தலாம்.

ங. வானம் போலப்பூமியும்,
அதிலுள்ள வஸ்துவும்
கர்த்தரின் விவேகத்தை
காட்டுமென்று நீ நினை.

ச. நீயும் மா விசேஷமாய்
செய்யப்பட்டிருக்கிறாய்

தேகத்தோடே ஆத்துமா
மேன்மையுள்ள தல்லவா?

ரு. கர்த்தா செய்தவை எல்லாம்
மா விசேஷமேன்மையாம்.
அந்த மேன்மை சொல்லவே
மாந்தர் தக்கோர் அல்லவே.

சு. ஆகிலும் திராணிக்கே
தக்கதாக வாழ்த்தல் செய்,
நன்றியை எண்ணுதவன்
மோட்சத்துக்கபாத்திரன்

45. சரு-ம். கீதம். P. M.

*The majesty of God.* Ps. XCVI.

(க-ம். பங்கு.)

க. நீதியுந் தயவுங்
கிருபையுமாகிய
கர்த்தாவைப் பத்தியாலே
புதியபாட்டினுலே
துதித்துக் கொண்டிருங்கள்
கர்த்தாவின் முன் விழுங்கள்
தூரத்தாரோ உள்ளூராரோ
உங்களாலும் யாவராலும்
சுவாமிக்குத் துதிவர

உ. தோத்திரங் கீர்த்தனம்
அவர் பேருக்குத் தகும்

அவர் ஙட்சிப்பு நித்தம்
உலகிலே பிரசித்தம்
பண்ணப்படுவதாக
எச்சாதிக்கும் நன்ருகத்
தெய்வகையின் வல்லமையின்
கருமங்கள் அற்புதங்கள்
விவரிக்கப் படவும்.

ங. ஆண்டவர் ஒருத்தர்
மகிமை யுடையவர்
அவருக்கே புகழ்ச்சி
வீண் தேவர்கள் திரட்சி
எல்லாம் மகா அழுக்கு
பேய்வேலையாம் அதுக்குச்
சீவனில்லை மூச்சுமில்லை
வானத்தையும் பூமியையுங்
கர்த்தரோ உண்டாக்கினர்.

ச. மகிமை யவரைச்
சுற்றிலும் பிரகாசிக்கும்
நரரோ நீங்கள் வந்து
கர்த்தாவுக்குப் பயந்து
கர்த்தாவைத் தாழ்மையோடும்
மகாவணக்கத்தோடுங்
கவனித்து த்தோத்திரித்து
மனதாலும் வாயினுலும்
போற்றிக்கொண்டிருக்கவும்.

(உ-ம். பங்கு.)

க. நமது சுவாமிக்குத்
தோத்திரங்களென்கிற
பலிகளைச் செலுத்தித்
துன்மார்க்கத்தை நிறுத்தி
பணிந்து நல்வழியில்
போய் அவர் சன்னதியிற்
அதிருங்கள் ; சீர்ப்படுங்கள்.
இ யாவும் அந்தமாய் உயர்ந்த
ஆண்டவரைச் சேவிக்க.

உ. அவர்தான் எசமான்
அவர் கையிலே செங்கோல்
உண்டானபடியாலே
உலகை நியாயத்தாலே
விசாரித்து த்திருத்தி
சீராய் நிலைப்படுத்தி
ஆகாக்கண்ணி நீங்கப்பண்ணி,
நியாயந் தீர்ப்பார் நம்மை மீட்பார்
என்று எங்குஞ் சொல்லுங்கள்.

ந. உன்னத விண்ணுட
மண்டலஞ் சந்தோஷித்து
இஸ்தோத்தரிப்பதாக
புவியனைத்துமாக
கர்த்தாவின் முன்மகிழ்ந்து
சந்தோஷத்தால் அதிர்ந்து
களிகூர ஆழங்கூட

அசைவோடுஞ் சத்தத்தோடும்
பூரிக்கக்கடவது.

ச. பயிரிடும் வயலும்
சகலவெளிகளும்,
அதுகளிலுண்டான
அனைத்தும் பெரிதான
மகிழ்ச்சியால் நிறைய
வனங்களினுடைய
காட்டிலுள்ள பச்சையுள்ள
எக்கிளையும் எவ்விலையும்
அவர் முன்மகிழவும்.

ரு. நியாயமாய் நீதியாய்
லோகத்தை விசாரிக்க
வரும் உன்னதமான
இராசாஇயேசுவான
பலனுடைய மீட்பர்;
ஆம் அவர் நியாயந் தீர்ப்பர்!
அவரண்டை சேர்ந்த மந்தை
அவரோடே பூரிப்போடே
வாழ்வோம், அல்லேலூயா!

46. சகூ-ம். கீதம். 7's, & 6's.

"*Holy, Holy, Holy, is the Lord &c.*" Isa. vi. 3.

க. மோட்ச வழி அருள
சித்தங்கொள்ளும் தெய்வம்

தன்னைத், துதி புரிய,
எங்கும் என்றுந்தகும்.
உள்ள கீர்த்தி சொல்லுமே
சுத்தர்! சுத்தர்! என்று;
ஏக சிந்தையுடனே,
துதி செய்யும், வந்து.

உ. ஒளி விளங்குஞ்சான்றோர்,
இனிதாகப்பாடி,
ஒழியாமல் துதிப்பார்
உம்மை, அழிவின்றி.
திரியேகரிடமாய்
சுத்தசுரர், அஞ்சி
நின்று விழுந்து தாழ்வோராய்
வாழ்வார் என்றும், போற்றி,

ங. சுதற்றந்த பிதாவே!
உம்மாற் களிகூர்ந்து,
தயை சத்ய ஏசுவே!
சுத்தர், உம்மைச்சார்ந்து,
சாந்தஞ் செய்யும் ஆவியே!
உம்மை யெல்லாம் பற்றி,
மோட்சஞ் சேருமட்டுமே
துதிப்பார், கொண்டாடி.

47. சஎ-ம். கீதம். L. M.

*"God so loved the world."* John. iii. 16.

க. பிதாவே! பாவிகளுக்காய்
  ஏக சுதனைக்கொடுத்தீர்
கிருபையோடவ்வளவாய்
  எல்லாருக்குமிரங்கினீர்.

உ. உமது திவ்ய இரக்கம்
  அளவில்லாதிருக்குது:
நாங்கள் தகும் இஸ்தோத்திரம்
  செலுத்திடவுங்கூடாது.

ங. எல்லார் பேரிலும் இரங்கி
  ஒருவனையும் மறவீர்
பாவமுழுதும் விலக்கி,
  இரட்சிக்கச்சித்தமானீர்.

கடவுளின் இலட்சணங்கள்.

48. சஅ-ம். கீதம். P. M.

*The attributes of God.*

(க-ம். பங்கு.)

*Incomprehensibility and Eternity.*

Job. xi. 7. 12v.

க. ஆராய் வில்லாத ஆழமே
என் மனோவாக்குக்கு எட்டாத,
உன்னதமான வஸ்துவே!
நீர் மட்டும் அளவுமில்லாத

சமுத்திரம் பராபரா,
என்மேலே கிருபைபுரியும்.
நான் ஞானமற்றேன், உம்முட
வெளிச்சத்தை என்மேல் விரியும்.
நீர் ஆரோன்றேன்னுட
உட்கண்ணுல் உயர
நான் பார்த்துங்கூச்சப்பார்வையாமே,
என்புத்தியுமக்கு
முன்பாய்க்கலையுது
நீர் ஆதியந்தமற்றேராமே.

உ. அனுதியான தேவரீர்
இகபரமும் எந்த நாளும்
உண்டாகும் முன்னிருக்கிறீர்.
நீர் ஆளுமேன்மை ஒருக்காலும்
முடியாதேன்றேன்றைக்கும் நீர்
பலன் மகத்துவமுமுள்ளோர்.
நீர் என்றும் ஒருகண்டசீர்,
நீர் முடிவற்ற சீவனுள்ளோர்.
நீர் குறையற்றவர்,
நீர் மாறுதரசர்,
சுவாசமுள்ள சீவன் யாவும்
நீர் பிராணன்தந்தால்,
உண்டாகி, அதினுல்
பிழைத்துக்கோண்டசைந்துலாவும்.

(உ-ம். பங்கு.) P. M.

*Omnipotence and Omniscience.* Isa. lvii. 15.

க. சருவத்துக்கும் வல்லோரோ,
உம்மால் எல்லாம் உண்டாயிருக்கும்,
தற்செயலால் ஒன்றில்லையே.
எவர் செவிக்குங்கண்களுக்கும்
நேராகும் எந்தச்சிஷ்ட்டியும்,
விண்மண்ணின் எல்லையில் அடங்கும்
கண்டிப்புங்கண்டிப்பற்றதும்
நீர் தங்களைச் சிஷ்ட்டித்தோரோன்கும்.
கூடாதாகிய
அனைத்தும் உம்முட
சொல்லால் ஒரே நிமையில் ஆமே.
ஒப்பற்ற உமது
மகா பலத்துக்கு
நீர் ஆளும் ஞானமும் ஒப்பாமே.

உ. விண் உமதாசனங், கர்த்தர்,
மண் உம்முட பாதபடியும்.
நரரின் ஞான உம்முட
முன்னே வீண்மாய்கையாய் அழியும்.
அடியார் நினைவுமக்கு
எல்லாந்தெரியும் ; லோகமெங்கும்
அடக்கமானதுமது
கண்பார்வைக்கொளிவாய் விளங்கும்
நீர் வாசம் பண்ணிய
வெளிச்சம் மப்பில்லாப்

பிரகாசமான காந்திதானே.
யாதோருராயனும்
இங்குமக் கேதிலும்
நிகரோ வல்லபலவானே.

௩. எல்லாப்பரத்தின் சேனைக்கும்
நீர் கர்த்தர், தேவரீர் முன்பாக
கனத்த தீழ்ப்பும் வெட்கமும்
போய்த்தேவருக்குண்டாவதாக.
தூதர்கள் சேனையுமக்கு
முன்பாக பயத்தோடே நிற்கும்,
முகங்கள் மூடி, உமது
மகத்துவங்களைத் துதிக்கும்.
விண் மண்ணும் உமக்குப்
பண் செய்ததிருது
கர்த்தாவே மேலுங் கீழுஞ் சுற்றும்
உண்டான சகல
சிஷ்ட்டிப்பும் உம்முட
புகழ்ச்சியை வெளிப்படுத்தும்.

(௩-ம். பங்கு.) P. M.

*Benevolence.* Exod. xxxiv. 6v.

க. ஆ! எல்லையற்ற கர்த்தரே,
அநேக லட்ச உலகங்கள்
இருந்தும், உம்மைக் கொள்ளாதே
நீர் சகலநட்சத்திரங்கள்
இருக்கும் உயரத்திலும்.

உயர்ந்தோர், உமக்கு முன்பாக
எல்லாந் தூள் பரியந்தமும்
பணிந்த பிரகாரமாகக்
குனியத்தக்கதே.
ஆனால் மனதிலே
நொறுங்கப்பட்டவர்களைவர்
விண்ணப்பம் பண்ணினால்
நீர் தரும் சோதியால்
குளிர்ந்த ஆறுதல் அடைவர்.

உ. நீர் செய்யுஞ் செய்கைதிட்டமே,
நீர் குறையற்ற நீதியுள்ளோர்.
நீர் மனிதரின் பேரிலே
மிகுந்த பொறுமையுமுள்ளோர்
நீர் கிருபையுந் தயவும்
இரக்கமும் பெருத்தோராமே.
ஆம்! உமதுண்மை நித்தமும்
அடியார் பேரில்புதிதாமே.
நிமை ஒவ்வொன்றுக்கும்
அடியார் உமது
தயைக்கும் உபகாரத்துக்கும்
பங்குள்ளோரல்லவோ,
ஊற்றும் உம்மாலல்லோ
எல்லாஞ் சுரந்து கொண்டிருக்கும்?

(ச—ம். பங்கு.) P. M.

*Mercy and Justice.* Ps. CXLV. 15. 20.

க. எல்லாத்தையுமுண்டாக்கின
நரதயாபர பிதாவே,
நல்லீவெல்லாம் அன்பாகிய
உம்மாலுண்டானது, கர்த்தாவே.
நீர் சீவப் பிராணியாவுக்கும்
அதினதின் ஆகார மீகிறீர்,
குறைவற ஒவ்வொன்றையும்
பராமரித்து வருகிறீர்
நீர் பூமிக்கேற்றின
விளக்குச்சகல
நல்லார் பொல்லாருக்கும் விளங்கும்.
நீர்தருமாரியுஞ்
சன்மார்க்கர்பேரிலும்
துன்மார்க்கர்பேரிலும் இறங்கும்.

உ. இதற்குதக்கதோத்திரம்
செலுத்த எவன் நெஞ்சும் வாயும்
போதாது சகல விடம்
நீர் செய்யும் உபகாரமாயும்,
அடியார் தேவரீருக்குக்
கொடுக்கதக்கதென்ன உண்டு?
அனைத்தும் உம்முடையது
ஆர் உமக்குப் பயந்திருந்து
பணிந்திருப்பானோ
அவன்மேல் நீரல்லோ

P. M.
15. 20.

தயைபெருத்தோராயிருப்பீர்.
அடியார் கையில்,
நீர் ஏதாகிலும் பெறீர்,
அடியாருக்கு நீரோகொடுப்பீர்.

ரு. சன்மார்க்கருக்குத் தயவாய்
மாப் பலனையுந் தருகிறீர்:
ஆனல் பொல்லாரைக் கோபமாய் ;
தண்டித் தழித்து வருகிறீர்.
பரத்தின் சேனை நித்தமே
கர்த்தாவாம் உம்மையே கொண்டாடி :
ஆ சுத்த சுத்த சுத்தரோ!
என்றோய் வில்லா துதியாய்ப் பாடி,
பணிந்துமக்கு
கனஞ் செலுத்துது
முடிவில்லாத காலத்திற்கும்
ராச்சியம், பலம்,
கனம் மகத்துவம்,
துதியும் உமக்கேயிருக்கும்.

49. சகூ-ம். கீதம். 8, 7, & 4.

*Omniscience of God.* Ps. cxxxix.

க. யாவரையும் யாவற்றையும்,
ஸ்வாமி! நன்றாய் அறிவீர்,
ஆழத்தையும் இருளையும்
தேவரீரோ நோக்குவீர் ;
மறைபொருள்
நன்றாய்த் தோன்ற ப்பண்ணுவீர்.

௨. ஆத்துமாவின் சிந்தனைகள்
தூரத்தில் நீர் பார்க்கிறீர்:
நான் போகும் சர்வபாதைகள்
தெளிவாகக்காண்கிறீர்.
அந்தகாரம்
தேவரீருக்கில்லையே.

௩. நாங்கள் உம்மைச் சமீபித்து
வேண்டிக்கொள்ளு முன்னமே,
எங்கள் மனதை அறிந்து,
நன்மையைக்கொடுப்பீரோ;
ஆ! கர்த்தாவே!
அன்பாய்ப் பாரும் எங்களை.

௪. பாவிநெஞ்சில் வைத்த நோக்கம்
பார்த்தறிந்தளிக்கிறீர்:
நல்லோர் செய்யும் யாவற்றையும்
நன்றாய்ச் சித்தியாக்குவீர்:
நீதி தீர்க்கும்
கர்த்தாவாயிருக்கிறீர்.

௫. முன்னும் பின்னுமாகும் யாவும்
தெளிவாக அறிவீர்:
மாயை இருள் கறை பாவம்
நீங்கவழிகாட்டுவீர்
மோட்சமார்க்கம்
எங்களுக்குத் தருவீர்.

50. ருய-ம். கீதம். L. M.

*Omniscience and Omnipresence of God.*
Ps. cxxxix. Heb. iv. 13.

க. உன்னதமான ஸ்தலத்தில்,
மா ஆழமுள்ள இடத்தில்,
கர்த்தாவே! நீர் இருக்கிறீர்;
எல்லாவற்றையும் பார்க்கிறீர்.

உ. நான் சென்றுவரும் வழியை,
நான் போயிருக்கும் இடத்தை,
கர்த்தாவே! நீர் அறிகிறீர்;
சமீபமாயும் நிற்கிறீர்.

ங. வானத்துக்கேறித்தங்கியும்,
பாதாளத்தில் இறங்கியும்,
ஆ! அங்கேதானும் தேவரீர்
என்னை அறிந்திருக்கிறீர்.

ச. இருளிலே ஒளித்தாலும்,
கடலிலே நான் போயினும்,
எங்கே போனாலும் தேவரீர்
அங்கென்னை சுற்றியிருப்பீர்.

ரு. இதையறிந்து, தீமையை
வெறுத்துத் தள்ளித், தேவனை,
பின் சென்று வழிபடவே
கிருபைதாரும், கர்த்தரே!

51. ௫௧-ம். கீதம். C. M.

*The same.*

௧. குற்றம் நிறைந்த ஆத்துமா
   உமக்கு மறைந்தே
விலகிக்கொள்ளக் கூடுமா?
   அனாதி பரனே!

௨. உமது சினத்துக்குச் சா
   மறையக்கூடுமோ?
பூமி, பாதாளம் காரிரா
   ஒத்தாசை செய்யுமோ?

௩. கர்த்தாவே! சொல்ல மரணம்
   உயிராகும் நிசமே
காருள்ள சவக்குழியும்
   திறந்திருக்குமே.

௪. வெளிச்சம் செல்லும் கதியாய்,
   எத்திசைக் கப்பாலே
பறந்தும்; அங்கும் நிசமாய்
   பிடித்துக்கொள்வீரோ.

௫. சா, சீவன், வானம், பூமியும்,
   உமக்கு முன் சரி:
இவ்வல்லதேவனைக்கோபம்
   மூட்டுவதெப்படி?

52. ருஉ-ம். கீதம். L. M.

*The same.* Ps. cxxxix.

க. கர்த்தாவே! நான்படுக்கையில்
எழுந்திருக்கும் வேளையில்,
நடக்கும் இன்னதென்று, நீர்
கண் கண்டதாக அறிவீர்.

உ. என் அந்தரங்க எண்ணமும்
உமக்கு நன்றாய்த் தெரியும்.
என் சுக துக்கம் முன்னமே
நீர் அறிவீர் என் கர்த்தரே.

ந. உம்மைச் சேவிக்க மனதில்,
விருப்பமற்றுப்போகையில்
எங்கே நான் உமக்கொளித்தே;
விலகுவேன், மாதேவனே.

ச. மேல்வானத்தில் பறக்கிலும்,
பாதாளத்தில் இறங்கினும்,
என்னோடே கூடத்தேவரீர்;
நியாயம் விளங்க வருவீர்.

ரு. ஆ! கர்த்தரே, என்மனதில்,
தியானசிந்தை உண்டாகில்
நான் வழிதப்பிப் போயினும்,
திருத்தி, என்னைரட்சியும்.

53. ௫௩-ம். கீதம். L. M.

*The same.*

௧. கர்த்தாவே! அடியேனை நீர்
ஆராய்ந்தறிந்திருக்கிறீர்:
என்தேகமும், இதயமும்,
உமக்கு, நன்றாய்த்தெரியும்.

௨. நினைக்கமுன் என்னெண்ணமே,
நடக்கமுன் என்வழியே,
வாய் திறக்கமுன்னே சொல்லும்
கர்த்தாவுக்கெல்லாந் தெரியும்.

௩. உறங்கிக்கொண்டிருக்கையில்;
விழித்திருக்கும் வேளையில்;
வீட்டிலேனும், வெளியேனும்,
என்னைக்காண்பீர், அனுதினம்.

௪. ஆ தேவனே! இம்மெய்ஞானம்
புத்திக்கெட்டாத உன்னதம்:
என்னெஞ்சம், எண்ணி எண்ணியே,
பரவசமாகின்றதே.

௫. எங்கேபோனாலும், நான்எங்கே
இருந்தாலும், என்னெஞ்சிலே
இந்நினைவை இருத்திடும்;
பாவநேசம் அகற்றிடும்.

54. ருசு-ம். கீதம். L. M.

*The goodness and mercy of God.* Ps. ciii. 1, 4.

க. என் னெஞ்சமே! நீ கர்த்தரை
துதித்துப், பாடி, உண்மையாய்
ஐம்புலன்கட்டி, அன்போடே
மா தாழ்மையாய் வணக்கஞ் செய்.

உ. கிருபைக் கடலானவர்,
புகழப்படத் தக்கவர்:
சிநேக அற்புதங்களை
என் ஆத்துமாவே! நீ நினை.

௩. உன்பாவப் பலியாகவே
குமாரனைக் கொடுத்தாரே,
உன்னைச் சீராக்கும் ஆக்கினை
அவர் பட்டார், அதே நினை.

௪. கர்த்தாவே! எந்த ஊரிலும்
ரட்சிப்பின் அருள் காணவும்,
பூலோகம் யாவும் ஏகமாய்
வணங்கச் செய்யுங்களிப்பாய்.

55. ருரு-ம். கீதம். C. M.

*The holiness of God.* 1 Pet. i. 15, 16.

க. பரத்தில் தூதர், தினமும்
கர்த்தாவின் நாமமே,

மா சுத்தம், சுத்தம், சுத்தமும்,
பாடிக்கொள்வார்களே.

௨. என்னுத்துமா! நீயுந் துதி
மகாபுகழ்ச்சியாய் ;
சமுகத்தில் நீ கைகூப்பி,
வணங்கிப்பணிவாய்.

௩. மனோவாக்குக்கெட்டாதவர்,
பலியை யல்லவே,
யாவற்றிலும் விரும்புவார்
சுத்தாங்க நெஞ்சமே.

௪. களிம்பு குற்றம் அறவே
ரட்சியுந் தேவரீர் :
என்னை, அன்புள்ள கர்த்தரோ!
தரிசிப்பாரோன்றீர்.

56. ருசு-ம். கீதம். L. M.

*Creation and Redemption.* Rev. v. 9, 10.

௧. பராபரனுக்கிஸ்தோத்ரம்.
எங்களுக்குயிரைத்தந்தார்.
அவர் முன்பாக நிற்கவும்,
எங்களைப் பத்தராக்கினார்.

௨. பாவமென்றந்தகாரத்திற்
கிடந்த ஏழைச் சனங்கள்,

ஏசுவின் தேவமுகத்தில்
பூரண நாளைக் கண்டார்கள்.

ரு. இச்செய்கை, ஸ்வாமி! உமது
உம்முடகையை நீட்டினீர்;
கெட்டவர்களை ரட்சித்து,
அன்னியரை ஏற்றுக்கொண்டீர்.

ச. சர்வ வல்லமையுள்ள நீர்
எங்கள் ஒன்றான ரட்சகர்.
வார்த்தையால் உலகைச்செய்தீர்;
வார்த்தை மனிதரின் மீட்பர்.

ரு. ஓயாமல் உம்மைத்துதிக்க,
சுத்தர்கள், சத்தமிடுவார்.
பாக்கியத்தில் அதிகரிக்க,
வானோரும் எங்களைப் பார்ப்பார்.

கூ. நாங்களும், இருள் ஒழிய,
உம்முட ஒளியைக் கண்டோம்;
உமக்கே பிழைத்துச் சாக,
எங்களை ஒப்புக்கொடுத்தோம்.

57. ருஎ-ம். கீதம். L. M.

"*His work is honorable and glorious.*" Ps. cxi.

க. கர்த்தாவைத் துதிசெய்யுங்கள்,
ஓசையோடாசை கூட்டுங்கள்:

அவர்சுபாவம் நல்லது,
அவரின்செய்கை அழகு.

௨. வான்மீன்களை உண்டாக்கினார்:
பேர்சொல்லிக் கணக்கறிவார்;
தஞ்ஞானம் கரையில்லது,
புத்தியையுங் கடந்தது.

௩. வானத்தில்மேகம் விரித்து,
செழிக்கும்மழை. பூமிக்கு
வருஷிப்பித்த உன்னதர்,
துதிக்கப்பட தக்கவர்.

௪. மண்புல்லால் அலங்கரித்து,
நிலத்தில் நெல்லை வளர்த்து,
விலங்குக்குணவீகிறார்;
பட்சிகளைப் போஷிக்கிறார்.

௫. புலவர்களின் புத்தியும்
மிருகங்களின் சத்தியும்
எவ்வளவாகிலும், அவர்
எவற்றிற்கு மேலானவர்,

௬. சுத்தரோஅவர்க்கழகு;
பத்தர்மேல் அவரின் அன்பு
பத்தரில் அவர் சாயலை
பார்ப்பது, அவர்க்கினிமை.

58. ருஅ-ம். கீதம். P. M.

*Exulting in God.* Ps. LXXXIX. 1, 18.

க. ஆ! என்னில்நூறுவாயும் நாவும்
இருந்தால் கர்த்தரோனக்கு
அன்பாகச்செய்த நன்றியாவும்
அதுகளால் பிரசங்கித்து
துதிகளோடே சொல்லுவேன்
ஓயாதோனியாய்ப் பாடுவேன்.

உ. ஆ! என்னில் சோம்பலாயிராதே
என் உள்ளமே நன்ருய்விழி
கர்த்தாவைநோக்கி ஓய்வில்லாதே
கருத்துடன்இஸ்தோத்ரி.
இஸ்தோத்திரி என்ஆவியே
இஸ்தோதிரி என்தேகமே.

ங. வனத்திலுளளபச்சையான
எல்லாவித இலைகளே
வெளியில் பூக்கும் அந்தமான
மலர்களின்ஏராளமே;
என்னேடேகூடநீங்களும்
அசைந்திசைந்துபோற்றவும்.

ச. கர்த்தாவால் சீவன்பெற்றிருக்கும்;
கணக்கில்லாவகைகளே
பணிந்துபோற்ற உங்களுக்கும்
எந்நேரமும் அடுக்குதே.

துதியாய்உங்கள் சத்தமும்
ஒருமித்தெழும்பி ஏறவும்.

## 59. ருகூ-ம். கீதம். L. M.

*The providence of God.*

க. இக்காலமட்டுஞ் சீவனை
அனுக்கிரகித்த கர்த்தனை
புகழ்ச்சிசெய்யவாருங்கள்
தியானம்பண்ணபாருங்கள்.

உ. அவருடைய வல்லமை
அகாதமானமாட்சிமை
பொருநதியும் இழிந்தநாம்
அவரிடத்தில் சேரலாம்.

ங. அவர் கை நீட்டிவன்மையை
அனுக்கிரகித்தச்சித்தத்தை
நிசத்திலே நிறுத்தினர்
அன்பாகவே நடத்தினர்.

ச. தளர்ச்சி நோவு சாவிவை
உண்டானபோது நெஞ்சத்தை
திகைப்பில்லாமற், செய்தனர்
மகிழ்ச்சியால் நிரப்பினர்.

ரு. நம்மாலுண்டான பாவத்தை
மன்னிக்கக்கிறிஸ்தின் துக்கத்தை
நினைத்துக்கஸ்தி நீக்கினர்
பயங்கொள்ளாதிருவென்றார்.

சு. இத்தன்மையாகச்செய்தவர்
எல்லாருக்கும்நல்லாண்டவர்
அவரிடத்தில்யாவரும்
மிகுந்தஅன்புகூரவும்.

எ. அவருடைய சித்தத்தை
முடித்துத்தேவ நன்மையை
பிரசித்தஞ் செய்திணங்கவும்
புகழ்ச்சியைச் செலுத்தவும்.

60. சுய-ம். கீதம். C. M.

*Divine goodness in preservation.*

க. கிடைத்தநன்மையாவையும்
சிந்தித்து, அடியேன்,
களிப்புடன்துதியையும்
செலுத்திப், பாடுவேன்.

உ. குழந்தை முன் நான் வளர,
எனக்குத், தேவனே!
சகாயஞ்செய்துதந்திட்ட
தயை,மிகுந்ததே.

ந. சிறந்த வாலிபத்திலும்
தீமைக்குட்ப் படுகில்,
தாங்கிக்கொண்டீர் துன்பத்திலும்,
உமதுபுயத்தில்.

௪. மாகோடாகோடி தீமைகள்
விலக்கி, ரட்சித்தீர்;
கைமாறில்லாத நன்மைகள்
கதிக்கப்பண்ணினீர்.

௫. இம்மையில்என்றுந் தாழ்மையாய்
தேவன்பை நினைப்பேன்:
மறுமையில் வணக்கமாய்
உம்மைப்புகழ்வேன்.

௬. புகழ்ச்சி கீர்த்தி தோத்திரம்
ஒன்றுனஉமக்கே,
இகத்திலும் பரத்திலும்,
கொடுக்கத்தகுமே.

61. ௬௧-ம். கீதம். 7's.

*Trust in the providence of God.*

௧. மோட்சலோக நாதரோ!
நித்யநேசமுள்ளோரோ!
லோகச்செய்கைகளெல்லாம்
தேவரீருக்குள்ளேயாம்.

௨. நான்பிறக்கச்செய்தவர்,
சாவுமட்டுங் காப்பவர்;
எனக்கேற்றயாவையும்,
தெய்வஞானம், ஆண்டிடும்.

ங. லோக காலம், இன்பமும்
ஏழைமை, நற்சேல்வமும்,
துக்கமும், சந்தோஷமும்
தேவ கை, அளித்திடும்.

ச. மா விவேகமுள்ளோரே !
எனக்குள்ளயாவுமே
உமக்கோப்புவிப்பேன்; நீர்
நன்றுகநடத்துவீர்.

ரு. காலந்தோறும் உம்மையே
தோத்திரிக்கில், முத்தியே !
நீர்என்சேல்வமானவர்,
என்றும்அன்புக்கேற்றவர்.

62. சூஉ-ம். கீதம். C. M.

*God our shepherd.* Ps. XXIII.

க. சர்வமும்வல்ல ஆண்டவர்,
என்வழிகாட்டியாம்:
வேண்டியதை அளிப்பவர்,
என்நல்லமேய்ப்பராம்.

உ. பசும்புல்லான மேய்ச்சலில்
ஆற்றிநடத்துவார்;
நதியோரத்தில், மரத்தில்
நிழலில்,போஷிப்பார்.

ரு. அலைவுபடும் பாவியை
நிலைநிறுத்துகிறார்:
நீதியின்பாதையில், என்னை
நடக்கச்செய்கிறார்.

ச. யாதொரு பயம் நஷ்டமும்
இல்லாமற், சாவேனே:
நீர் நீட்டுங்கோலும், தண்டமும்,
ஆவியைத் தாங்குமே.

ரு. இவ்வருள்செய்யுந் தேவன்தான்
என்னுடன் நிற்பதால்;
அவருக்கென்றும் சேவிப்பேன்,
என்முழுபலத்தால்.

63. சுரு-ம். கீதம். P. M.

*The Same.*

க. கர்த்தர் என்மேய்ப்பரானவர்,
நன்றாகமேய்க்கிறாரே:
அனைத்தையும், என்ரட்சகர்,
அன்பாக ஈகிறாரே.
யாவையும் பார்க்க உத்தம
தெய்வீக வார்த்தையாகிய.
நன்மேய்ச்சல், எனக்குண்டு.

உ. சுகங்கொடுக்கும் ஆவியை
என்னெஞ்சத்துக்குக் காட்டி,

என்னுத்துமாவின்தாகத்தை
அவர் நன்ருக மாற்றி,
இயேசுஅவராகையால்,
என்னை மிகுந்தநேசத்தால்
நடத்தி, ஆண்டுகொள்வார்.

௩. ஓர்வேளை சோதியின்றியே
மிகுந்த துக்க சாவின்
இருண்ட பள்ளத்தாக்கிலே
நடந்தும்; அவ்விருட்டின்
பொல்லாங்குக்குப்பயப்படேன்;
நீர் நீட்டுங்கோலைப்பற்றுவேன்;
அதே என்னை நடத்தும்.

௪. மேஸிந்தேனுக்கோர் பந்தியை
பகைவர்க்கே முன்பாக
வைத்தெண்ணெய்யால் என்னுச்சியை,
மகா கடாட்சமாக,
சிறப்பித்தின்பஞ்செய்கிறீர்;
என்பக்கத்தில் இருக்கிறீர்;
என் பாத்திரம் நிரம்பும்.

௫. என்சீவனுள்ள காலத்தில்,
தேவன்புதான் கிடைக்கும்;
கடைசியானநேரத்தில்
அதே என்னை அழைக்கும்:
இங்கே கர்த்தாவின் வீட்டிலும்,
அங்கே மகா தலத்திலும்
நிலைத்துக்கொண் டிருப்பேன்.

64. ௬௪-ம். கீதம். P. M.

*God our trust.*

க. நாங்கள் போற்றும்வல்லதேவர்,
மாறில்லாதஎங்கள் தஞ்சம்,
ஆதியந்தமற்ற நேசர்,
அருள்செய்வார், யாவருக்கும்.
இன்றும் என்றும் ஆவிகொண்டு
வழிகாட்டி வீட்டிற்சேர்க்கும்
எங்கள் ஏசு நம்பிச்சார்ந்து,
நாங்கள்போற்றி, வாழ்வோம் என்றும்.

65. ௬௫-ம். கீதம். C. M.

"*Without me ye can do nothing.*" JOHN. XV. 5.

க. என்ஆத்துமத்தைத் தாங்கிய
பரம பிதாவே !
நல்லீவு, உம்மாலொழிய,
கிடைக்கமாட்டாதே.

உ. கிருபை, பலம், ஞானமும்,
உம்மிலிருக்குது :
உமதாவியல்லாமலும்,
நன்றேன்றுமிராது.

௩. செபிக்கும், ஏசுவைக்கேட்டு,
சுத்தநினைவையும்,

நினைத்துப்பேசுவதற்கு
எங்களுக்கருளும்.

ச. அவர் ரத்தஞ்சிந்தினதால்
வாங்கின கிருபை,
அவர்பூமிக் கூற்றுவதால்;
அதுவே என் துணை.

ரு. நன்னினைவு சொல் செய்கையும்
எங்களிலானால், நீர்
காரணமாய் அவையிலும்
எங்களை ஏவினீர்.

சு. ஏசுவைக்கொண்டு ஜெயிக்க
உம்மாற்பலங் கொண்டோம்
எங்களில் என்று மிருக்க
உம்மைவேண்டுகிறோம்.

66. சுசு-ம். கீதம். 8, 7, & 4.

*"Guide me, O thou great Jehovah."*

க. பாதைகாட்டும் மா ஏகோவா
பரதேசியான நான்
மா பலகீனன் அல்லவா
இவ்வுலோகங் காடுதான்:
வானுகாரம்
தந்து, என்னைப்போஷியும்.

உ. சீவதண்ணீர் ஊறும் ஊற்றை
நீர் திறந்து தாருமே.
விளக்கும் மேக தம்பத்தை
வழியில் நடத்துமே.
வல்லமீட்பர்!
என்னைத்தாங்கும், ஏசுவே.

ந. சாவின் அந்தகாரம் வந்து
என்னைமூடும் நேரத்தில்,
சாவின்மேலும் வெற்றிதந்து
என்னைச்சேர்க்கும் மோட்சத்தில்
கீத வாழ்த்தல்
உமக்கென்றும் பாடுவேன்.

67. சுஎ-ம். கீதம். L. M.

*Mercies acknowledged.*

க. என் சீவபராபரனே!
உமது வல்லமையால் நீர்
வெவ்வேறே சாவுகளையே
நீக்கி யென்னை எழுப்பினீர்.

உ. என்னெல்லாவழிகளிலும்
உமதுசெய்கை காண்கிறேன்
ஆ! இன்னம் என்னை நடத்தும்.
இன்னம் உம்மைப்பின்தொடர்வேன்.

ந. பிரேதக்குழியோரத்தில்
என் தலையை எழுப்பினீர்.

சுரம் நீங்கினதேதேனில்,
அதற்குக்கட்டளையிட்டீர்.

ச. ரட்சகர் மார்பு ஒழிய
பின்னும் எவ்விடமோட்லாம்.
உமது கையில் தரிக்க
சுகமா இளைப்பாறலாம்.

ரு. கண்ணிக்கு நீங்கும்படிக்கு
எனக்குப்புத்தி இல்லையே.
உம்மாலோ எனக்கறிவு
பலமுண்டு, கிறிஸ்துவே!

68. சுஅ-ம். கீதம். S. M.

*" Come we that love the Lord."*

க. கர்த்தாவின் நேசரோ!
உங்கள் ஆத்மானந்தம்
எல்லாருக்கும் அறிவிக்கவே,
ஒன்றுய்க்கூடிப்பாடும்.

உ. கர்த்தாவை அறியார்
பாடாமற் போயினும்,
அவரை அண்டுஞ்சேவகர்
துதிப்பார்கள் என்றும்.

ந. விண்ணை ஆளுந்தெய்வம்
மண்ணையும் தாங்குவார்.

காற்றுங்கடற்கோந்தளிப்பும்
இவை அமர்த்துவார்.

௪. சர்வ வல்லர் இவர் :
எங்கள் நேச தந்தை
தாமேவிடுந் தேவதூதர்,
மோட்சஞ்சேர்ப்பார் நம்மை.

௫. தேவமுகம்நோக்கி
பாவமின்றி வாழ்வார்
மோட்சானந்த நதி மூழ்கி,
மகிழ்வாரோ முத்தி.

௬. அங்கேதோற்றும் இன்பம்
ஆத்மம் பெற முன்பு ;
அதை நாடித்தினந்தோறும்
மகிழ்வதே நன்று.

௭. கிருபை பெற்றவர்
பூமியிலே மோட்சம்
ஆரம்பித்ததென்றறிவர்
விசுவாசமூலம்.

௮. தேவைநம்பிப்பாடி
கண்ணீரைத்துடைப்போம்
கர்த்தர் அருள் செய்த வழி
சென்றுசேர்வோம் மோட்சம்.

69. ௬௯-ம். கீதம். P. M.

*Gratitude for mercies.*

க. எல்லாங் கர்த்தாவின் கைக்கும்
அவர் நல்லாளுகைக்கும்
நான் ஒப்புவிக்கிறேன்
அவர் வகை காட்டாமல்
அவர் செயந் தாராமல்
இருக்கிற் கேடுண்டாகுமே.

உ. நான் என்னத்தைச்செய்தாலும்
கலங்கி யோசித்தாலும்
அதாலேயாகுமோ?
என்காரியந் தப்பற்ற
விசாரிப்பாய் நடத்த
பிதா அருள்வாரல்லவோ.

ங. எக்காரியத்திலேயும்
அவர்இரங்கிச்செய்யும்
விசாரணை யுண்டே
அதாலே நித்த நித்தம்
அவருடைய சித்தம்
எனக்குப் பாக்கியமாமே.

ச. மகா இரக்கத்தோடும்
இக்கட்டை நீக்கிப்போடும்
கர்த்தாவைப் பற்றிக்கோள்
நீ தேவபத்தியாக.

நடக்கிற் சுகமாக
இருப்பாயதை நம்பிக்கோள்.

70. எ௰-ம். கீதம். C. M.

*The Same.*

(க-ம். பங்கு.)

க. விண்ணோர்கள் போற்றிப் பாடிய
தயாபரருக்கே
துதிசெலுத்து. சகல
நரரின் கூட்டமே.

உ. மா ச்செயல்களைச் செய்கிற
பராபரனைப்போல்
ஆர் என்றவனை யுத்தமக்
கருத்தாய்ப்போற்றுங்கள்.

ங. இந்நாள் வரைக்கும் நமக்குச்
சுகம் அருளினார்;
நீங்கா இக்கட்டைத்தமது
கரத்தால் நீக்கிறார்.

ச. நாம் செய்திருக்கும் பாவத்தை
பாராதிருக்கிறார்,
தெய்வீக ஆக்கினைகளை
யன்பாய்அகற்றினார்.

(உ-ம். பங்கு) C. M.

க. இனியும் நாம் மகிழ்ச்சியாய்
இருக்கச், சகல
பொல்லாப்பை யவர் தயவாய்
விலக்கி யருள.

உ. புவியில் சமாதானத்தை
யவர்தந்தென்றைக்கும்
அன்பாய் நாஞ் செய்யும் வேலையை
யாசீர்வதிக்கவும்.

௩. நம்மோடே அவர் தயவாய்
இருந்து துக்கமும்
வியாகுலமும் தூரமாய்
விலகப்பண்ணவும்.

ச. நாஞ்சாகுமட்டுக்கும் கர்த்தர்
நான் தங்கும் கோட்டையும்
நாஞ்சாகும்போது நம்முட
கதியுமாகவும்.

ரு. பிரிந்துபோற ஆவியை
மோட்சானந்தத்திலே
அவர் சேர்த்ததை தம்மண்டை
மகிழ்ச்சி யாகவே.

## அவரின் ஆளுகை.

71. ஏக-ம், கீதம். L. M.

*"The blessed and only Potentate."* 1 Tim. vi. 15.

க. அழிவில்லாத தேவனே!
மண் விண் கடல்கள் யாவுக்கும்
காரணக்கர்த்தர்! உம்மையே
சிஷ்டி யெல்லாம் பணிந்திடும்.

உ. சராசரம் அனைத்தையும்
சிஷ்டித்த மா ஏகோவா நீர்;
ராசாக்களுக்கிராசாவும்
என்றைக்குமோன்றுயாளுவீர்.

ஈ. உமக்கே நாங்கள் தொண்டர்கள்;
வேறொரு தேவனறியோம்:
சுரூபம் ஓமம் பூசைகள்.
எல்லாம், வெறுத்துத், தள்ளுவோம்.

ச. அஞ்ஞான இருள் பறந்து
மூடுஞ் சர்வ தேசத்துள்ளும்,
பேய்மதம் நீங்க, உமது
மேன்மை விளங்கச், செய்திடும்.

ரு. பொறாமை, கோபம், பெருமை,
அகற்றி, அன்புண்டாகவே,
பூமியில், உமதாளுகை
பரம்பப்பண்ணும் கர்த்தரோ.

72. எஉ-ம். கீதம். 4-5's & 2, 9's.

*"The Lord reigneth."* Ps. xcvi. 10.

க. யெகோவா தாமே
சிறந்தவரே.
செங்கோலும் செலுத்திருக்கிறார்.
தேசா தேசமாய்,
மகா நீதியாய்,
பூ யாவையும் ஆண்டுகொள்வார்.

உ. பாரோன், மாந்தரே!
சீயோன் சபையே
கிருபை விளங்கச்செய்வார்,
தென் வட வழியாய்,
கீழ் மேலுந் திசையாய்,
அறிந்தோரையே அழைப்பார்.

௱. பூலோகத்தாரே!
வானோர்களுமே!
மாப்பூரிப்பாய்க் களியுங்கள்
லோகா லோகமாய்,
ஞாயாதிபதியாய்,
ஆளும் யேசுவைப் பாருங்கள்.

# இயேசுகிறிஸ்து.

## அவரின் மகிமை.

73.     எரு-ம். கீதம்.     P. M.

*"Unto you therefore who believe he is precious."*
1. Pet. ii. 7.

(க-ம். பங்கு)

க. மகா! அருளின் சோதியைப்
பாராட்டும் வெள்ளி எத்தனை
பிரகாசமாய் விளங்கும்!
தாவீதின் மைந்தன் ஏசுவே
நீர் நீர் என்மணவாளனே!
என்போக்கிஷம் என்பங்கும்
முற்றுஞ் சுற்றுந்
தயவாலும் உண்மையாலும் நீர் நிறைந்தோர்,
மேன்மை நாமமும் அடைந்தோர்.

உ. என் முத்தே. என் மா கிரீடமே!
உம்மோடே தெய்வ பிள்ளையே,
நான் ஐக்கமாக வேண்டும்;
உயர்ந்த இராசா, உமது
நற் சுவிசேஷம் எனக்கு
அமுர்தம் பாலுந் தேனும்.
ஐயா, நய
தெய்வருபே, வாடாப்பூவே, நீரோயாவும்,
சீவ ஊற்றும் மெய் மன்னாவும்.

௩. என் கெம்பே வான அஸ்பியே,
மினுக்கிக்கொள்ளும் நேசமே,
என் நெஞ்சில் ஒளிவாடும் :
நான் உமக்குள்ளே என்றைக்கும்
நிலைக்க, நீர் எந்நேரமும்
அன்பாக என்னைப் பாரும் :
ஆன ஞானச்
செல்வம் நீரோ தேவரீரோ நான் அறியும்
வாழ்வும் இன்பமுங் கதியும்.

௪. சிநேகமுள்ள பார்வையால்
அடியேனை நீர் நோக்கினால்
பரம வெளிச்சங்காட்டும்
நீர் சொல்லும் இன்பச்சொற்களுந்
தருஞ் சரீரம் ரத்தமும்
என் ஆத்துமத்தை யாற்றுந்
தேறச் சேரக்
கிட்டும் என்னை நற்றிடனைத் தந்தழையும்
அன்புமாய் அரவணையும்.

(உ-ம். பங்கு.) P. M.

*The same.*

க. பிதாவே! நீர் அநாதியில்
என் பேரிலே குமாரனிற்ச்
சிநேகம் வைத்த கர்த்தா :
குமாரன் என்னைத் தமக்கே
மனைவி என்றன்புடனே

தெரிந்து கொண்ட பத்தா :
மெத்தக் கெட்ட
பாவியான என்னை வான கர்த்தர் தாமே
நோக்கினதிரக்கமாமே.

உ. கிண்ணரம் யாழும் வீணையுஞ்,
சங்கீத வாத்தியத்தையுஞ்
சந்தோஷமாய்க் கேட்கட்டும்
அன்புள்ள ஏசுவுடனே
நான் என்றென்றைக்கும் வாழ்வதே
என் ஆவியைத் திடத்தும் :
ஆடி, பாடி,
கிறிஸ்து தாமே நேசராமே என்று ஓதுஞ்
சந்த இன்பமே எப்போதும்.

ஈ. மகிழ்வேன் என் சிநேகிதர்
அல்பா ஓமேகா வென்பவர்
எந்நேசர் ஆதியந்தம் :
இனி மோட்சானந்தத்திலே
நான் அவரண்டைச் சேர்வேனே
என் பாக்கியம் ஆனந்தம்
ஆமன், ஆமன்,
வா ரட்சிப்பே, வா கெலிப்பே, யுனக்காக
வாஞ்சிப்பானேன் சேர்வாயாக.

74. எச-ம். கீதம். P. M.

(க-ம். பங்கு.)

"*Christ is all and in all.*" COL. III. 11.

க. பிரியமான ஏசுவே!
என் நெஞ்சைத் தயவாக
நீர் பூரிப்பாக்கி என்னிலே
பலத்ததேற்றலாகத்
தெய்வீக அன்பை யூற்றிய
படியினுல், நான் உம்முட
துதியைச், சொல்வேனுக.

உ. என் நெஞ்சில் உம்மால் பற்றின
சிநேகத் தீ எரியும்
என் மனசும்மால் உத்தம
மகிட்சியை அறியும்
நான் உம்மை நோக்கும் போதெல்லாம்
என் துக்கம் உம்மிலே உண்டாம்
அருளினுல் தெளியும்.

ஈ. நீர் என் வெளிச்சம் உம்மால் நான்
திறந்த முகமாக
பிதாவின் இன்பநெஞ்சைத்தான்
என் ஆறுதலுக்காகக்
கண்ணேக்கிறேன் ஆ! தயவாய்
நீர் எனனை வாங்காச்சோதியாய்ப்
பிரகாசிப்பிப்பீராக.

ச. நீர் மோட்சத்துக்குப்போம் வழி,
இதற்குள்ளான யாரும்
தப்பாய்ப் போகான், இதே சரி,
விலகினோரெல்லாரும்
அழிந்துபோகிறவர்கள்தான்
வழியாஞ் சுவாமி, உம்மில் நான்
நிலைக்க என்னைக்காரும்.

ரு. நீர் சத்தியம், நான் உம்மையே
தெரிந்து கொண்டிருப்பேன்,
பொருளுஞ் சாரமும் நீரே,
வீண் மாய்கையை வெறுப்பேன்:
உம்மாலே பாக்கியம் வரும்:
மெய்யே என் நெஞ்சை என்றைக்கும்
நான் உமக்கே கொடுப்பேன்.

(உ-ம். பங்கு.) P. M.

*The same.* JOHN VI. 35.

க. நீர் சீவன், என்னை நீர் நீரே
தரும் பலன் எவட்டும்,
திடன் இல்லா அந்நேரமே
என் நெஞ்சை நீர் திடத்தும்
அப்போது வாழ்ந்து தேறுமே
இத்தெய்வ சீவன் என்னிலே
மேன்மேல் பலன்கொள்ளட்டும்.

உ. நீர் வானத்தப்பம் பஞ்சத்தில்,
பசி யும்மாலே யாறும்

நான்போம் வனாந்தரங்களில்
என் மனசும்மை நாடும்
பிதாவின் ஈவாம் மன்னாவே
நீரோன்னை வேறே இச்சைக்கே
விலக்கமாகக்காரும்.

௩. நீர் சீவஊறறு உம்மிலே
குடித்தால் தாகந்தீரும்
நீர் தாரும் ஈவு நித்தமே
சுரக்கிற தண்ணீரும்.
ஆ! என்னைரப்பிக்கடாட்சித்து
இரும் அத்தால் உண்டாவது
ஆரோக்கியம் நற்சீரும்.

௪. நீர் எனனைச்சோடிக்கும்உடை
நீர் என் அலங்கரிப்பு.
நான் உம்முடைய நீதியை
அணிவதென்னிச்சிப்பு.
பூலோகத்தின் சிங்காரமாம்
வினோதசம்பிரமம் எல்லாம்,
கனமில்லாத தரிப்பு.

௫. நீர் நான் சுகித்துத்தங்கிற
அரமனையும் வீடும்
பிசல் அடித்தும் விருதா,
பேய்வினாய் என்னைச்சீறும்
நான்உம்மில்நிற்பேன், ஆகையால்
கேடேன், பொல்லார் எழும்பினால்,
நீர் என்வழக்கைத்தீரும்.

(ரு-ம். ஐங்கு.) P. M.

*The same.* JOHN x. 11.

க. என்மேய்ப்பரா யிருக்கிறீர்,
என்மேச்சலும் நீர்தாமே,
காணுமற் போன என்னை நீர்
மா அன்பாய் மீட்டோராமே.
இனி இவ்வாட்டை என்றைக்கும்
நீர் சிதற ஒட்டாதேயும்,
நான்உம்முடையோனுமே.

உ. நீர் என்றைக்கும் நான்வாஞ்சையாய்ப்
பணிந்துகொள்ளும் பத்தா;
நீர் என்ஆசாரியருமாய்ப்
பலிபோல் மாண்ட கர்த்தா:
நீர் என்னை ஆளும் ராசாவும்,
உம்மலே எந்தப்போரிலும்
செயிப்பேன் மாச் சமர்த்தா.

ரு. நீர் உத்தம சினேகிதர்
என் நெஞ்சும்மண்டை சாயும்,
நீர் உண்மையாஞ் சகோதரர்,
நீர் என்னைப்பார்க்குந் தாயும்,
நீர் நோயிற் பரியாரியே
உம்மாலே யாறிப்போகுதே
என் காயமும் விடாயும்.

ச. படையில் நீர் சேனுபதி,
வில்கேடையஞ் சீராவும்

கருங்கடலில் நீர் வழி
காண்பிக்குஞ் சமுக்காவும்,
எழும்புங்கோந்தளிப்பிலே
நீர் என நங்கூரம், ஏசுவே,
நான் உட்படுங்குடாவும்.

(ச–ம். பங்கு.) P. M.

*The same.*

க. நீர் ராவில் என் நட்சத்திரம்
இருளில் என் தீவட்டி
குறைவில் என் ஐசுவரியம்,
என் தாழ்வில் என் உயர்த்தி,
கசப்பிலே என் மதுரம்,
நான் தோய்ந்தால் மீண்டும் என் மனம்
பலக்க நீர் என் சத்தி.

உ. நீர் சீவனின் விருட்சம்,
நீர் செல்வங்கள் பொழியும்
பூங்காவனமும் என்றைக்கும்
சுகந் தருங் கனியும்
முள்ளுள்ள பள்ளத்தாக்கிலே
என் ஆவிக்கு நீர் ஏசுவே,
குளிர்ந்த பூஞ்செடியும்.

ங. நீர் துக்கத்தில் என் ஆறுதல்,
நீர் வாழ்வில் என் களிப்பு,
நீர் வேலையில் என் அலுவல்,

பகலில் என் சிந்திப்பு.
நீர் ராவில் என் அடைக்கலம்,
நீர் தூக்கத்தில் என் சொற்பனம்
விழிப்பில் என் குறிப்பு.

ச. ஆ! ஒப்பில்லாத அழகே,
நான் எத்தனைச் சொன்னாலும்,
என் நாவினால் முடியாதே ;
நான் என்ன வாஞ்சித்தாலும்
அதேல்லாம் நீரோ, ஏசுவே,
ஆ! தயவுள்ள நேசரோ,
நீர், என்றும் என்னை ஆளும்.

அவரின் அவதரித்தல்.

75. எரு-ம். கீதம். L. M.

*The Incarnation of Christ.* LUKE II. 8--15.

க. பரத்திலே யிருந்து தான்
அனுப்பப்பட்ட, தூதன் தான்,
நற்செய்தி அறிவிக்கிறேன்,
பயப்படாதிருங்களேன்.

உ. இதோ! சனங்கள் யாவர்க்கும்
மிகுந்த நன்மையாய் வரும்,
சந்தோஷத்தைக் களிப்புடன்
நான் கூறுஞ் சுவிசேஷகன்.

ரு. இன்றுங்கள் கர்த்தரானவர்
மேசியா வுங்கள் ரட்சகர்,
தாவீதின் ஊரில் ஏழையார்
ரட்சிப்புக்காகச் சனித்தார்.

ச. பரத்திலே நாம் ஏகமாய்,
என்றைக்குந் தங்கும்படியாய்
இக்கட்டும், பாவமும், எல்லாம்
இம்மீட்பரால், நிவிர்த்தியாம்.

76. எசு-ம். கீதம். 7's.

*The Same.* Isa. vii. 14.

க. மண்ணிற் சாந்தம் இரக்கம்
தோன்றில், யார்க்கும் ரட்சிப்பாம்:
கேள், தூதர் பாடும் பாட்டை ;
வாழ்த்துவார்கள், ராசாவை.

உ. வானோர் போற்றுங் கிறிஸ்து
நித்ய தேவன், உகந்து
இந்தக் காலந் தோன்றுவார் ;
கன்னியிடம் பிறந்தார்.

ரு. நர ரூபந் தரித்தார்,
இம்மானுவேல் எம் மீட்பர்.
பாரும், மனுரூபியை ;
வாழ்த்தும் அவதாரத்தை.

௪. வானம் விட்டு நீங்கினார்,
நம்மை மீட்கப்பிறந்தார்.
வந்தார் நம்மை ரட்சிக்க,
மறுசென்மம் அருள.

௫. மண்ணோர் நாடும் நேசரே!
வந்து நம்மில் வாழ்வீரோ:
கன்னி தந்த சுதன் நீர்,
சர்ப்ப சிரம் நசிப்பீர்.

௬. ரண்டாம் ஆதாம் தேவனே!
அன்பில் நம்மை ஏவுமே,
மனு ரூபம் அழியும்;
தெய்வ ரூபம் பதியும்.

77. எஎ-ம். கீதம். 7's.

*The Advent of Christ.* MAT. I. 21.

க. வாரும், லோக மீட்பரே!
கன்னி பெற்ற மைந்தரே!
நீர் பிதாவில் வந்தவர்,
லோகத்துக்கிரட்சகர்.

௨. தீபமாம் பிதாவுக்குச்
சாயலாக, நமது
மேன்மையான ரட்சகர்
தாழ்மையாய்ப் பிறந்தனர்.

ரு. எங்கள் மேற் பிரகாசியும் :
என்றென்றைக்கும் ரட்சியும் :
நீர் பலத்த தேவனுர்,
எம்மைக்காக்கும் நாயனுர்.

78. எஅ-ம். கீதம். L. M.

*The same.* PHIL. II. 5, 11.

க. இரக்கமுள்ள ஏசுவே!
நரரின் தன்மையாகவே
பிறந்ததால், துதிக்கிறோம்
சுரரும் பாடக்கேழ்க்கிறோம்.

உ. அளவில்லாத வல்லவர்,
எல்லாவற்றையும் செய்தவர்,
குழந்தையாய்ப் பிறந்தனர் ;
நரரைப்போல் வளர்ந்தனர்.

ரு. அநாதி சோதிப், பூமிக்கு,
பிரகாசந் தந்திருட்டுக்கு
சுடர் கொடுக்க, ராவிலே
பிரவேசித்தார், சந்தோஷமே.

ச. அவற்றை, யாரும் சிந்தித்துச்
சந்தோஷத்தோடு பூரித்து
அத்தீபம் நோக்கி வாருங்கள்
அதில் நடக்கப் பாருங்கள்.

79. எகூ-ம். கீதம். 2-6's & 4-7's.

(க-ம். பங்கு.)

*"The chiefest among ten thousand."*
SOL. SONG v. 10.

க. தேவ குமாரனே!
என்னைக்கேளும் இன்றே
எனதாசை அறிவீர்.
எனக்காக மரணம்
ருசிபார்த்துத், தேவரீர்
என்னை முழுதும் வாங்கும்.

உ. நீர் சீவ விருட்சம்,
என் நித்திய உயிரும்,
கோடியான எனக்குத்
தேவ ரசம் அருளும்:
திராட்சச்செடி உமக்கு
சேர்வது என் சீவனம்.

ஙூ. நீர் சீவனின் ஊற்றே;
அதை உணர்வேனே
நீர் என்னில் இருக்கையில்
இளைப்பென்றும் வராது
நித்ய சிவ நீர் என்னில்
உம்மாற் கொப்பளிக்குது.

ச. நீர் நல்ல மேய்ப்பனும்
உம்மை விட்டேனென்றும்

என்னைக்காத்து நடத்தி,
என்மேற் பிரியமாயிரும்.
மெதுவாய் அன்பால் ஏவி,
தோளிற் சுமந்தருளும்.

(உ-ம். பங்கு.) 2-6's & 4-7's.

*The same.* John. vi. 35.

க. நீர் சீவ அப்பமே!
என் தலையும் நீரே.
நீதி பலம் நன்றெல்லாம்,
உம்மில், எனக்குண்டாகும்.
என்னைக் காப்பவர் நீர் தாம்:
உம்மில் என்னை வளர்த்தும்.

உ. குருவே! எனக்கும்
தேவசித்தங்காட்டும்:
மனிதன் பேசும் சத்தம்,
வீணும். உமது வாக்கு
உள்ளத்திற் கேழ்கப்படும்.
நிகரில்லை உமக்கு.

ங. எனக்காய் மரித்தீர்;
என் பாவத்தைத் தீர்த்தீர்;
உமது காயங்களில்
பிதாமுன் தோன்றுகிறீர்;
உமது வேண்டுதலில்
என் வேண்டுதலைச் சொல்வீர்.

ச. என் ராசா ஏசுவே!
பலத்தவர் நீரே.
நான் உமது கையிலே
இருந்தால், ஆர், பறிப்பார்?
விசுவாசத்தைக் கொண்டே,
சர்வ வல்லர், காப்பார்.

80. அ௰-ம். கீதம். 4-6's & 2-8's.

*"Jesus harmonizing name!"* Ps. XL. 3.

க. நரர் வானோர், ஒன்றாய்
ரட்சகனைப் போற்றி,
மகா மகிழ்ச்சியாய்
அவனைக் கொண்டாடி,
ஏசுவின்பேர் பேரின்பமும்
தருகுதென்று சொல்லட்டும்.

உ. ஏசு! ஆ இன்பச்சொல்!
எல்லார்க்கும் பாக்யமாம்
ஆதரவில்லாமல்,
பாவத்திலான நாம்
ஏசுவால் மோட்சம் பெறுவோம்
என்றுங்கொண்டாடக்கடவோம்.

ந. ஏசு இனியபேர்;
வானோர் அதைக்கேட்டு,
பரவசமாவார்,
மா சந்தோஷப்பட்டு.

அவரைப் பார்த்துப் பாடுவார்
ஏசுவில் முத்திப் பேறுவார்.

ச. பாவி, அதைக்கேட்டுத்
தீமைக்கு நீங்குவான்:
புது உயிர்பேற்று,
எல்லாஞ் சேயங்கோள்வான்.
தன் வாயிற் புதுச் சங்கீதம்
தன்னுள்ளில் மிகு களிப்பாம்.

81. அக-ம். கீதம். C. M.

"*Thou art worthy O Lord, to receive glory and honour.*" Rev. iv. 11.

(க-ம். பங்கு)

க. நான் ஆயிர நாக்கடைந்தும்;
மீட்பரைத் துதித்து,
அவர் தயவும் நேசமும்
வர்ணிப்ப தரிது.

உ. நன்மைச்சுரூப கர்த்தரே!
உம்முடைய நாமம்,
லோகத்துக்கறிவிக்கவே,
எனக்கருள் செய்யும்.

ரு. ஏசுவேன்னும் பேரைக்கேட்டுப்,
பயம் விட்டு நீங்கி,
சுக சீவ மோட்சம் பேற்று
வாழ்வோம், அதைச்சோல்லி.

௪. பாவ விலங்கை முறித்து,
  சிறையை விடுவார்:
பாவ மறசுத்தி செய்து,
  ரத்தத்தைத் தெளிப்பார்.

(௨-ம். பக்கு)     C. M.

*The miracles of Christ.* MAT. XI. 5.

௧. ஏசு வாய் மலரும்போது,
  செத்தோர் உயிர் வாழ்வார்:
ஏழைகளும் சந்தோஷித்து
  அவரை நம்புவார்.

௨. செவிடர்களே! அவரை
  அன்புடன் கேளுங்கள்.
ஊமைகளே! உங்கள் வாயைத்
  திறந்து பாடுங்கள்.

௩. குருடரோ! கண்திறந்து
  கிறிஸ்துவைப்பாருங்கள்.
நொண்டிகளே! கால் நடந்து
  குதித்து வாருங்கள்.

௪. மண்ணோரே! அவரைப்பார்த்துத்
  தேவனேன்றெண்ணுங்கள்;
அவரை விசுவாசித்து
  ரட்சிப்பை நாடுங்கள்.

(௬-ம். பங்கு.) C. M.

JOHN II. 2.

௧. சர்வலோக பாவதோஷம்
நீக்கும்படி வந்தார்:
என்னாத்துமத்துக்காகவும்
தம்முயிரை தந்தார்.

௨. நித்திரை விட்டுக்கிறிஸ்துவை
பார்த்தாற், பிரகாசிப்பார்:
அவரை அண்டும் பாவியை
ஆத்ம சுத்தி செய்வார்.

௩. மீட்பர் மூலம், பாவம் நீங்கி,
என்றுங்களிகூரும்.
தேய்வநேசந்தானே முத்தி
என்று நம்பித்தேடும்.

82. ௮௨-ம். கீதம். 2-6's & 4-7's.

*"God hath given him a name which is above every name."* PHIL. II. 9-10.

(௧-ம். பங்கு.)

௧. மனதே! எழும்பு:
ரட்சகரை நோக்கு.
அன்பின் பேர்களை எல்லாம்
அன்பின் ரூபங்களையும்
வாங்கினவர் ஏசுதாம்.
நீ அவரின் விருப்பம்.

௨. உன்னத ஸ்வாமியார்
தம் மகிமை விட்டார்:
ஆதி கர்த்தர், உலகில்,
மனிதனாய்ப் பிறந்தார்.
அவர், சிஷ்டிப்புக்களில்
சிஷ்டிப்பாகத் தோன்றினார்.

௩. வாழும் ஆதி கர்த்தர்!
தேய்வீக மனிதர்,
என்னில் யாவுமும்மையே
என்றென்றைக்கும் வணங்கும்.
ரட்சகரின் பேரையே
மோட்ச வாசரே! பாடும்.

௪. கன்னியின் கனியே!
இறைவர் வந்தாரே.
பிதாக்களின் நம்பிக்கை
ஸ்திரி சந்ததி கிறிஸ்து
பழம் பாம்பின்தலையை
காலால் தகர்ப்போர் ஏசு.

௫. தோத்திரம் ஏசுவே!
நீர் பிதாவுக்கொப்பே
ஏக சுதனாகிய
உம்மிலவர் பிரியம்:
நீர் மாத்திரம் எனக்காய்
தனைய புண்யஞ் சத்தியம்.

(உ-ம். பங்கு.) 2-6's & 4-7's.

*The same.* ISA. XLV. 23.

௧. சகல பேருக்கே
மேலான ஏசுவே !
  விண் மண் நரகம் யாவும்
ஏசுவுக்கு குனிந்து,
  வானோர் நரர் பேய்களும்
நடுங்கக்கடவது.

௨. அன்பாலே நிறைந்து
தம் மகிமை விட்டு
  வானம் அடங்காதவர்,
அவதாரம் எடுத்தார்:
  பரலோக ஆண்டவர்,
ஏழையாகத் தோன்றினார்.

௩. சொந்தத்துக்கு வந்தார்.
மாட்டோஞ்சொந்தரோன்றார்
  தூஷணித்து அவரைத்,
தள்ளிப்புறக்கணித்தார்.
  மூடனாக ஏசுவை,
எண்ணிக்கொள்ளத்துணிந்தார்.

௪. யூதரின் ராசாவே !
வாழுந் தாழ்ந்தவரோ
  உம்மில் என்றும் மகிழ்வேன்.
பரியாசப்பட்ட நீர்:

எனக்கும் இறங்குமேன் :
எவரையும் நேசித்தீர்.

83. அ௱-ம். கீதம். C. M.

*Christ crowned as Lord of all.* Acts. x. 36.

க. போற்றுங்கள் யாரும் ஏசுவின்
நாமத்தின்மேன்மையைத்
தூதர்கள் கூறி கர்த்தரின்
மேற்சூட்டும் முடியை.

உ. சூட்டும் இரத்த சாட்சிகாள்
ஸ்தேவானின் கூட்டமே,
துதிசெய்தும் மா நாதனுர்
மேற் சூட்டும் முடியை.

௩. தாவீதின் வேரும் வித்துமாம்
தேய்வீக ஏசுவை
அன்பரோ போற்றி ஏகோவா
மேற் சூட்டும் முடியை.

ச. இஸ்ரவேலே நீ கர்த்தரால்
ரட்சிப்படைந்ததைச்
சிந்தித்துக்கொண்டிம்மானுவேல்
மேற் சூட்டும் முடியை.

ரு. சிற்றின்பப் பாவிகாள், நீர் தான்
உலோக இச்சையை

முழுதும் நீக்கி எம்பிரான்
மேற் சூட்டும் முடியை

௬. பூவின் சிருஷ்டிக்கோத்திரம்
யாவும் மகிமையை
செலுத்தி எங்கள் மெய்ப்பரன்
மேற் சூட்டும் முடியை.

(க-ம். பங்கு.) C. M.

*Praise to Christ.* Rev. xix. 5.

க. இயேசுக்கிறிஸ்தின் நாமத்தை
எல்லாரும் போற்றுங்கள்.
நற்றூதர்போல அவரை
நீர் வாழ்கவென்னுங்கள்.

உ. பசாசினின்று தப்பினோர்
கர்த்தாவைப் போற்றுங்கள்.
அவர்க்குத்தாமே மா நல்லோர்
நீர் வாழ்கவென்னுங்கள்.

௩. பூலோகத்தாரெல்லாருமே
மகிழ்வாய்ப்போற்றுங்கள்.
எல்லாரிலுங் கர்த்தாவுக்கே
நீர் வாழ்கவென்னுங்கள்.

௪. நாம் விண்ணிற் சேர்ந்தபொழுது
என்றைக்கும் போற்றுவோம்.

விண்ணோர்களபோற் கர்த்தாவுக்கு
நீர் வாழ்கவே என்போம்.

(உ-ம். பங்கு.) C. M.

*The same.*

௧. எல்லாருக்கும் மா வுன்னத
கர்த்தாதி கர்த்தரே!
மெய்யான தேவமனித
நீர் வாழ்க, ஏசுவே.

௨. விண்ணிற் பிரதானியாகியும்
பகைஞர்க்காகவே
மரித்ததால் எப்போதைக்கும்
நீர் வாழ்க, ஏசுவே.

௩. பசாசு பாவம் லோகமும்
இச்சத்துருக்களே
அழிந்துபோக அருளும்
நீர் வாழ்க, ஏசுவே.

௪. நீர் வென்றபடி நாங்களும்
வென்றேறிப்போகவே
கடாட்சம் பண்ணி ரட்சியும்
நீர் வாழ்க, ஏசுவே.

84. அ௪-ம். கீதம். 7's.

*The same.* JOHN I. 45.

க. கர்த்தருக்குத் தோத்திரம் :
மீட்பரென்ற வாசகம்
தப்பில்லாமல், நாயனர்
மீட்பனை அனுப்பினர்.

உ. முற்பிதாக்கள் யாவரும்
மற்ற மேன்மை யோர்களும்
சொல்லி ஆசைப் பட்டது,
லோகத்திற் கை க்கூடிற்று.

௩. வாழ்க ஆதி தீபமே!
ஓசியன்ன, சீவனே!
என்னுடைய நெஞ்சிலும்
அன்புடன் பிரவேசியும்.

௪. உள்ளே வாரும் ராயரே!
இஃது உம்முடையதே
பாவமான யாவையும்
நீக்கி என்னை ரட்சியும்.

85. அ௫-ம். கீதம். P. M.

*The same.*

க. ஏசுவே! வானத்தை விட்டிங்கே தோன்றுகிறீரோ?
விண்ணுடன் மண்ணையும் ஒப்புரவாக்க வந்தீரோ?

ஆண்டவரே!
என்னையும் மீட்பதற்கே
மானிட சென்ம மானீரா.

உ. ஆதி த்தகப்பன் இழந்த அனைத்தையும் நீரே.
பூமியில் மானிட சுபாவத்தால் தேடிவைத்தீரே.
மாந்தர்க் குண்டாம்
நோவும் இக்கட்டு மெல்லாம்
தீர இங்குற்ப வித்தீரே.

ஙு. ஏசுவே! என்னிலே நல்லதுணத்தையுண்டாக்கும்
நெஞ்சத்தைத் தேகத்தையுமது ருபுக்கொப்பாக்கும்.
உம்மை நானே.
அன்புடன் போற்ற நீரே.
என்னையுஞ் சாக்கிரதை யாக்கும்.

## அவரின் தொழில்.

### போதிப்பு.

86. அசூ-ம், கீதம். 6-8's.

*Christ our prophet.*

க. வேதார்த்தத்தைக்காட்டுங்குரு!
தெய்வ தீர்க்கதர்சி! வாரும்.
திருவாக்கைத்தெரிவித்து,
ஸ்வாமி! நம்மை ஏவியாளும்.
நீரே உம்மைக் காட்டக்கூடும்:
வேதந்தோன்ற முத்ரா நீக்கும.

உ. இருதய மருள் போக்கி,
ஏசு! திரைச்சீலை நீக்கும்:
தேவர் உமதறிவூட்டி
அதிசய அன்பு காட்டும்.
உள்ளுணர்ந்து செவிசாய்த்து
கேட்கத்தேவே! பேசும் இன்று.

87. ௮௭-ம். கீதம். 7's.

*Christ our high priest.* HEB. VII. 26.

க. ஏசுவே! நீர் உம்மையே
எனக்காய்ப்படைத்தீரோ,
என்னைக்குற்றம் இன்றியே
சுவாமிக்குப் படைப்பீரோ.

உ. மீட்பரோ, நீர் ஒருவர்
உத்தம ஆசாரியர்,
உம்மைக்கொண்டாலன்றியே
பலிசெல்ல மாட்டாதே.

௩. நீர் என் கெட்ட இச்சையை
நீக்கிப்போட்டு மனதை
நோ, அழுக்கு, யாவுக்கும்
தப்புவித்தி ரட்சியும்.

ச. என்னில் ஒன்றும் ஈயவே
இங்கிராமற் போகவே
பீடத்தில் நான் முழுதும்
சுட்டெரிக்கப்படட்டும்.

ரு. அதினாலே உமது
கையினாற் பிதாவுக்கு
நீர் செலுத்தும் பலியே
ஏற்றப்படும் நிசமே.

88. அஅ-ம். கீதம். P. M.

*Christ our Prophet, Priest, and King.*
ACTS, III. 22. HEB. V. PS. XCV. 3.

க. மா தீர்க்கதரிசியே! நீர் அன்பாக
பரம கல்வியைக் கற்றுக்கொடும்,
பாவியைக் கடாட்சிக்கும், போதகராக
வந்த நீர் என்னையுஞ் சேர்த்தருளும்.
சர்ப்பத்தலையை உடைத்த நீர் தாமே;
பாவிக்கு உத்தம போதகராமே.

உ. என் பிரதான ஆசாரியராக
உம்மைப்பணிந்து தியானிக்கிறேன்.
நித்தியமீட்பரே! நீரெனக்காக
மாண்டதால் நீதிமானுக்கப்பட்டேன்.
வானத்திலே நீரென் காரியகர்த்தர்,
என்றைக்கும் என்னை நீர் காக்கச்சமர்த்தர்.

ங. உன்னத அரசா! உம்மைத் துதித்து,
கீதங்களாலும் புகழுகிறோம்,
உம்மைச் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து;
உமக்காதீனங்களாயிருப்போம்.
உம்முட மந்தையைச் சகல நாளும்,
காத்துவிசாரித்து ராச்சியமாளும்.

௪. என்னிலுமுள்ளது உம்மைக்கொண்டாடும்,
உம்முட நேசத்தைப் போற்றுகிறேன்,
என்னுட நாவும் நீர் செய்ததைப்பாடும்.
நானும்அல்லேலூயா ஆமனென்பேன்,
சீவனுடையதெல்லாம் பணிவதாக,
சீவனின் கர்த்தரைப், போற்றுவதாக.

89. ௮௯-ம், கீதம். C. M.

"*The way, the truth, and the life.*" JOHN XIV. 6.

௧. மனதைப் புதிதாக்கிற
ஏசுவே! அடியேன்
தேவழகுக் கொப்பாகிய
சாயல் எப்போதாவேன்?

௨. வழியுஞ் சத்யமுமாய் நீர்
சீவனுமாய் என்னை,
உயிர்த்துணர்த்தக்கடவீர்.
நடத்தும், என் பாதை.

௩. மண் விண்ணிலெல்லாம் இதொன்றை
எனக்கு அளியும்.
ஒரோ ரட்சகராயும்மை
அறிவதைத் தாரும்.

௪. அன்பின் சீவனை எனக்கு
தந்தென்னை உமக்கும்
தேவ ஐக்கத்தாலடுத்து,
என்றைக்கும் நேசியும்.

௫. இப்போ அந்நேசந் துவக்கி
உமக்கு நான் என்றும்
பிரிந்து விடாதபடி,
காப்பாற்றியருளும்.

90. ௯௰-ம். கீதம். C. M.

*The same.*

௧. மெய் வழி நீரோ, ஏசுவே!
நீர் பாவநாசராம்:
பிதா விடத்திற் சேர்வதே,
உமதிரக்கமாம்.

௨. நீர் தாமே மெய்ம்மையாகையால்
நீர் சொல்லல் ஞானந்தான்,
அதினுடைய சோதியால்
என் நெஞ்சு ஒளியாம்.

௩. கர்த்தாவே நீர்தான் சீவனும்
என்றும் பிழைக்கிறீர்
உம்மையே பற்றியாவரும்
பிழைக்கப் பண்ணுவீர்.

௪. ஆ! வழி மெய்ம்மை சீவனும்
உடைய ஏசுவே!
என்னை நடத்திப் போதியும்
என்றைக்கும் வாழவே.

91. ௯௧-ம். கீதம். P. M.

*The same.*

௧. கடாட்சமுள்ள ஏசுவே!
என் நெஞ்சை நீர் நன்றாக
சந்தோஷிப்பித்து, என்னிலே
மிகுந்த ஊக்கமாக
தெய்வீக அன்பை ஊற்றிய
தயையினாலே, உத்தம
புகழ்ச்சி சொல்வேனாக.

௨. கதிக்குப் போகும் மார்க்கம் நீர்:
அதற்குள்ளான யாரும்
தப்பார்கள்: கை கொடுக்கிறீர்.
பிரிந்துள்ளோர்எல்லாரும்
அழிந்துபோகுவார்களே.
நடத்தும் சுவாமி! உம்மிலே
நிலைக்க, என்னை ஆளும்.

௩. யதார்த்தம் நீர்: நான் உம்மையே
தெரிந்து கொண்டிருப்பேன்.
பொருளும் சாரமும் நீரே:
பொய்யானதை வெறுப்பேன்:
உம்மாலே பாக்கியம் வரும்.
மெய்யே என்னெஞ்சை என்றைக்கும்
உமக்கு நான் கொடுப்பேன்.

அவரின் மாதரி காண்பிப்பு.

92. கூஉ-ம். கீதம். P. M.

*The example of Christ.*

John xiii. 15. 1 Pet. ii. 21. 1 John ii. 6.

(க-ம். பங்கு.)

க. மாசில்லாமல் துய்யதான
பளிங்கிலேயுந் தெளிவான
சுத்தாங்க ஊற்றே ஏசுவே!
கேருபீன்கள் துய்யசீரின்
பிரகாசம் யாவுந் தேவரீரின்
முன்பாக மங்கிப்போகுமே:
என்பாவத்தின் இருள்
அனைத்தும் உமக்குள்
துலையட்டும்.
ஆ! ஏசுவே!
நான் உமக்கே
ஒப்பாய்ச் சுத்தாங்க மாகவும்.

உ. மனசார சாவுமட்டும்
பிதாவின் சித்தமே யாகட்டும்.
என்றீர், அமர்ந்த ஏசுவே!
என் மனமும் தெய்வசித்தம்
என் நன்மை யென்றதற்கு நித்தம்
கீழ்ப்பட்டடங்க உம்மையே:
பின்பற்றத் தேவரீர்
சகாயம் பண்ணுவீர்.
என் நோவிலும்
என் ஏசுவே!

நான் உமக்கே
ஒப்பாய் அமர்ந் திருக்கவும்.

௬. ராப்பகல் உறக்கமற்று
நன்மேய்ப்பராய்ப் வருத்தப்பட்டு
நன்றாய்விழித்தீர் ஏசுவே !
நித்தம் நித்தம் போதிவித்தீர்
சேபத்தில் ராவிலுந் தரித்தீர்.
மங்காவெளிச்சக் கண்ணனே :
விழித்துக் கெஞ்சவே
நானும் மிடத்திலே
படிக்கட்டும்
ஆ ! ஏசுவே !
நானுமக்கே
ஒப்பாய் விழித்திருக்கவும்

(உ-ம். பங்கு.) P. M.

*The same.*

க. நீர் நிறைந்த நேசமுள்ளோர்,
எல்லாரின் மேலுந் தயவுள்ளோர்,
மகா அன்புள்ள ஏசுவே !
உம்மால்தீயோர் பேரிலேயும்,
பகல் உதித்தும், மாரிபேயும்
பேரியவுபகாரியே.
ஆ ! இந்தவுமது
குணம் என்மனது
அடையட்டும்
என் ஏசுவே !

நான் உமக்கே
ஒப்பாய் அன்பாயிருக்கவும்.

௨. குற்றமன்றிக் குரோதமற்று,
எல்லா இகழ்ச்சியையும் பட்டு
மன்னித்தீர் சாந்த ஏசுவே!
தெய்வ வீட்டுக்காய் அல்லாமல்
நீர் வேறெரிச்சலைக் காட்டாமல்
இருந்தீர், ஆட்டுக்குட்டியே!
நான் அந்தப்பத்தியாய்
மிகுந்த சாதுமாய்
இருக்கட்டும்.
ஆ! ஏசுவே!
நான் உமக்கே,
ஒப்பாகச் சாந்த மாகவும்.

௩. சுயமேன்மையைத் தேடாமல்
ஒரு மேட்டிமையையுங் காட்டாமல்
மா தாழ்மையானீர், ஏசுவே,
வேலைக்காரன்போலத் திரிந்தீர்,
எல்லாரிலும் நீரோ பணிந்தீர்
மகாபெரிய கர்த்தரோ!
ஆ! என்னையும்முட
அடிகளில் வரப்
படிப்பியும்.
என் ஏசுவே,
நான் உமக்கே,
ஒப்பாகத் தாழ்மையாகவும்.

(ரூ-ம். பங்கு.) P. M.

*The same.*

க. சுத்த சுத்தத்தின் மெய்யான
கண்ணுடி மாதிரியுமான
கற்புள்ள ஏசுகிறிஸ்துவே!
உம்மில் நெஞ்சும் வசனிப்பும்
முக நடையுஞ் சஞ்சரிப்பும்
எல்லாஞ் சன்மார்க்கத்துய்யமே
என் தேகம் ஆத்துமம்
எல்லாம் உம்மால்குணம்
அடையட்டும்;
என் ஏசுவே!
நான் உமக்கே,
ஒப்பாய்க் கற்புள்ளோனுகவும்.

உ. நீரோசாப்பிட்டுக் குடித்த
விதமும் மேரையும் நல்திட்டப்
பிரமாணமாகும் ஏசுவே!
நீர் பிதாவின் சித்தமான
படியே செய்வதுமக்கான
ஆகாரமா யிருந்ததே.
அடியேன் இவ்விதப்
பிரமாணமாய் வரத்
துணைக்கிரும்,
ஆ! ஏசுவே!
நான் உம்மிலே,
நல்ல மேரையுள்ளோனுகவும்.

௩. தேவரீருடை பிரிய
தெய்வீக சாயலை அணிய
இச்சிக்கிறேன், என் சீவனே!
அதுக்குமதாவியாலும்
பலத்த சத்துவத்தினாலுஞ்
சகாயஞ் செய்யும், ஏசுவே!
நான் உமக்கேற்கிற
கனிகளைத்தர,
எக்காலமும்,
நான் உம்மிலே,
நிலைக்கவே,
சகாயங் கட்டளையிடும்.

93. ௯௩-ம். கீதம். 7's.

*"They follow me."* JOHN x. 27.

௧. உம்மை, ஆட்டுக்குட்டியே!
எனதாவி தேடுமே;
எப்போதுமதடியேன்
உமக்கேற்றேனாகுவேன்.

௨. நான் ஓர் ஆட்டுக் குட்டியாய்,
சாந்தமுள்ள விதமாய்,
என் உள்ளத்தை உமக்கே
படைப்பேன், என் கர்த்தரே!

௩. எனக்கு என் நோவிலும்,
வருத்த இக்கட்டிலும்,

ஏசு! திடன்தாரும்: நான்
அதால், உம்மைப்பற்றுவேன்.

ச. பாவத்துக்குத்தூரமாய்
தேவரீரை உண்மையாய்
என்றென்றைக்கும் யாவிலும்
நான் பின்பற்ற அருளும்.

ரு. மோட்சத்தில் உம்மண்டைதான்
மாசில்லாதோனாக, நான்
நிற்கவும் என்றென்றைக்கும்
உம்க்கே இஸ்தோத்திரம்.

94. கூசு-ம். கீதம். L. M.

*"My dear redeemer and my Lord."*
I Peter ii. 21.

க. பிரியமீட்பர், கர்த்தரோ!
உன் வாக்கிலே என் ஒழுக்கம்,
உன் தொழிலோ பிரமாணமே
உயிரெழுத்தைப் போற்காணும்.

உ. உண்மையும், வைராக்கியமும்,
அன்பும், திவ்விய சாந்தமும்,
பிதா உள்ளத்துக் கனமும்,
எழுதி எனதாக்கவும்.

ங. குளிர் குன்றும், சாமக்காற்றும்,
திடசாட்சி உன் செபமே:

வனமே, சோதனை, சேயம்,
உபத்திரமும், பார்த்ததே.

௪. நீர் என்மாதிரியா யிரும்:
இன்னும் தாரும் தயவுருபே:
ஆட்டைப் பற்றினவரோடும்
சுத்த தேவென்னைச் சேர்ப்பாரோ.

*அவரின் அன்பும் மீட்பும்.*

95. கூடு-ம். கீதம். C. M.

"*Christ also hath loved us, and hath given himself for us.*" Ephes. v. 2.

க. மீட்பரோ! நீர் ரத்தத்தினுல்
மீட்டோரை எண்ணீரோ?
உம்மைத்தாம், உமதாவியால்,
அறிவியும், இப்போ.

௨. பூர்வீகத்திற் பாடுபட்ட
தேவகுமாரனும்
ரத்தஞ் சிந்தினவராக,
தரிசினை தாரும்.

௩. உமது கை கால் விலாவும்
அன்பாகக் காண்பியும்
எங்கள் மனதின் கடினம்
நீக்கியருள் செய்யும்.

௪. மரத்திலே பாவந்தாக்க
கால் அறையுண்டது:

பகைஞரை ஏற்றுக்கோள்ள,
கை நீட்டப்பட்டது.

௫. திறந்த கிணருகவே
உமது விலாவும்,
கழுவ வேண்டுவோருக்கே
சுகத்தை உண்டாக்கும்.

௬. உமதுவாக்கை ரூபிக்க,
ரத்தத்தால் என்னையும்,
கழுவி, நான் உம்மை நம்ப
உதவியைச் செய்யும்.

96. ௯௬-ம். கீதம். 6-8's.

*Praise for redeeming love.* Rev. i. 5-6.

௧. நான் உம்மைத் துதிப்பதற்கு
என்னத்தைச்சோல்லத் துணிவேன் ?
பாவ நரகத்தில் நின்று
உம்மாலே ரட்சிக்கப் பட்டேன்.
தரும் ஸ்தோத்திரஞ் செலுத்தி
கோண்டாடுவதேப்படி ?

௨. நீர் காட்டின தயவேல்லாம்
நான் வர்ணிப்பது கூடாதே.
பசாசின் பிள்ளையான நான்
கர்த்தரின் பிள்ளை யானேனே;
பாவமன்னிப்புணர்வது
மோட்சத்தின் துவக்கமிது.

௩. என் பிதாச் செய்த தயவை
எண்ணுமலுஞ் சொல்லாமலும்
இருப்பேனே ? என்சிலுவை
பாரமானதா யிருந்தும்,
அதேடுக்காமற் போவேனே ?
அவர் நீதி மறைப்பேனே ?

௪. இல்லையே, பழைய பாம்பும்
தன்சேனையும் எதிர் நின்று
பாவமனிதரெல்லாரும்
கூடினுலும், நான் துணிந்து
ஏசு எல்லார்க்குங் காட்டுவேன்:
ரட்சகனை நான்துதிப்பேன்.

௫ கெட்டோரிலுங் கெட்டவரே !
உங்களைக் கூப்பிடுகிறார்:
தங்களைத் தாழ்த்திஞேர்களை
தயவாய் அங்கீகரிப்பார்:
நீதிமான்களை அல்லவே,
பாவியைமீட்க வந்தாரே.

௬. பாவத்தின் பாரஞ் சுமந்து
இளைத்தோரே ! நீங்கள் வந்தால்,
அவர் அடைக்கலந் தந்து
காப்பாற்றுவாரே : ஆகையால்,
அவர் தயவைத் தேடுங்கள்:
அவரண்டைக்கு வாருங்கள்.

எ. அவர் விலாவால் உதிரம்
உங்களுக்காய்ச் சிந்தினது.
தேவசுதனின் மரணம்
உங்கள் நிமித்தமானது ;
பாவமன்னிப்பும் மோட்சமும்
விசுவாசத்தாற் கிடைக்கும்.

97. ௯எ-ம். கீதம். 6-8's.

"*Herein is love.*" 1 JOHN IV. 10.

க. பாவிகளே ! ரட்சகனை
சுவிசேஷங் காண்பிக்குது :
பூரணமான கிருபை
எல்லார்க்கும் அவரில் உண்டு.
கர்த்தர் நேசர் தானேன்பது
அவரினால் விளங்குது.

உ. லோகத்தின் பாவஞ்சுமந்து
தீர்த்தவனைக் கண்ணோக்குங்கள் :
ஏழையாக இங்கேவந்து
பூண்ட தாழ்மையைப் பாருங்கள் :
பிதாவோடொத்தவர் இவர்
மெய்யான மனிதனானர்.

௩. மனிதனான மெய் கர்த்தர்
நாடோறும் அவர் கை நீட்டி
கிருபையால் நிறைந்தவர்,
வாருங்கள் உங்களைத்தேற்றி

ஆசீர்வதிப்பேனென்கிறார்:
நம்புவோரைக் காப்பாற்றுவார்.

ச. வேற்றுமையில்லை ; கிருபை
எவனுக்கும் நான் கொடுப்பேன்:
என்னிடம் வரும் பாவியை
என்றுந்தள்ளிப் போடமாட்டேன்.
பாவிகள் கெட்டுப்போவதேன் ?
ஆரையுந் தள்ளவே மாட்டேன்.

98. கூஅ-ம். கீதம். L. M.

"*The unsearchable riches of Christ.*" EPHES. III. 8.

க. அற்புத, தெய்வ இரக்கம்,
பிதா, இரங்கி, உலகம்
சீர்கொள்ள ஏகமைந்தனை
கொடுத்ததே, மகா தயை!

உ. பாவிகள் யார்க்கும் ரட்சகர்
பலியானார், மகாநேசர்!
மரித்துப், பாவ நீக்குதல்
உண்டாக்கினார், இம்மானுவேல்.

ரு. கர்த்தாவின்அன்பை, மீளவும்
மாளாதமோட்ச வாழ்வையும்,
எல்லாருக்கும் சம்பாதித்தார்:
கொடுப்போமென்றும் நிற்கிறார்:

ச. இவ்வாழ்வை நீ விரும்பினால்,
தேவாவிசெய்யுந் துணையால்
உன்பாவத்தை விட்டழுது
மெய்மனஸ்தாப் பட்டிரு.

ரு. அதால் உன்பாவம் நீங்குமே.
குமாரன் நீதி உன்னதே:
பிதாவின் பிள்ளை யாகுவாய்;
தேவாவியையும் பெறுவாய்.

99. கூகூ-ம். கீதம். 6-8's.

"*O the depth of the riches &c.*" ROM. XI. 33.

க. ரட்சகரின் ரத்தத்தால் நான்
ரட்சிப்படைவதெப்படி?
அவரைக்கொன்றோருக்காய்த்தான்
மரித்தாரோ? இதெப்படி?
நீர் எனக்காய் மரித்தது
சகல அன்பிலும் அன்பு.

உ. இது தேவ ரகசியம்:
இதை ஆராய்பவர்கள் ஆர்?
உன்னத ஞான வானோரும்
தேவன்பை அளவறுக்கார்,
பரம இரக்கம் இதே!
வணங்குங்கள், லோகங்களே!

ங. மோட்ச ஆசனத்தை விட்டு
அன்பே அதற்கு காரணம்

மற்றெல்லாத்தையும் மறந்து
அகோரமான மரணம்
பரித்ததால், எல்லாரையும்
மீட்டார், இதல்லோ இரக்கம் !

ச. என் சுபாவம், பாவம், அதால்
கட்டப்பட்டு நான் கிடந்தேன்.
நீர் பிரகாசித்ததினால்,
என்சிறையில் ஒளிகண்டேன்.
விலங்கைவிட்டு நீங்கினேன்.
எழுந்தும்மைப் பின்தொடர்ந்தேன்.

ரு. இப்போ ஒன்றுக்கஞ்சமாட்டேன்,
ஏசுவோடெல்லாம் எனது
அவருக்குள்ளே பிழைப்பேன்,
அவர் நீதியைத் தரித்து.
கர்த்தர் ஆசனம் நாடுவேன்:
சீவ கிரீடத்தை வாங்குவேன்.

100. ௱-ம். கீதம். 4-8's & 2-6's.

"*Love is strong as death.*" CANT. VIII. 6.

க. தேவ அன்பே ! நீர் இனிமை.
உமக்கேன் முழு மனதை
கொடுக்கக்காக்கிறேன்.
கிறிஸ்த்துவின் அன்பின் அளவை
அறிவதே எனதாசை.
நான் அறியாமலேன் ?

௨. அவரின் நேசஞ் சாவிலும்
நரகத்திலும் பலமும்
ஆழமுமானது.
அதை ஆராயுந் தூதர்கள்
சோதித்தாலும் அறியார்கள்:
ரகசியம் அது.

௩. தேவன்பை அறிபவர் நீர்,
என்மேல் இரங்கக்கடவீர்,
அதை என்னில் ஊற்றும்.
நான் ஏங்கிக்கேட்கும் அன்பினால்
என்னை நிரப்பி ஆவியால்
என்னில் தரிப்பியும.

௪. உம்முடைய பாதத்திலே
நான் என்றைக்கும் இருப்பதே
என் ஒரே விருப்பம்.
உமது சத்தங் கேட்பது
எனக்கு இன்பங் களிப்பு.
என் மோட்ச பாக்கியம்.

101. ௱க-ம். கீதம். S. M.

"*The love of Christ constraineth us.*" 2. Cor. v. 14.

௧. ஏசுவே! தேவனை
மனிதனையும் நீர்
நேசித்த அன்பினால் என்னை
உடுத்தக்கடவீர்

௨. உமது ஆவியே
என்னில் தங்கச் செய்யும்:
அதால் என் வைராக்கியமே
நேசமா யிருக்கும்.

102. ௱௨-ம். கீதம். 8, 7, 4.

*Redeeming love.* 1. TIM. I. 15.

௧. லோகத்தாரின் வாஞ்சையான
சுவாமி ஏசு கிறிஸ்துவே!
தேவரீருக்கேற்றதான
சித்தத்தோடு போற்றவே:
என்னிடத்தில்,
திராணியைக் கடாட்சியும்.

௨. நானும் மற்ற மக்கள் யாரும்
மோட்ச மற்றுப் போயினோம்:
லோகத்துள்ளவரெல்லாரும்
சாபத்தில் அகப்பட்டோம்:
அதை நீக்கி,
மோட்சம் ஈயத்தோன்றினீர்.

௩. பாவியாக நான் கிடக்கில்
கட்ட விழக்க ஏற்பட்டீர்:
துன்ப பாரத்தைச் சுமக்கில்
ஆற்றல் செய்திரட்சித்தீர்:
நானேளியன்,
என்னைச் செல்வனாக்கினீர்.

ச. அப்பொருட்டு நீர் பிறந்து
ஏழைமையிலுட் பட்டீர்
நீதியோடு நீரே வந்து
துன்பத்திற் பிரவேசித்தீர்.
இந்த அன்பு,
யோசனைக் கெட்டாதது.

ரு. நான் அதை நினைப்பேனாக
கர்த்தரோ யென் மனது,
அன்பினால் நிறைந்ததாக
செய்ய வேண்டுகின்றது.
ஆ! என் மீட்பர்,
தோத்திரிக்கப் பட்டவர்.

103. ௱௩-ம். கீதம். C. M.

"*Thou knowest that I love thee.*" JOHN XXI. 15.

க. அடியேனுக்கு, ஏசுவே!
நீர் செய்த கிருபை,
நான் உம்மை நம்பும் படிக்கே
எனக்கு நற்கொடை.

உ. மிக உயர்ந்த விதமாய்
நீர் எனக்கும்மையே
அளவில்லாத நேசமாய்
அருளிச் செய்தீரே.

௩. ஆ! என்னிலுள்ள நெஞ்சையே
உண்மையாய் அடியேன்

எனதேன்றெண்ண மாட்டேனே:
உமக்குத் தருவேன்.

ச. உம்மிலே நானும், மீட்பரோ!
இனி என்றென்றைக்கும்
தரித்திருக்க என்னிலே
நீருந் தரித்திடும்.

ரு. அப்போது நான் வாழுவேன்:
என்று உம்முடனே
குறைவில்லாமல் அடைவேன்
நித்திய களிப்பே.

104. ாசு-ம். கீதம். 8's & 7's.

*"Love divine all loves excelling."*
Ephes. iii. 16-21.

க. தேவ அன்பே! மோட்ச பாக்கியம்
தரப் பூமிக்கு வாரும்.
உமது மெய்யான வாக்கியம்
நம்பும் எங்களில் இரும்.
ஏசுவே! நீர் பரதாபம்
அன்புமாயிருக்கிறீர்.
வந்து எங்கள் மனஸ்தாபம்
நீக்கிப், போடக் கடவீர்.

உ. உமது அன்புள்ள ஆவி
துக்கித்தோருக்குத், தாரும்.

பரிசுத்தத்தையும் பாவி
   உம்மால் அடையச்செய்யும்.
பாவ ஆசை எல்லாம் நீக்கி,
   எங்களை இரட்சியும்.
விசுவாசத்தைத் துவக்கி
   முடிப்பவராயிரும்.

௩. சர்வ வல்லவரே! வாரும்,
   நாங்கள் உமதாலயம்.
எவர்க்குங் கிருபை தாரும்.
   என்றும் விலகாதேயும்.
என்றும் உம்மை ஸ்தோத்திரித்து
   வானோர்போலே சேவிப்போம்.
குறைவில்லா அன்பைப்பெற்று
   ஒழியாமல் துதிப்போம்.

௪. கறை குற்றம் அற்று நாங்கள்
   சுத்தராகும் படிக்கு;
புதுச் சிஷ்டிப்பின் வரங்கள்,
   எங்களுக்குக் கொடுத்து,
நாங்கள் மோட்சக் கரையேறி
   வானோராகும் வரைக்கும்,
தேவ சாயலுக்கு மாறி
   தேறும்படி அருளும்.

105. ௧௦௫-ம். கீதம். L. M.

*"The fire shall ever be burning upon the altar: it shall never go out."* LEV. VI. 13.

க. அன்பின் அக்கினி மனதில்
கொளுத்த வந்த ஏசுவே!
எரியுஞ் சுவாலை என்னில்
பற்றுவிக்க இரங்குமே.

உ. என்செய்கை வாக்கு நினைவு
உமதாக என் விருப்பம்,
உள்ளெரியுஞ் சுத்த அன்பு
அதற்கொன்றான காரணம்.

௩. நம்பிக்கை அன்பு முதலாய்
உமது சித்தம் என்னிலே,
மரணமட்டும் நிறைவாய்
செய்யப் படட்டும் ஏசுவே.

106. ௧௦௬-ம். கீதம். P. M.

*"The great shepherd."* HEB. XIII. 20.

க. ஆடுகளின் உண்மையான
மேய்ப்பரே, இரங்குமேன்.
நானும் உம்மைச்சேர்ந்த தான
உமதாடாகட்டுமேன்.
ஆடுகளுக்காய் அன்பாலே
சீவனை நீர்தந்ததாலே

என்னையும் மீட்டீரல்லோ?
அந்த அன்புக்கொப்புண்டோ?

௨. மந்தைக்கும் நல்லமேய்ப்பனுக்கும்
ஒன்றுக்கொன்று அன்புண்டே:
அப்படி யிங்கேயிருக்கும்
என்மேல் நேசத்தை நீரோ:
வைக்கும்போது உம்மை நானும்
என் கர்த்தாவும் எசமானும்,
என்று பற்றி உம்மையே:
நேசிப்பேன் என் நேசரோ.

௩. தங்கள் மேய்ப்பனை நன்றாக
ஆடுகள் அறியுமே:
மேய்ப்பனும் மா திட்டமாக
தன்னுட மந்தையிலே,
எந்த ஆட்டையும் அறிந்து
காக்கும்போல் ஓனய் திரிந்து
பிறப்பார்த்த என்னை நீர்
காத்துக்கொண்டிருக்கிறீர்.



௪. மேய்ப்பன் காட்டுஞ் சத்தத்திற்கு
ஆடுகள் செவிதரும்;
ஆடு கூப்பிட்டால், அதற்கு
மேய்ப்பன் கவனிப்பதும் உண்டு.
ஆ! நீர் சத்தமிட்டால் கேழ்ப்பேன்.
என்னை நீர் கண்டித்தால்,
சீர் அடைவேன் எனக்கும்
அன்பாய் நீர் செவிகொடும்.

௫. ஆம்-நான் கூப்பிட்டால் நீர் கேளும்,
உண்மையுள்ள மேய்ப்பரே:
மந்தையில் ஒவ்வொன்றின்மேலும்
மூர்க்கமாந்தோண்டானுக்கேதப்ப,
உம்மைக்கருத்தாக,
நான் மன்றுடுவதற்காக
என்னை ஏவும் என்னை நீர்:
அப்போ தாற்றித் தேற்றுவீர்.

௬. எனதாவியும்மைப் பற்றும்
கர்த்தரான ஏசுவே!
வேண்டிக்கொண்டு தேடித் தட்டும்
என்னைத் தயவுடனே:
கேட்டு ஆதரிப்பீரென்றும்,
உம்மால் நான் சுகிப்பேனென்றும்,
ஏசுவே! நான் நம்பினேன்,
நம்பி ஆமன் என்கிறேன்.

107. ௱எ-ம். கீதம். C. M.

*"None other name given under heaven."*
ACT. IV. 12.

௧. எங்கள் முயற்சிப் பலனால்
நாம் சயங்கொள்ளோமே:
நீர் சிந்தின இரத்தத்தால்,
வெல்வோம், நல்மீட்பரே!

௨. நாம் மீறி விட்ட கற்பனை,
இடிமுழக்கமாய்

நாசப்படுத்தும் எங்களை,
கர்த்தாவின் முனிவாய்.

௩. என்றாலும், நமக்காகவே,
நீர் வந்து மரித்தீர்.
பாவத்தைப் போக்கும் பலியே!
என்றைக்கும் வாழுவீர்.

௪. கர்த்தாவே! நீர் மரித்ததால்,
வாழ்ந்து பிழைக்கிறோம்:
நீர் அருளிய பலியால்
ரட்சிப்பை அடைவோம்.

௫. இவ்வாழ்வு, சீவன் முத்தியும்,
கிடைக்குங் காரணம்
நீர் பட்ட பாடு மரணம்:
உமக்கே வந்தனம்.

108. ௱அ-ம். கீதம். L. M.

*Salvation by Christ.* Acts v. 31.

க. மகா! சிநேகம் அற்புதம்
பிதா இரங்கி உலகம்
சீர்கொள்ள ஏகமைந்தனை
கொடுத்ததே மகா தயை!

உ. பொல்லாருக்காக இவரோ
பலியாய்ச் சிலுவையிலே,

மரித்துப் பாவ நீக்குதல்
உண்டாக்கின இம்மானுவேல்.

௩. கர்த்தாவின் அன்பை மீளவும்
மாளாத மோட்ச வாழ்வையும்,
எல்லாருக்குஞ் சம்பாதித்தார் :
கொடுப்போமென்றும் நிற்கிறார்.

௪. இவ்வாழ்வை நீ விரும்பினால்
தேவாவியின் ஒத்தாசையால்,
உன் பாவத்தை விட்டழுது
மெய்ம் மனஸ்தாபப்பட்டிரு.

௫. அப்போதுன்பாவம் நீங்குமே
குமாரன் நீதி உன்னதே :
பிதாவின் பிள்ளையாகுவாய்
தேவாவியையும் பெறுவாய்.

109. ௱௯-ம். கீதம். L. M.

*Praise to Christ for salvation.* LUKE. I. 68--75.

க. கர்த்தாதி கர்த்தராகிய
உலோகசோதியாகிய,
இயேசுதேவனுருக்கு
புகழ் உண்டாகத்தக்கது.

உ. விரும்பப்பட்ட தேவரீர்
அன்பாக வந்திருக்கிறீர்.

சபை எல்லாம் அன்பாகவே
உம்மைத் துதிக்க நியாயமே.

௩. கடலுக்கெல்லையை வைத்தீர்.
எல்லாவற்றையும் பண்ணினீர்.
அணையிற் புல்மேல் ஏசுவே !
படுக்கவைக்கப் பட்டீரோ.

௪. நரர்களுக்குத் தீமையை,
நீரோ விலக்கிக் கஸ்தியை,
சகித்ததால் அவருக்கு
அனந்த நன்மை வந்தது.

௫. சந்தோஷித் தும்மைப் பற்றினேன்,
உம்மால் ரட்சிப்பைக்கொள்ளுவேன் ;
உம்மால் என் பாவஞ் சாபமும்
எல்லா இக்கட்டும் நீங்கிடும்.

௬. தராதலத்தில் தினமும்
பரத்தில் நித்த நித்தமும்
சந்தோஷத்தோடே வாழுவேன்,
புகழ்ச்சியைச் செலுத்துவேன்.

110. ாய-ம். கீதம். L. M.

*The universality of the atonement.* Heb. ii. 9.

க. ஏசு ! மரித்தோர் யாவரையும்
மீட்க, வழியைத்திறந்தார் :
அவரை வெறுப்போரையும்,
ரட்சிக்கச் சீவனை விட்டார்.

உ. உம்முடைய தயவடைய,
ஆரும் அஞ்சாமல் நம்பலாம்.
நாங்கள் நம்பாமலிருக்க,
நீரோ மாறாத இரக்கமாம்.

௩. எழும்பி உலகத்தாரை
சுவிசேஷத்தாற் கூப்பிடும்:
யாரையும மீட்டீரோன்பதை
எல்லாரும் நம்பவே செய்யும்.

அவரின் பாடுகள்.

111. ௱௧௧-ம். கீதம். L. M.

*Sufferings and death of Christ.* 1 Pet. ii. 24.

க. மரித்த கிறிஸ்தின் ஆவியும்,
வதைக்கப்பட்ட தேகமும்,
என் ஆவியை உயிர்ப்பித்து,
என்றைக்கும் காக்கத்தக்கது.

உ. அவர் விலாவிற் காயமும்,
பொழிந்த நீரும், ரத்தமும்,
என் ஸ்நானமாகிப், பாவமே,
இராமற் போக்கத் தக்கதே.

௩. அன்புள்ள ஏசுக்கிறிஸ்துவே!
ஒதுக்கம் உம்மிடத்திலே:
விரும்பித்தேடும் என்னையும்,
மறைத்துக்கொண்டு, ரட்சியும்.

௪. என்னுவிப் போகும் நேரத்தில்,
அதை நீர் தேற்றி மோட்சத்தில்
என்றைக்கும் உம்மைப் போற்றவே:
அழைத்துக்கொள்ளும், கர்த்தரோ.

112. ௱௧௨-ம். கீதம். 8. 7. 4.

*The same.* EPHES. II. 5.

௧. எனக்காகும் சாவின் சாவே!
என்னுயிர்க்கும் சீவனே!
என்னை மீட்க, நீர், கர்த்தாவே!
தேவகோபத் தீயிலே
பாய்ந்ததாலே,
உமக்கே இஸ்தோத்திரம்.

௨. கேட்டுக்கான பாவத்துக்கு
என்னை நீங்கலாக்கவே;
உம்மைத், தீயோர் இஷ்டத்துக்கு,
நீரோ ஒப்பிவிக்கவே,
கள்ளன் போலக்
கட்டுப்பட்டுப்போனீரோ.

௩. நான் உபத்திரப்படாமல்
பூரிப்பாய் மகிழவே,
சொந்த இன்பத்தைப் பாராமல்
வாதிப்பாரின் இச்சைக்கே
நீர் இணங்கி
தூக்கப்பட்டுப்போனீரோ.

ச. மீட்பரே! மகா அன்பாக
நீர் புறம்பும் உள்ளேயும்.
சீவன் போகும் அளவாக
பட்டபாடனைத்துக்கும்,
என்ன சொல்வேன்?
என்றென்றைக்கும் போற்றுவேன்.

113. ௱யரு-ம். கீதம். S. M.

*Christ our sacrifice.* Ephes. v. 2.

க. யூதர் பீடத்தண்டை
குருவிட்ட பலி,
நீக்காதாத்துமத்தின் கறை;
செய்யா மனே சுத்தி.

உ. கிறிஸ்து தேவ பலி!
மகா மேன்மையாகும்.
அவர் சிந்தும் ரத்த சத்தி,
பாவமெல்லாம், போக்கும்.

ரு. இதை நம்பிக்கொண்டு,
சாபம் விட்டு நீங்கி,
ஆட்டுக்குட்டியன்பைக்கண்டு,
செய்வோம், நாங்கள், துதி.

114. ௱௰சுடம். கீதம். C. M.

*"Behold the Lamb of God."* John i. 29.

க. மனிதரின் ரட்சகனை,
மரத்தில், நோக்குங்கள் :
எவ்வளவாய், உங்களை
நேசித்தார் ; பாருங்கள்.

உ. பூமியிற் கல்லும் பிளந்து,
ஆலயத்தின் திரை
கிழித், தவர் பெருமூச்சு,
அசைக்கு துல்கை.

௩. முடிந்த தேன்று தலையை
சாய்த்து, என்னுத்துமம்
ஏற்றுக்கோள்ளுமேன்றுலகை
மீட்டார், சர்வாலயம்.

ச. மரணத் தீவிலங்கை
சீக்கிரத்தில் உடைத்தார்.
ஏசுவே ! உமது அன்பை,
சோல்லத்தக்கவன் ஆர் ?

115. ௱௰ரு-ம். கீதம். 7. & 6.

*The sufferings and death of Christ.*
Luke xxiii. 13--56.

(க-ம். பங்கு.)

க. இரத்தம் காயங்குத்தும்
நிறைந்து, நிந்தைக்கே

முட் கிரீடத்தாலே சுற்றும்
சூடுண்ட சிரசே,
முன் கன மேன்மை கொண்ட
நீ லச்சை காண்பானேன்?
ஐயோ! வதைந்து நொந்த
உன் முன் பணிகிறேன்.

உ. பூலோகமும் பணியும்
முகத்தின் மேனியே!
ஏன் உன்னைத்தான உமிழும்
தீழ்ப்பாகும் தந்தமே!
ஐயோ! நீ வேறுபட்டாய்,
பரவெளிச்சமாம்
கண் சோதி மா! இக்கட்டாய்,
இருண்டும் மங்கலாம்.

௩. அன்புள்ள கன்ன ரூபும்
உதட்டுவர்னமும்,
வெட்டுண்ட புல்லும் பூவும்
போலவே உலரும்.
மா! கர்த்தரோ, நீர் தாமே
மடிய வேண்டுமோ?
அழிக்கப்பட நானே
நேரஸ்த்தனல்லவோ?

ச. நீர் பட்ட வாதை யாவும்
என் பாவ பாரமே,
இத்தீங்கும் நோவும் சாவும்
என் குற்றம் கர்த்தரோ!

இதோ! நானென்றுஞ் சாக
நிதானம் என்கிறேன்,
ஆனால் என்மேல் அன்பாகக்
கண்பார்வை யாகுமேன்.

(உ-ம். பங்கு.) 7. & 6.

*The same.* 1 PET. II. 24-25.

க. என் ஏழை மனதுக்கு
நீர் பாடுபட்டதே,
மகா! சந்தோஷத்திற்கு
பலிக்கும் மீட்பரோ,
என் சீவனே நான் கூடி
இச்சிலுவையிலே
உம்மோடே கண்ணை மூடி
மரித்தால் வாசியே.

உ. நான் உம்மைத் தாழ்மையாக
வணங்கி நித்தமே,
நீர் பட்டகஸ்திக்காக
துதிப்பேன், ஏசுவே!
நான் உம்மில் ஊன்றிநிற்க
சகாயமா யிரும்:
நான் உம்மிலே மரிக்க
நீர் கட்டளை யிடும்.

ரு. நான் மாளும் காலம் வந்தால்,
பிரிந்திராதேயும்.

நான் தோய்ந்து போய்க்கிடந்தால்,
தரிசனை கொடும் :
என் மனக்கிலேசமேத்த
பாடாம் எந்நேரமும்,
நீர் சிந்தின ரத்தத்தின்
பலத்தால் ரட்சியும்.

ச. என் மூச்சோடுங்கும் அந்த
கடை இக்கட்டிலும்,
நீர் என்க்காய் இறந்த
ரூபாகக் காண்பியும் ;
அப்போ நான் உம்மைப் பார்த்து,
கண்ணேக்கி, நெஞ்சிலே
அணைத்துக் கொண்டு காத்து,
தூங்கட்டும், ஏசுவே.

116. ௱யசா-ம். கீதம். C. M.

*"Alas! and did my Saviour bleed?"* Rom. v. 8.

க. மரித்தாரோ என்னாண்டவர்
ஆ! ஆருக்காகவே ?
மரித்தாரோ என் ரட்சகர்,
ஆ! எனக்காகவே ?

உ. மரத்தில் தூங்கிச், சீவனை
விட்டார் என் ஏசுவே :
நம்பாவத்துக்கிப் பலியை
கொடுத்தார், பாவியே.

௩. நான் எண்ணி எண்ணி வருகில்,
என் னேசம், ஊக்கமாய்
கொழுந்து விட்டு, நெஞ்சத்தில்
வளரும் பத்தியாய்.

௪. என் மீட்பர், ஏசுகிறிஸ்து தாம்,
இவ்வருள் செய்தாரோ :
நான் என்னபதில் செய்யலாம் ;
தகுவதில்லையே.

௫. என் தேகம், செல்வம், சுகமே,
என் சீவன் முழுதும்,
சுகந்த பலியாகவே
ஈவேன் தள்ளாதிரும்.

117. ௱யஎ-ம். கீதம். P. M.

*The same.* GAL. III. 13.

௧. அதோ! மரத்திற் சாக,
உன் தேவன், உனக்காக
நின்றார், உலோகமே!
குரூரமான நிந்தை
சகித்த மா! கர்த்தாவை
கண்ணோக்குவீர்கள், நீங்களே!

௨. நானே கை கால் கட்டுண்டு,
சிறையிலே தள்ளுண்டு,
கிடக்க ஞாயமே,

நானே இடைவிடாமல்
சந்தோஷத்தைக் காணுமல்
வாதை அடைய, நீதியே.

௩. அதற்கு நான் அகன்று
ஞாயாக்கினையை வென்று,
இருக்கச் செய்ய, நீர்
துன்மார்க்கர் கைக்குள்ளாகி,
மரத்திற் சாபமாகி,
எத்தீமையையும் தாங்கினீர்,

௪. நீர் என்னை மீட்டதாலே,
ஏசு நான் உமதாளே.
என் முழு உள்ளமும்,
நீர் செய்த நன்மைக்காக,
துதிக்கும் படியாக,
தேவாவியைத் தந்தருளும்.

௫. நீர் சாந்தத்தோடும் பட்டு
தீயோர்மேற் கோபமற்று
அநியாயம் யாவையும்
சகித்ததை நான் நோக்கி,
என் துர்க்குணத்தைப் போக்கி,
உமக்கொப்பாய் நடப்பியும.

௬. கர்த்தாவே! நீர் வெறுக்கும்
பொல்லாங்கை என்றென்றைக்கும்
வெறுத்துத் தள்ளவும்;

என்னெஞ்சிலே பலத்தை,
நற்சிந்தையைத், திடத்தை,
அனுக்கிரகித்து, ரட்சியும்.

118. ௱௰௮-ம். கீதம். L. M.

*The death of Christ.* JOHN XIX. 25-30.

க. மாய்ந்தார், பாவிநேசர் மாய்ந்தார்!
மண் அதிர்ந்து விண் இருள,
சாலிம் மாதர், ப்ரலாபர்
ஆக, இதோ! நின்றார் சூழ:
வாரும், சுத்தர்! தேவைப் பார்த்து,
கண்ணீர் வாரத்துக்கங்கொள்ளும்.
ரத்தங்கண்ணீர், சோரநின்று,
சாவில் தாழ்ந்தார், உங்கள் மூலம்.

உ. சுத்தர்! கண்ணீர் நீங்கி, வாரும்:
உங்கள் மீட்பர் சயம் சொல்லி,
நரகனை வென்றார், சாவும்
செயித்தார் என்று பாடும் வெற்றி.
மீட்டு ரட்சை செய்யத் தோன்றும்
ராசஸ்துதி செய்வீர் இன்று:
சாவே! கூர்மை எங்கே? ஈமம்
சயம் எங்கே? என்பீர் அன்று.

119. ௱௰௯-ம். கீதம். 6. 7's.

*Christ the Rock of ages.* Isa. xxvi. 4, ii. 10.

௧. உடைபட்ட மலையே!
புகலிடம் தாருமே:
பக்கம் பட்ட காயமும்,
பாய்ந்த சென்னீர் வெள்ளமும்,
பாவ தோஷம் யாவையும்,
நீக்கும்படி அருளும்.

௨. கண்ணீர் நித்தம் சொரிந்தும்,
தோயாத் தவம் புரிந்தும்,
பாவம் நீங்கமாட்டாதே.
நீரோ மீட்பீர், ஏகரோ!
சென்னீர் பட்ட சிலுவை
நான் சேர்ந்து, சார்வேன் உம்மை.

௩. நிழல் நேரிவ் வாழ்விலே,
கண் மூடும் என் சாவிலே,
இகம் விட்டுப், பரத்தில்
நடுத்தீர்வைத் தினத்தில்;
உடைபட்ட மலையே!
புகலிடந்தாருமே.

120. ௱௨௰-ம். கீதம். 8's & 7's.

"*God forbid that I should glory, save in the cross of our Lord Jesus Christ.*" GAL. VI. 14.

௧. சிலுவையினிடம் சேர்ந்து
போகுங் காலம் இன்பமே;
சீவன் சோஸ்தம் சாந்தம் பெற்று,
பிராண நேசர் சார்வோமே.
அன்புலாவுங் கண்ணைக்கண்டு
சிலுவையில் வணங்க;
இன்பஸ்தலம் தரும் பாக்யம்
நெஞ்சை யாற்று, இன்பாக.

௨. அன்பு துக்கமேவும் உள்ளம்
கிறிஸ்தின் சாவால் பிழைக்க
அவர் பாதங் கண்ணீர் மூழ்கும்
தேவன்பைச் சார்வேனாக.
இவ்வுணர்வு தின்மை வைத்து,
மீட்பரிடம் சேருவேன்.
சாவாற் சோஸ்தம் பெற்றுக்கொண்டு.
நேசரொன்றே துதிப்பேன்.

121. ௱௨௧-ம். கீதம், 7. & 6.

"*Surely he hath borne our sins and carried our sorrows.*" ISA. LIII. 4.

௧. எவற்றிலும் உயர்ந்த
அன்பான ஏசுவே!
பரத்திலே சிறந்த

பத்தாவே! உமக்கே
என்னெஞ்சை வாஞ்சையாலே
கொடுத்திருக்கிறேன்.
நீர் பட்ட நோவினாலே
சுகமடைகிறேன்.

௨. என் சோர்வை நீரோ மாற்றி,
என்னெஞ்சின் துக்கத்தை
கடாட்சத்துடன் ஆற்றி,
புலம்பும் ஏழையை
ரட்சிக்கத்தக்கதான
இம்மானுவேலானீர்.
கர்த்தாவே! நீர் மெய்யான
அப்பங்கொடுக்கிறீர்.

௩. ஆ! ஏசுவே! மலர்ந்த
முகத்தைக் காண்பியும்
என் உள்ளத்தில் உயர்ந்த
அன்பாய் பிரகாசியும்
என்னில் நீரோ தரித்தால்.
களிப்பேன் ஏசுவே!
என் உள்ளத்தை நீர் விட்டால்,
சலிப்பேன், மீட்பரோ!

122. ௱௨௨-ம். கீதம். 8. 7. 4.

"*Sweet the moments rich in blessing.*" Ps. xx. 5.

க. கிறிஸ்து நாதர் பட்ட காயம்
தோன்றும் நேரம், அருமை;

சுத்தம் செல்வம் நற்சகாயம்
  சீவன் காட்டும் சிலுவை.
என்றும் பார்ப்பேன்,
  என்னை மீட்ட ஏசுவை!

௨. அன்பு பாயும் ஊற்றைக்கண்டு,
  ஐந்து காயம் சிந்திப்பேன்:
பிதாவோடே சமாதானம்
  எனக்கித்தாலாகுமே,
என்றும் பார்ப்பேன்,
  என்னை மீட்ட ஏசுவை.

௩. அவர் கண்ணால் தோன்றும் நேசம்,
  எனக்கேற்ற செல்வமே.
பாடுபட்ட காயம் துக்கம்,
  ஈயும் அருள் மோட்சமே!
என்றும் பார்ப்பேன்,
  என்னை மீட்ட ஏசுவை.

௪. நேசந் துக்கம் களிப்புடன்
  நெஞ்சிற் பலன்கொள்ளுமே.
கறை குற்றம் பாவக்கடன்
  தீருமென்றிருக்கிறேன்
அல்லேலூயா!
  உம்மால் முத்தி, ஏசுவே!

123. ௱௨௩-ம். கீதம். P. M.

*"Who gave himself a ransom for all."* I. Tim. ii. 6.

௧. ஏசுக்கிறிஸ்துவே!
பூதலத்திலே,
கேட்டிலுள்ள மாந்தர்க்கான
சீவ தீப ஆதியான,
ரட்சகர் நீரோ
ஏசுக்கிறிஸ்துவே!

௨. என்னை மீட்க நீர்
சீவனை விட்டீர்.
குற்றம் யாவையும் தொலைக்க
ஆக்கினை எல்லாம் விலக்க,
மாந்தர்க்காக நீர்.
சீவனை விட்டீர்.

௩. ஆஸ்தி சீவனும்
மற்ற யாவையும்.
தேவனுக்காய் நான் வெறுக்க
ஆசை கொண்டு வாழ்ந்திருக்க
என்னில் முழுதும்,
நின்றி ரட்சியும்.

124. ௱௨௪-ம். கீதம். S. P. M.

*Evil spirits conquered through Christ.* Col. ii. 15.

௧. ஆ! ஏசு சிந்தின
இரத்தம் சகல

நரரை மீட்கத் தகுமே,
பாவத்தை தீரத் தீர்க்கவும்
பேய் வாய்க்கு நீக்கவும்
பலனைக் கொண்டிருக்குமே.

௨. எல்லாப் பேய்க்கூட்டமும்
எதிர்ப் போராடியும்
இளக்கரித்துப் போவதேன்?
மீட்பர் என்னுடனே
நிலைத்திருப்பாரோ:
அவரால் வெற்றி அடைவேன்.

௩. இப்போதும் உம்மையே,
நான் சார்ந்தேன்ஏசுவே!
துக்கித்தும்மண்டையே, சேர்ந்தேன்.
மன்னிப்படைந்தேன்:
ஆக்கினை தவிர்ந்தேன்:
பேரின்பத்துக்குமுள்ளாவேன்.

௪. இனி நான் உம்மிலே
பிரிவதின்றியே:
தடையும் கேடும் அறவும்
உறுப்பாய் வளர:
நீர் என்னைத்தளர:
விடாதபடி நடத்தும்.

125. ௱௨௫-ம். கீதம். P. M.

(௧-ம். பங்கு.)

*The death of Christ.* JOHN XIX. 30.

௧. முடிந்ததென்று ரட்சகர்
தலையைச் சாய்த்து மனிதர்,
பிழைக்க மாண்டு போனது ;
அடியார்க்குப்,
பலித்தால் யாவும் நல்லது.

௨. கர்த்தாதி கர்த்தர் இவ்விதம்
மரித்தது பயங்கரம்.
இதோ! பகலிற் பொழுதும் ;
இருட் படும்
புவி குலுங்கி அதிரும்.

௩. பராபரனது சுதன்
மரத்திற் கள்ளர்களுடன்,
இறந்து மண் படுக்கைக்கு ;
உள்ளானது,
உன் குற்றமென்றறிந்திரு.

௪. ஆ! சுவாமி உமது சுதன்
நான் தப்ப நிந்தைகளுடன்
மரித்தது வீணுவானேன்?
மன்னியுமேன்?
என்றும்மை கெஞ்சிக்கேட்கிறேன்.

(உ-ம். பங்கு.) P. M.

*The burial of Christ.*

க. நான் ஏசுவின் சவத்துடன்
குழிமட்டாகச் செல்பவன்.
ஆம் அவரோடே முழுதும்;
அடியேனும்,
மரித்தடக்கமாகவும்.

உ. உம்மோடே புதுச் சிஷ்டியாய்.
எழுந்து வாழத் தக்கதாய்ப்,
பேய்ச் சாய்லான சுபாவமே:
என் நெஞ்சிலே,
அழிய வேண்டும் ஏசுவே!

ந. நான் பாவ ஊத்தையை இனி,
பொறுத்திருப்பதெப்படி?
அப்பாரத்தைச் சுமந்திரோன்?
அரோசித்தேன்,
நான் கிறிஸ்துக்குள்ளிருக்கிறேன்.

ச. நீர் எனக்காக மரண,
பாதாளத்தில் இரங்கின,
தயையை இங்கே நித்தமும்:
இங்கேன்றைக்கும்,
நான் போற்ற என்னை ரட்சியும்.

அவரின் உயிர்த்தெழுதல்.

126. ௱௨௬-ம். கீதம். 7's.

*"Very early in the morning they came unto the sepulchre."* LUKE XXIV. 1.

க. வைகறை இருக்கையில்
ஓடிவந்த மரியாள்,
பிரேத குழியினில்
நின்று கொண்டு அழுதாள்.
எங்கள் ஏசு எங்கேயோ;
சீவன் விட்ட மீட்பரே:
காணவில்லையே, ஐயோ!
யாவனோ எடுத்தானே.

உ. ஏங்கிச்சொல்ல, நேசமாய்
மரியாளே கேள் என்றார்.
கேட்டுக்கொண்டு, ஆவலாய்
பார்த்தாள் தன்னுத்மநேசர்.
தேவ வாக்குச் சீவனும்,
தேவ நேசம் மோட்சமே:
தாழ்ந்த குணர் யாருக்கும்,
ஏசு தோன்றுவார் அங்கே.

127. ௱௨௭-ம். கீதம். 7's.

*The Resurrection of Christ.* ACTS II. 24.

க. தேவமைந்தனனவர்
ஏசுவென்னும் ரட்சகர்,

தம்முடைய ஆவியால்
கல்லறையை விட்டதால்.

உ. சாபம், துன்பம், யாவையும்,
நீக்கிப் பாக்கியத்தையும்,
மாந்தர்க்கீந்து ரட்சித்தார்;
பேயின் மேன்மைத் தாழ்த்தினர்.

ஙூ. ஆதலாற் நரர்களே!
கிறிஸ்துவின் ரட்சிப்பையே;
ஏற்றுக்கோண்டு பாடுங்கள்,
கேட்டினின்றும் ஓடுங்கள்.

ச. நீரும், உமதாவியை
தந்து தேவ நன்மையை,
யாவருக்கும் சாலவும்
தோன்றப்பண்ணி ரட்சியும்.

ரு. தேவரீர்க்குத் தோத்திரம்
அல்லேலூயா! கீர்த்தனம்!
மீட்கப்பட்ட கூட்டமே
உம்மைப் போற்றிக் கோள்ளுமே.

128. ூஉஅ-ம். கீதம். L. M.

*The day of triumph.* Col. ii. 15.

க. இந்நாளிற், கிறிஸ்து, வெற்றியை
அடைந்து வல்ல, தீயனை
சிறைப்படுத்திப், போனவர்;
இஸ்தோத்திரிக்கப்பட்டவர்.

உ. பசாசு சாவு மயக்கம்
எத்துன்பமும், அன்றைத் தினம்
எழுந்த கிறிஸ்தின் காலிலே
விழுந்து, கெட்டுப்போயிற்றே.

௩. அந்நாளிற் சீஷர் கர்த்தரின்
சரீரம் சேமம் செய்தபின்;
கிலேசத்தோரின் நெஞ்சுக்கு,
சந்தோஷப் பூரிப்பாயிற்று.

ச. மிகுந்த தேற்றஞ் செய்யவே
எழுந்த ஏசுகிறிஸ்துவே!
செய்த தற்காக, உமக்கு
துதியுண்டாகத் தக்கது.

129. ௱உகூ-ம். கீதம். P. M.

"*Sweet spices they brought.*" MARK XVI. 1.

க. நற்போளத்தைக் கொண்டு வைகறையிலே
கற்பாறைக்கு வந்ததாய் முதலோரே!

உ. கற்பேர்க்கத் திராணியுடையவன் ஆர்!
உரைத்துக் கலங்கிக் கண்ணீரும் விட்டார்.

௩. என்றாலுங் கற்பாறை திறப்பட்டதே;
ஏசுவும் விட்டுக்காணப்போனாரோ.

ச. மா! திகில் அடைந்து சந்தேகப்பட,
இதோ! கிறிஸ்து வந்து நீர் வாழ்கவென்க.

௫. ஆ! ஏசுவே! வந்து கடாட்சம் பண்ணும்
என் னெஞ்சுமதாவியால் சுத்தஞ் செய்யும்.

௬. இக்கூட்டத்தார் யாரும் மா களிப்புடன்
இஸ்நானம் பெற்றோர்கள் வணங்கச் செய்யும்.

௭. விண்ணோரைப்போல நாமும் வெள்ளங்கிகொண்டே;
துதித்து வணங்கிப் பின் செல்லுவோமே.

௮. மெய்யாய் வருகிறேனென்ற கர்த்தாவைப்பார்
எக்காளந் தொனிக்க இதோ! வருவார்.

**130.** ௱௩௰-ம். கீதம். **P. M.**

*Rejoicing in the Resurrection of Christ.*
I. Cor. xv. 57.

(௧-ம். பங்கு.)

௧. கிறிஸ்தவர்களே! நாம் பாடி
கர்த்தனை யனைவரும்:
மிகுதியுமாய்க் கொண்டாடி,
போற்றவுந் துதிக்கவுங்
கடவோம். இதோ! செயித்தார்
அவர் பலசாலியாய்:
பரம கர்த்தருமாய்
மரணக்குழியை விட்டார்:
ஆர்? எதிர்க்கலாம் இனி
கிறிஸ்தின் சங்கமே! களி.

௨. சிலுவையில் சீவனற்று
மாண்டு கல்லறையிலே;

வைத்தடக்கம் பண்ணப்பட்டு
போனவர் எழுந்தாரோ :
மரணத்தைப் பாழ்க்கடித்தார் ;
சாத்தான் காவல் பண்ணின
நம்மை மீட்டதினுட
கோட்டையைத் தகர்த்தழித்தார்.
அவரோ அதிபதி
கிறிஸ்தின் சங்கமே ! களி.

௩. கல்லறையில் நீரிராமல்
தேய்வமைந்தனுன, நீர்
சேத்தும் அழிவைக் காணமல்
மீண்டும் வந்திருக்கிறீர் :
மண் அதிர்ந்தது களிப்பாய் ;
அழியாத சீவனே !
சாவைக்கோள்ளை யிட்டீரோ.
நீர் நரருக்கு ரட்சிப்பாய்
வென்ற வெற்றி மிகுதி
கிறிஸ்தின் சங்கமே ! களி.

(உ-ம். பங்கு.) P. M.

*The same.* EPH. IV. 8-9-10.

க. தேய்வ நீதிக்குக்கடனைத்
தீர்த்துயிர்த்ததின் பின்பு,
ஏசு சீவனின் பலனைச்
சோல்ல ஆரால் ஆகுது ?
கோடிக்குத் தலைக் கல்லானுர்
ஞானமுள்ள கர்த்தரோ !

இது உம்மால் ஆயிற்றே:
பாவிகளின் நீதியானூர்
மோட்சத்துக்கவர் வழி
கிறிஸ்தின் சங்கமே! களி.

௨. தோய்பு மட்டுக்கும் போரிட்ட
பராக்கிரமன் வழியண்டை,
ஓடும் ஆற்றிலே குடித்த
பிறகு தன் சிரசை
எறேடுக்கும் வண்ணமாக,
ஏசு சுவாமி தம்முட
சிரசை யெடுத்தெல்லாச்
சத்துருக்களை நன்றாக
வெட்டின சேனபதி!
கிறிஸ்தின் சங்கமே! களி.

௩. கர்த்தரோ நீர் வெற்றியாக
உயிரோடேழுந்ததால்;
நாங்கள் நீதிமான்களாக
நிற்கலாம், அதேனென்றல்
சமாதானமும் மன்னிப்பும்
கிருபா கடாட்சமும்
சகல வரங்களும்
வாழ்வும் நித்திய ரட்சிப்பும்
நீர் எழுந்ததின் கனி:
கிறிஸ்தின் சங்கமே! களி.

131. ௱௩௧-ம். கீதம். P. M.

*The same.*

I. Cor. xv. 27-28. Ephes. i. 28.

௧. ராசாதிராசாவே ! நன்ருகச் செயித்தீர்,
நீர் சாவை விழுங்கிப் பிழைத்துக்கெலித்தீர்,
பசாசு பாதாளத்தின் சங்கிலியாலே
கட்டுண்டு கிடக்குமே, தேவரீராலே.

௨. கர்த்தாவுட நீதிக்கு ஈடுசெலுத்தி
அடியாரின் குற்றத்தை நாசப்படுத்தி,
திரும்ப தெய்வ அன்பை எல்லாம் வருவித்தீர்
நீர் சாவின் பயங்கரமுள்ளை யொடித்தீர்.

௩. இப்போதும் பரத்திலும் பூமியிலேயும்,
நீர் சிந்தின ரத்தம் அதிசயஞ் செய்யும் :
அதங்கே யிருந்து மன்னித்தலைக்கூறும்
இங்கே குணப்பட்டவன் பாவத்தை மூடும்.

௪. நரருக்கு உமது ரத்தத்திஞலே
நீர்தான் சமாதானமுண்டாக்கினதாலே
பூலோக சாபம் விமோசனமாயிற்று
நரருக்கு ஏசுவோடோப்புரவாயிற்று.

௫. ஆ, மீட்பரோ ! எண்ணிக்கைக்குள்ளடங்காத
கோடாகோடி நாவுகள் முடிவில்லாத
துதிப்பும் மகழ்ச்சியும் பத்தியுமாக
நீர் செய்த இரக்கத்தைப்பாடுவதாக.

அவர் பரத்துக்கேதறுல்.

132. ௱௩௨-ம். கீதம். L. M.

*Christ's ascension the Christian's joy.*

க. மகிழ், கர்த்தாவின் கூட்டமே!
மகாகெம்பிரமாகவே
பரத்துக்குன் அதிபதி
எழுந்து போனதால் துதி.

உ. பரத்தின் சேனை ஓசையாய்
கொண்டாடி, மா வணக்கமாய்
பணிந்து, ஏசுஸ்வாமிக்கு
வணக்கத்தைச் செய்கின்றது.

௩. நரர்களே! விண்ணோரைப் போல்
சந்தோஷமாகப் பாடுங்கள்:
என்றைக்குமுள்ள வாழ்த்தலே
கர்த்தாவினுக் குண்டாகவே.

௪. உன்னதமான ஏசுவே!
வெற்றி சிறந்த தேவனே!
இடைவிடாமல் உமக்கே
இஸ்தோத்திரம் உண்டாகவே.

133. ௱௩௩-ம். கீதம். L. M.

*Ascension, triumph and reign of Christ.*
I. JOHN III. 8.

க. மிகுந்த கஸ்தியுள்ளோரே!
விளங்கிடுஞ் சந்தோஷமே;

மகா விசேஷமானது
அதை விரும்பத்தக்கது.

௨. தரையில் வைக்கப்பட்டவர்
செயித்துச் சீவனானவர்
மகிழ்ச்சியோடே தோத்திரி
என்னுள்ளமே ; அன்பாய்த் துதி.

௩. அவர் மரித்தபோது பேய்
கூடி நின்று மகிழ்ந்ததே ;
அவர் எழுந்த பொழுது
அது மெலிவடைந்தது.

௪. எழுந்த மகா ரட்சகர்,
பகைஞரை ஒடுக்கினர்,
செயத்தைக் கொண்டு ஏறினார்
எதிர்க்க வல்லவர்கள் யார் ?

௫. உயர்ந்த மேன்மையாந் தலம்
இப்போதவரின் ஆசனம் ;
அவரைப் பற்றினோர் அங்கே
செல்வார்கள் மா சந்தோஷமே !

134. ௱௩௪-ம். கீதம். L. M.

*The same.* JOHN XIV. 2.

௧. பரத்திற்போன ஏசுவே !
நரர்களுக்கும் விண்ணிலே ;
இடங்கொடுக்கும் உமக்கு
புகழ் செலுத்தத் தக்கது.

௨. பிதாவின் ஆசனத்திலே
இருந்து தாழ்மையாளாயே;
கண்ணோக்கி ஆதரித்து நீர்
இழிந்த எங்களை விடீர்.

௩. பசாசின் மூர்க்கம் எத்தனை
மிகுந்திருந்தும் எங்களை
கெடுத்துப்போட பலமே;
அதற்குச் சற்றும் இல்லையே.

௪. அதில் மகிழ்ந்து மாந்தர்க்கு
சம்பந்தமான உமக்கு,
இஸ்தோத்திரஞ் செலுத்துவோம்,
உம்மாற் சயங்கொண்டாடுவோம்.

135. ௧௩௫-ம். கீதம். L. M.

*The same.* GAL. IV. 4-5. HEB. II. 14--15.

௧. இந்நாளில் ஏசு தேவனார்
மகத்துவத்தைக் காட்டினார்:
தராதலம் விட்டேகினர்
புகழை ஏற்கத் தக்கவர்.

௨. பசாசின் சத்தியை அவர்
அழித்துச் சயங்கொண்டவர்:
அனைவரும் அதாலுண்டாம்
குரூரத்திற்கு நீங்கலாம்.

௩. சிறையுற்றோரின் மீட்பரே!
செயித்த ஏசுகிறிஸ்துவே!

பசாசின் கீழே நாங்களும்
இராமற் போக ரட்சியும்.

ச. அதிற் சந்தோஷமாகிறோம் :
கர்த்தாவின் அன்பைப் போற்றுவோம் :
திரியேகரே? எப்போதும் நீர்
துதிப்பை ஏற்கக்கடவீர்.

136. ருஙசு-ம். கீதம். P. M.

*The same.* Isaiah xxv. 8.

(க-ம். பங்கு.)

க. ஆ! சீவனின் பிரபுவே!
பரத்திலே உயர்ந்த
என் மீட்பரான கர்த்தரே!
நீர் எங்கள்மேற் சுமந்த
கடனைத்தீர்த்து, எங்களை
ரட்சித்துக் கொண்ட வெற்றியைத்
தினம் நான் ஓய்வில்லாதே
கொண்டாடியும் போதாதே.

உ. நீர் பாவஞ் சாபஞ் சகல
தீமையையுஞ் செயித்தீர்.
நீர் மாண்டதாலே மரண
கெடியையும் முறித்தீர்.
பசாசும், லோகமும், உம்மால்
செயிக்கப்பட்டதாகையால்
நான் உம்மை வாஞ்சையாக
தினந் துதிப்பேனாக.

௩. கெம்பீரத்தோடே தேவரீர்,
எக்காளங்கள் தொனிக்க,
பரங்களுக்கு ஏறினீர்.
பணிவுடன், துதிக்க,
வானோரின் சேனையுமக்கு
எதிர்கொண்டேகிப் போகுது,
கர்த்தாவுட ரதங்கள்
அனேகம் ஆயிரங்கள்.

௪. கோரமாய் அடியாரைக்
கெடுத்தலைக்கழித்து,
சிறைபிடித்தவர்களை
நீரோ சிறைபிடித்து
கீழாக்கிப்போட்டீர், தேவரீர்
செயஞ் சிறந்து ஏறினீர்.
ஆ! உம்மைப்பூரிப்பாக
இஸ்தோத்திரிப்போமாக.

(உ-ம். பங்கு.) P. M.

*The same.*

I. Peter iii. 22. Heb. ix. 24.

௧. பரத்திற் போன தேவரீர்
வழியை எங்களுக்கும்
அதாலே உண்டு பண்ணினீர்,
உம்மாற்றிறந்திருக்கும்
அடியார் அங்கே போக நீர்
வழியுமாயிருக்கிறீர்,

ஆ! மோட்சவாசல் மட்டும்,
நீர் எங்களை நடத்தும்.

உ. நீர் உன்னத பரங்களில்
எல்லாத்துக்கு மேலாக
பிதாவின் வலபாகத்தில்
அடியார் நன்மைக்காக
உயர்ந்து உட்காந்தீரே.
முடி தரித்த சிரசே,
எந்நாளும் ஆண்டிருப்பீர்;
பேய்ச்செயலைக்கெடுப்பீர்.

ங. சபைக்குச் சிரசாகிய
நீர் வான ராச்சியத்தில்
உட்பட்டுப்போயிருக்கிற
படியால் உம்மிடத்தில்
நீர் மீட்டுக்கொண்ட உம்முட
அவயவங்களும்வர,
மகா விரக்கமாகச்
சகாயஞ் செய்வீராக.

ச. அடியார் மனதும்முட
பரகதியைத்தேடி,
எப்போதும் அங்கே உயர
உம்மண்டைதானே ஏறி
உம்மோடே சஞ்சரித்தெல்லா
நற்சீரிலுந் திடப்பட
நீர் அதை நித்தமாக
எழுப்பிக்கொள்வீராக.

பரிந்து வேண்டுதல்.

137. ௱௩௭-ம். கீதம். L. M. D.

*"He ever liveth to make intercession for them."*
HEB. VII. 25.

(௧-ம். பங்கு.)

௧. காரிய கர்த்தர் ஏசுவே!
கிருபாசனத்தின் முன்னே
எனக்காக வேண்டிக்கொள்வீர்.
இப்போ மேற்கொள்ளக்கடவீர்:
வேண்டுவதற்கு நீர் ஆசை
எனக்கிட்டால் என் செபத்தை
கேட்டருளி, நீர் என்னோடும்
பிதாவை வேண்டிக்கொண்டிரும்.

௨. என் சுபாவத்தின் கேட்டையும்,
அறிவித்தென்னிருதயம்;
சூழ்ந்த கருமேகங்களை,
மனதின் அந்தகாரத்தை,
சித்தத்தின் முரட்டாட்டத்தை
இச்சைகளின் திரிதலை
எனக்கிப்போதுங் காண்பியும்:
என் மனந் துக்கப்படுத்தும்.

(௨-ம். பங்கு.) L. M. D.

*The same.*

௧. ஏசுவே! நீர் வேண்டிக்கொண்டு
தேவ வெளிச்சத்தைத் தந்து;

என் கேட்டின் மிகுதியையும்,
எனக்கன்பாகக் காண்பியும் ;
நான் பாவத்தை வெறுப்பது,
அதின் குற்றமுணர்வது,
உம்மில் உண்டான ரட்சிப்பை
விரும்புவது என்னுசை.

உ. நேசமே ! உம்மைக்கேட்கிறேன் :
உம்மையில்லாமற் சாகுவேன் ;
உம்மையில்லாமை மரணம்
நரகமுமாயிருக்கும்.
நீர் என்னில் வந்துயிர்ப்பித்து
உமதன்பைத்தரும்போது
என் மனமேல்லாம் மகிழும் :
ஆ ! இப்போதாசீர்வதியும்.

138. ௱௩௮-ம். கீதம். C. M.

*Justification through Christ.* 2. Cor. v. 19.

க. சிறையுற்றோரின் மீட்பரோ !
என் ஏசுவே ! நீர் தாம் ;
தயையால் என்னைத் தேற்றவே
மகா இரக்கமாம்.

உ. பராக்கிரமத்தைச் செய்பவர்
பலத்த தேவன் நீர் ;
ரட்சிப்புக்கே நீர் காரணர்
பாவத்தை நீக்குவீர் ;

௩. நான் சோந்த நீதியற்றவன்
என் நீதி கந்தைதான;
உம்மால் நான் நீதியுள்ளவன்
மகா புண்ணியவான்.

௪. இம்மேன்மையை நினைக்கையில்
உம்மை எந்நேரமும்;
துதிக்க நீர் என்னுள்ளத்தில்
பலத்தை யூற்றிடும்.

139. ாஙகூ-ம். கீதம். L. M.

"*The ministry of reconciliation.*" 2. Cor. v. 18.

௧. கோபித்த தேவன் தூதனை
எங்களுக்கனுப்புகிறார்:
போதகராற் பகைஞரை
ஒப்புரவாகக்கேட்கிறார்.

௨. குருமார்கள் கிறிஸ்தினிடம்
பாவம் விடச்சோல்வார் நன்று:
விட்டிருப்பார் அவர் மூலம்
மன்னிப்படைவார்கள் அன்று.

௩. கிறிஸ்தின் மூலம் தேவனே
திவ்விய தூதை ஏற்கிறேம்;
எங்களை ஏற்கும் தயையே
களிப்போடே துதிக்கிறேம்.

௪. எங்கள் கடன் தீர்த்தார் ஸ்வாமி
பாவம் நீங்கி வாழவோம் என்றும் ;
நம்மை விட்டார் நீதிபதி
இனி நாடுவோமே மோட்சம்.

அந்திய வருகை.

140. ௱௪௰-ம். கீதம். S. M.

*"We shall all stand before the judgment seat of Christ."* Rom. xiv. 10.

௧. மகா! நீதிபரர்
ஞாயத்தீர்வை சேர்ந்து,
வென்ற சுத்தர் அஞ்சுந் தீயர்
யாரும் நிற்பார் அன்று.
நாம் எச்சரிப்பினுடன்,
அச்ச நாளைப்பார்த்து,
விழிப்போடு வேண்டும் பலன்
தாரும் நம்மைக் காத்து.

௨. தந்தையது தூதர்
சூழ, உடன்கூடி,
மகத்துவமான சிரேஷ்டர்!
வாரும், வானம் நீங்கி.
மனுஷீகரூபி!
ஞாயந் தீர்க்க வாரும்
தினம் காத்து நிற்கும் பத்தி
தந்து அருள்செய்யும்.

௩. நீதிபதிவந்தார்!
சேத்தோர்! எழுந்திடும்.
விண்ணிற்சென்று தீர்ப்புக்கேளீர்!
என்னும் சாமசத்தம்.
சிற்றின்பம் அடக்கி
பயபத்தி ஏவ,
தூதரின் எக்காளத்தொனி
தொனிக்கட்டும், கேட்க.

௪. வேதத்துக்கிணங்கி,
காளதொனிகேட்டு,
தேவுவரும் என்று நம்பி,
நிற்போம் களிகூர்ந்து.
மோட்சருடன் கூட
வாழ்வதற்கு நித்தம்
கணமேனும் விழித்திட,
நாம் தேடக்கடவோம்.

141. ௱௪௧-ம். கீதம். 7's & 6's.

"*And at midnight there was a cry made.*"
MAT. XXV. 6.

௧. திகைத்தஞ்சி நடுங்க
கேளீர் சாமச்சத்தம்.
மணவாளனைக்காத்த
ஆத்துமாக்கள்! பாரும்.
ஒளி இன்பம் விளங்க,
வந்தார். வாக்கின்படி
போம், தேவை எதிர்கொள்ள
நெஞ்சில் ஒளி பற்றி.

௨. [பாவச்சுமை தரித்தீர்
அதை விட்டு வாரும்.
மனஸ்தாபர்! ரட்சகர்
வந்துவிட்டார்: பாரும்.
நடுச்சாமத் துக்கத்தில்
தோன்றுவாரோ, ஏசு!
சார்ந்துகொள்ளும் அவரில்:
சேர்வார் ரட்சைசெய்து.]

௩. அறைக்கட்டுக்கட்டி, நீர்
வாரும், தீபம் பற்றி.
மீட்பர் மூலம், பாத்திரர்,
தரியும் வெள்ளங்கி.
ஏசு! சுத்தமாக்குவார்,
வாக்கை நிறைவேற்றி;
பூரண நேசந் தருவார்,
பாவம் எல்லாம் நீக்கி.

௪. நாம் காத்திருக்கும் கிறிஸ்து!
நீதிபதி! வாரும்.
அவர் தீர்ப்பு நமக்கு
செய்வார், எந்த நாளும்.
நாம் நினையாத காலம்
சோரர் வாள்போல,
வருவார் கிறிஸ்து நிசம்,
ஒளியுள்ளோர் சூழ.

௫. கிறிஸ்து வரக்காப்பவர்,
சேர்வார் மகா இன்பம்.

நீதிபதி, அருள்வார்
என்றும் நீங்காச்சேயம்.
ஞாயத்தீர்ப்பில் வா என்பார்.
யாவர் நிற்பார் அன்று?
அவர் சத்தங்கேட்டு, யார்
சொல்வார் வாரேன் என்று.

142. ௧௪௨-ம். கீதம். 8, 7, 4.

*"Behold he cometh with clouds; and every eye shall see him."* Rev. i. 7.

௧. பாவிக்காய் மரித்த ஏசு!
வானத்திலிறங்குவார்:
கோடி தூதர் அவரோடு
வந்து ஆரவாரிப்பார்.
அல்லேலூயா!
கர்த்தர் பூமி ஆளுவார்.

௨. பயங்கர மகிமையில்
அவரை யாரும் பார்ப்பார்:
துன்புறுத்துச்சிலுவையில்
அவரைக்கொன்றோர் காண்பார்:
அழுகையில்
அன்றவரை அறிவார்.

௩. அவர் தேகம் பட்டகாயம்
இன்னங் காணப்பட்டது:
நம்புவார் மகிழ்ச்சியாயும்

நோக்குவார்; அப்போழுது
அவர் காயம்
தரும் நித்த ரட்சிப்பு.

ச. உம்மை நித்த ஆசனத்தில்
எல்லார் வணங்கச்செய்யும்:
ராச்சியத்தைப் பூலோகத்தில்
ஆண்டுகோள்ளும் என்றைக்கும்
ஆதி கர்த்தர்!
சீக்கிரம் வந்தருளும்.

143. ாசா௩-ம். கீதம். L. M.

*"The trumpet shall sound, and the dead shall be raised."* 1. Cor. xv. 52.

க. வந்தார், அதிபதி வந்தார்!
தூதர் எக்காளம் ஊதுவார்;
மேக மின்னி முழங்குது
பத்தருக்கிப்போ நல்லது.

உ. ஏசு சருவ வல்லவர்!
ராச கிரீடந் தரித்தவர்;
தம் மகிமையிலே வந்தார்
பாருமேன்று தூதர் சோல்வார்.

௩. சிங்காசனத்தின் மேல் வீற்று
சேங்கோல் வாங்குவார்; அவர்க்கு
எல்லாரும் இணங்கி வீழ்வார்,
ஆண்டவரோ! வாழும், என்பார்.

ச. விண் மண்ணேல்லாம் ஆர்ப்பரித்து
மகிழுங்கள் எங்கள் ஏசு!
சோந்தத்தைச் சுதந்தரிப்பார்
என்றும் ஆளுகை செயகுவார்.

144. ாசுச-ம். கீதம். P. M.

*"God shall bring every work into judgment."*
ECCLES XII. 14.

க. மகா பெரிய ஆண்டவர்!
சனங்கள் யாவருக்கும்:
நிறைந்த நீதி செய்பவர்
இறங்கும் நாட் பிறக்கும்;
அப்போது மா பிரஸ்தாபமாய்,
நம்மையும் மாற்றுஞ் சோதியாய்,
மின் போலத் தோன்றுவாரோ.

உ. இலக்கமற்ற தூதர்கள்
அவர்க்குக் கீழ்மையாக:
பலத்த சத்ததாரைகள்
உடையவர்களாக;
முழக்கஞ் செய்ய பூமியும்
விஸ்தாரமான வானமும்
அதிர்ந்து வேந்துபோகும்.

ஈ. அத்தூதரின் எக்காளங்கள்
எத்திக்கிலும் முழங்கும்:
அந்நேரம் மாந்தரின் திரள்
உயிரடைந்தெழும்பும்;

ஓர் பக்கத்திற் சன்மார்க்கரும்
ஓர் பக்கத்திற்றுன்மார்க்கரும்
வணக்கமாய் நிற்பார்கள்.

௪. அப்போதவர்கள் பூமியில்
நடந்து வந்த யாவும் ;
அவர்கள் தங்கள் நெஞ்சதில்
நினைத்திருந்த யாவும் ;
ஆண்டவர் கையால் வெளியாம்.
அதற்கதற்கு ஏற்றதாம் :
பலனைத் தந்தருள்வார்.

௫. சன்மார்க்கர் மோட்சமார்க்கத்தில்
நடந்ததால் மகிழ்ந்து.
சிறப்படைந்து போகையில் ;
துன்மார்க்கத்தார் அதிர்ந்து
பல்லைக்கடித்துச் சாபத்தை
அடைந்து, சன்னிதானத்தை
விட்டோடி மாளுவார்கள்.

௬. அஃதிப்படி இருப்பதால்
என் ஆத்துமாவே ! நில்லு :
மா பயங்கரமானதால்
இப்போதே புத்திக்கொள்ளு :
அங்கேந்த போக்குச்சொல்லுவாய்.
எங்கே நீயோடிப்போகுவாய் ?
இங்கே, கர்த்தாவைப் பற்று.

௭. இகத்திலே துன்மார்க்த்தை
சந்தோஷமாகவிட்டு,

அன்புள்ள ஏசுகிறிஸ்துவை !
நம்பிக்கையாய்த் தரித்து,
குணப்பட்டு, இவ்வண்ணமாய்
அவர் வரில் மகிழ்ச்சியாய்
அவர் முன்பாக நிற்பாய்.

145. ௧௪௫-ம். கீதம். P. M.

*The same.* JOHN v. 28–29.

௧. யாரையும் ஞாயந் தீர்ப்பராய்
கர்த்தாவின் மைந்தனை :
அதிபதி பிரஸ்தாபமாய்
இறங்கும் பயமான ;
நாள் வரும் போது ; தீயினல்
எல்லாங் கரைந்து போவதால்
நகைப்ப தரிதாகும்.

௨. எக்காளத்தை நற்றூதர்கள்
எத்திக்கும் ஊதுவார்கள் :
சடுதியாயிறந்தோர்கள்
யாரும் எழும்புவார்கள் ;
உயிரோடிருந்தோர்களும்
ஓர் நிமிஷத்திற் கூடவும்
அழியா ரூபமாவார்.

௩. எல்லார் சிந்தை செய்கையும்
வெளிப்படுவதற்கு ;
இரண்டு புத்தகங்களும்
திறந்தவரவர்க்கு ;

நடந்ததற்குத்தக்கதாய்
பலன் அனந்த காலமாய்
கொடுக்கபட்டிருக்கும்.

146.	௱சசு-ம். கீதம்.	P. M.

*Judgment Hymn.* MAT. XXIV. 15–22.

க. புலம்புதலிருக்கும் நியாயத்தீர்ப்பிலே
லோகம் வெந்தெரிந்து அழிந்த போதிலே
பெற்றோர் மக்கள் விட்டு
என்றென்றுங் காணரோ;
கடுங்கோபம் என்றும்
பாவி பட்சிக்குமே:
ஐயையோ! என்றைக்கும்
பாவி பட்சிக்குமே.

உ. புலம்புதலிருக்கும் நியாயத் தீர்ப்பிலே
லோகம் வெந்தெரிந்து அழிந்த போதிலே
புருஷன் பாரி விட்டு
என்றென்றுங்காணரோ
கடுங்கோபம் என்றும்
பாவி பட்சிக்குமே;
ஐயையோ! என்றைக்கும்
பாவி பட்சிக்குமே.

௩. புலம்புதலிருக்கும் நியாயத்தீர்ப்பிலே
லோகந் வெந்தெரிந்து அழிந்த போதிலே
உவாத்தி சீஷன் விட்டு
என்றென்றுங் காணரோ
கடுங்கோபம் என்றும்
பாவி பட்சிக்குமே.

ஐயையோ! என்றைக்கும்;
பாவி பட்சிக்குமே.

௪. புலம்புதலிருக்கும் நியாயத்தீர்ப்பிலே
லோகம் வெந்தெரிந்து அழிந்தபோதிலே
அண்ணன் தம்பி விட்டு
என்றென்றுங் காணுரோ;
கடுங்கோபம் என்றும்
பாவி பட்சிக்குமே:
ஐயையோ! என்றைக்கும்
பாவி பட்சிக்குமே.

## பரிசுத்த ஆவிக்குத் துதி.

### ௪ம் பிரிவு.

### பிரகாசிப்பவர்.

147. ௱௪௭-ம். கீதம். C. M.

*Praise to the Holy Spirit.*

GEN. I. 2. JOB. XXXIII. 4.

க. ஆவி ஏகோவாவே! வாழ்க;
மூவருள்ளே ஏகர்!
பிதா வார்த்தையினில் வந்த
சர்வாதிகாரணர்!

உ. ஆழியிடம் வியாபித்து
நின்ற சுத்த ஆவி!
சிஷ்டி எல்லாம், சிங்காரித்து
செய்தீர் இருள் நீக்கி.

ங. பாவம் நீக்குந்தெய்வச் சாயல்
தந்து, அருள் செய்யும்.
உண்மை, சுத்தம், இன்பம், உம்மில்
ஊற, வெளிப்படும்.

ச. ஆவி ஏகோவாவே! வாழ்க:
மூவருள்ளே ஏகர்!
பிதா, வார்த்தையினில் வந்த
சர்வாதிகாரணர்.

148. ௱௪௮-ம். கீதம். C. M.

*"Open thou mine eyes, that I may behold wondrous things out of thy law."* Ps. cxix. 18.

க. எல்லார்க்கும்! பிதாவே உம்மில்
பிழைத்தசைகிறோம்:
நீர் தேவசோதி எங்களில்
சுடரக்காக்கிறோம்.

உ. நாங்கள் வேதம் ஆராய்ந்தும்மை
தேடும்போதஞ்சினும்;
வேத ஆச்சரியங்களை
பார்க்கக்கண்திறவும்.

ங. எங்களுக்குமது சோதி
பிரகாசிப்பியும்:
அறிவின் ஆவி அனுப்பி
வேதத்தைப்போதியும்.

149. ௱சகூ-ம். கீதம். C. M.

*The same.* John xviii. 26.

க. தேவாவியே! இரக்கமாய்
என்னிற் பிரகாசியும்
என்னெஞ்சின் இருளை அன்பாய்
விலக்கி ரட்சியும்.

உ. ஏசுகிறிஸ்தின் முகத்தை
எனக்குக் காண்பியும்;
நான் உம்முடைய மனதை
உணரப் பண்ணிடும்.

௩. அநேக காலம் பாவத்தில்
நான் கேடாய்ப்போனேனே:
அதைக், கர்த்தாவே! நீக்கிடில்;
உம்மிற் களிப்பேனே.

ச. என் துக்கப்படும் மனதை
சந்தோஷிப்பித்திடும்:
என் காயப்பட்ட உள்ளத்தை
சவுக்கியமாக்கும்.

ரு. தேவாவியே! இரக்கமாய்
என்னெஞ்சில் தங்கிடும்:
பசாசின் அதிகாரத்தை
விலக்கி, ஆண்டிடும்.

150. ௱௫௰-ம். கீதம். 7's.

*The same.*

௧. பரிசுத்த ஆவியே!
பாவ இருள்போக்கியே;
என் இருதயத்திலே
தங்கப்பண்ணுஞ் சோதியே.

௨. ஏசுவின் நன்முகத்தை
தரிசனம்பண்ணவே;
அருளி நல்லுண்மையே
காட்டும், சுத்த ஆவியே!

௩. சாத்தான் என்னை ஆண்டது,
பாவம் என்னில் மிஞ்சிற்று;
என்னைச் சுத்தம் பண்ணியே
ஆண்டுகொள்ளும், ஆவியே!

௪. தேவ களிப்புடனே
என்னை நிறைவாக்கியே,
நொறுங்குண்ட நெஞ்சையும்
ஆற்றித்தேற்றி, அருளும்.

௫. அடியேனின் நெஞ்சிலே
வாசம் பண்ணி, நீர்தாமே
என்றும் மேன்மையாகவே;
ஆளும், தேவ ஆவியே!

151. ௱ருக-ம். கீதம். 8's. & 7's.

*The same.*

க. எங்களைப் பிதாவிடத்தில்
முழுப்பத்தியோடேயும்
சேரப் பண்ணி, ஆத்துமாவில்
ஆவியே! தரித்திடும்:
அதினாலே, திடன் அன்பும்
நம்பிக்கையும், பெருகும்.

உ. நாங்கள் வழுவாதிருக்க
பண்ணும், வல்ல ஆவியே!
லோக மாயத்துக்கு நீங்க,
அருளை அளிப்பீரோ:
நாங்கள் நித்த நித்தமும்
வெல்லக், கட்டளையிடும்.

ங. சாகுங் காலம்வர; நாங்கள்
நித்திய மகிழ்ச்சியாய்
வாழ்வோம்: நாங்கள் மோட்சவான்கள்
என்பதை விசேஷமாய்
எண்ணும் பலம் நெஞ்சிலே
தாரும், நல்ல ஆவியே!

152. ௱ருஉ-ம். கீதம். L. M.

*The same.*

க. தேவாவியே! என்னெஞ்சை நீர்
திருப்பிப் புதிதாக்கிறீர்.

என்னென்ன நன்மை என்னிலே
உண்டோ உம்மாலேதானுண்டே.

உ. உம்மால் கர்த்தாவை அறிவேன்
உம்மால் பிதாவே யென்கிறேன் :
நீர் என்னை சத்தியத்திலே
முடியவுந் தற்காப்பீரோ.

ஙா. என் பாதகங்கள் யாவையும்
நீக்கி என்னெஞ்சைக்கழுவும் :
என் விசுவாசம் நேசமும்
மேன்மேல் வளரச்செய்திடும்.

ச. இவ்வருள் செய்யும் உமது
அளவிறந்த அன்புக்கு,
இப்போதேப்போதும் உமக்கே ;
இஸ்தோத்திரம் உண்டாகவே.

153. ாருஙா-ம். கீதம், 8-7, 4.

*The same.*

க. மானிடர் எல்லாருங் கூடி
தங்கள் சொந்த புத்தியால்
யோசித்தாலுந், தேவ ஆவி
உண்மையைக் கோடாவிட்டால் ;
ஒன்றும் நன்ருய்
செய்ய எதுவில்லையே.

உ. ஆ, கர்த்தாவே ! உம்முடைய
வார்த்தையை நான் சாலவும் ;

எங்குங்கூற, என்னுடைய
நெஞ்சிலே பிரகாசியும்.
அன்பின் தீபம்
என்னை ஏவச்செய்யுமே.

ரு. இவ்விதம் நடந்துகொள்ள,
ஏசுவே! தேவாவியை
என்னிடத்தில் நீர் கொடுக்க
வேண்டும். இவ்விருப்பத்தை,
நீருங்கண்டு
கொள்ளும், நல்ல மீட்பரே!

154. ாருச-ம். கீதம். C. M.

*"Holy men of God spake as they were moved by the Holy Ghost."* 2. Pet i. 21.

க. தேவாவி! வாரும், எங்களை
பார்த்து ஏவி விடும்.
சிநேகஞ் சீவன் பலனை
எங்களுக்களியும்.

உ. தேவாவி! வாரும் உம்மாலே
வேதியர் பேசினர்.
வேதத்தைப்போதிக்க, நீரே
ஒன்றான திராணியார்.

ரு. வானப் புறவே! எங்களில்
இரங்கித்தங்கிடும்.
இருளை நீக்கி, மனதில்
வெளிச்சங் காட்டிடும்.

௪. நீர் சோதியாக தோன்றினுல்
கர்த்தாவை அறிவோம்.
தேவன்பின் பூரணத்திஞல்
பரத்திற் சேருவோம்.

155. ௱௫௫-ம். கீதம். 6-8's.

*The same.*

௧. வேதத்தை எழுதினோரை
ஏவிப்போதித்த கர்த்தரே!
உம்மிலே மாறுதலில்லை.
ஆனதிஞல் எங்களுக்கே
வேதத்தின் ஆவியைக்கொடும்:
உயிரை எங்களில் ஊதும்.

௨. மிகச்சேபித்து விரும்பி
வேதத்தை நாங்கள் வாசிக்க,
எங்கள் மனதை யுயர்த்தி
பலப்படுத்தி விளக்க,
உமதாவியை அனுப்பும்;
தேவசோதியால் போதியும்.

௩. நாங்களலைந்து பாவத்தால்
வழி தப்பித் திரிகையில்;
உமது சுத்த வார்த்தையால்
நம்மை உதம்பி மனதில்
ஆவியின் வாளாலே குத்தும்:
கிலியாட் தயிலத்தாலாற்றும்.

ச. தேவ உபதேசங்களை
வேதத்தைக்கொண்டு போதித்து,
உமதெல்லாமார்க்கங்களை
சித்தத்தையும் அறிவித்து,
எங்கள் ரட்சிப்பை முடியும்:
நாங்கள் உம்மில் தேறச்செய்யும்.

ரு. எப்போதுந்தேறினவராய்
நின்று நாங்கள் நீர் மீட்டோரை
உதவத்தேவையானதாய்ப்
போதித்துணர்த்திச், சுத்தத்தை
காட்டித்தேற்றி எல்லாரையும்
பலப்படுத்தி உதவும்.

156. ௱௫௬-ம். கீதம். L. M.

*The Holy Spirit.*

க. அடியார் நெஞ்சைத்தயவாய்
சந்தித்து ரப்பி உமக்கே;
பொருந்தும் அலங்காரமாய்
படையுந் தெய்வ ஆவியே!

உ. மெய்த்தேற்றரவளிக்கிற
பர ஈவாயிருக்கிறீர்;
வானபிஷேகமாகிய
சீவாறும் நேசத் தீயும் நீர்.

ஈ. அடியார் எச்சரிக்கையாய்
நீர் ஏவும்போல் நடக்கவே

பிசாசின் சூதைத் தூரமாய்
விலக்குந் தேவ ஆவியே !

ச. திரியேக தெய்வமாகிய
பிதாக், குமாரன், ஆவிக்கும்,
இப்போதென்றைக்குஞ்சகல
புகழ்ச்சியுமுண்டாகவும்.

ஏவுபவர்.

157. ௱௫௪-ம். கீதம். L. M.

*" Endued with power from on high."*
LUKE XXIV. 49.

க. தேவாவியின் வரங்களால்
அப்போஸ்தலர் நிறைந்ததால் ;
அநேகம் பாஷைகளிலே
ரட்சிப்பைக்கூறினார்களே.

உ. மெய்வேதவாக்கைச், சகல
புறத்திலும், பிரசங்கிக்க ;
அன்புள்ள ஏசு தேவனார்
அவர்களை அனுப்பினார்.

ங. தெய்வீக ஆவி ! என்கிற
வரத்தை வாங்கச் சகல,
நல்லறிவையுந் தருவார் :
திடன் அருள் உண்டாமென்றார்.

ச. துரைகள் முன்னே உங்களை
நிறுத்தும்போது, ஞானத்தை

பகரும் வாயைத் தருவார் :
பகர்வர் ஆவிதானென்றார்.

ரு. சுத்தாங்கத்தின் வரங்களை
கொடுக்குந் தேவ ஆவியை
எல்லா வணக்கத்துடனே
துதித்தல் செய்யும், மாந்தரே!

158. ௱௫௮-ம். கீதம். S. M.

*Prayer for the Spirit to reveal Christ.*

க. வாரும் நல் ஆவியே!
ஏசுவைக் காண்பியும் ;
அவரை வெளியாக்கியே
சாட்சியால் ரூபியும்.

உ. ரத்தத்தால் தெளித்து
ஏசுவின் தயவில்!
என் பங்கையே காண்பிப்பது
உமது நற்செயல்.

ங. யாவரும் அவரை
அறியும் படிக்கே ;
அவர் மிகுந்த அருளை
காட்ட இறங்கவே.

ச. எல்லாருக்கும் அன்பால்
சுத்தம் ரட்சிப்பையும்,
தந்து பலத்த சாட்சியால்,
ரூபிக்க அருளும்.

159. ாருகூ-கீதம். C. M.

*"Come, Holy Spirit! heavenly dove!"*

க. புறுவைப்போன்ற ஆவியே!
உயிர்ப்பிக்கவந்திடும்;
உம்மில் அன்பின் சுவாலையே
கொழுந்து செய்திடும்.

உ. பூமியின் அற்ப பொருளை
ஆசித்தழுந்திருேம்
நாமாக மோட்ச அருளை
அடைய அறியோம்.

௩. அடியார் கீதம் விருதா
எங்கள் முயற்சியேன்?
நாவால் வீண் சொல்லு ஒசன்று
விண்ணப்பமும் பாழ்தான்.

௪. நல் நேசரே! இச்சீரில் நாம்
என்றும் இருக்கவோ?
கல்நெஞ்சுருக்க ஏசுதாம்!
அன்புள்ளோர் அல்லவோ?

௫. புறுவைப்போன்ற ஆவியே!
உயிர்ப்பிக்க வந்திடும்;
சுத்தாங்க அன்பின் பலனே
பொழிந்தால் சீவனும்.

தேற்றுபவர்.

160. ௱௬௰-ம். கீதம், C. M.

*"Why should the children of a King &c."*
Rom. viii. 14–16. Ephes. i. 13, 14.

க. ராசமக்கள் என்றுந் துக்கம்
கொண்டு நிற்பதென்ன ?
ஆவி! நீர் வந்தருள் செய்யும்,
வியாகுலம் நீங்க.

உ. சுத்தருள் நீர் வாசஞ்செய்வீர்
மோட்ச ஈவை தந்து,
எப்போது பாவமன்னிப்பீர் ?
துக்கம் நீங்கச்செய்து.

௩. மீட்பர் சிந்தும் ரத்தபலம்
நெஞ்சிற்பதிந்திட ;
சாட்சிகாட்டும், தேவனிடம்
உற்பவித்தேனென.

௪. நீரோ, தெய்வ அன்பினீடு
மோட்சத்துக்குறுதி.
வானப்புறு ! சிறைகொண்டு
சேர்ப்பீர் என்னை, முத்தி.

161. ௱௬௧-ம். கீதம். 2-6's & 4-7's.

*The promised Comforter.*

க. தேவ ஆவி! வாரும் :
ஏழையிடஞ் சேரும்.

மேலாம் சுத்த ஸ்தலத்தில்
என்றுமாளுந்தேவரீர்,
தாழ்ந்து வாரும் ; உள்ளத்தில்
வந்திரும், தேற்றுபவர் !

உ. தயைபெற எண்ணி,
நிற்போம் உம்மை வேண்டி :
பாரும், ஸ்வாமி ! சாவோரை ;
வாரும், நம்மைத்தேற்றவே :
அருள் செய்யும் நேசத்தை ;
நம்மை ஆற்றும், ஆவியே !

162. ளசுஉ-ம். கீதம். 8, 7, & 4.

*"Thy spirit is good; lead me into the land of uprightness."* Ps. cxiii. 10.

க. வாரும், தேவ ஆவி ! வாரும்
எங்கள் ஆத்துமாவிலே :
தேவ சீவு நன்மை தாரும் ;
வாரும், சுத்த ஆவியே !
ஞான தீபம்
உம்மால்தானே ஆகுமே.

உ. எங்கள் நெஞ்சில் நல்லபுத்தி
தெய்வபத்திதோன்றவே :
அதை நீர் நன்றாய்த் திருத்தி ;
தப்புச்சிந்தை யாவுமே :
மாற்ற வாரும்,
பரிசுத்த ஆவியே !

௩. மோட்சமார்க்கத்தைக் குறித்து
எவ்வகை விரோதமும் :
நீங்க, என்னை நீர் பிடித்து ;
வல்லனாகச்செய்திடும் :
கால்முடங்கி
போகில், நீர் இரட்சியும்.

௪. நெஞ்சும் என்னிலே கலங்கி
நாயனே ! இரட்சியும் :
என்று கெஞ்சும்போதிரங்கி ;
என்னைத் தேற்றிக்கொண்டிடும்.
துன்பம் போக,
நீர் சகாயராயிரும்.

163. ௱௬௩-ம். கீதம். C. M.

*Presence and aid of the Spirit implored.*

க. நல்லாவியே ! நான் பாழ்நிலம் ;
இரக்கமாயிரும்.
இயேசுவின் நிமித்தியம்,
என்னிற் பிரகாசியும்.

உ. இருள் பகை விரோதமும்
உம்மாலே நீங்கவே :
நற்புத்தி அன்பு சாந்தமும்
உண்டாக்கும், ஆவியே !

௩. என் மனசை இரக்கமாய்
சுத்தி கரித்திடும்.

அதை என் மீட்பர் சாயலாய்,
திருத்தி ஆண்டிடும்.

ச. சத்தியமுள்ள மார்க்கத்தில்
நிலைமையாகவும்.
நடக்கப்பண்ணி, மோட்சத்தில்,
என் ஆவியை யேடும்.

164.    ௱சுச-ம். கீதம்.    L. M.

*"Come Holy Ghost."*

க. இரங்குந் தேவ ஆவியே!
தொழும்பர் ஆத்துமாவிலே:
பரத்தின் நன்மையைக்கொடும்;
மிகுந்த அன்பை ஊற்றிடும்.

உ. உம்மாலே தோன்றுஞ் சோதியால்
எத்தேசத்தாரையும் அன்பால்,
சம்பந்தமாக்கி, யாவர்க்கும்
நம்பிக்கையைக் கொடுத்திடும்.

ஙு. பரத்தின் துய்ய தீபமே!
உம்மாலே, ஏசு கிறிஸ்துவே!
எல்லாரும் பற்றிக்கொள்ளவும்,
துதிக்கவும், செய்தருளும்.

ச. எல்லாரும் ஏசு கிறிஸ்துவை!
அல்லாமல் வேறு மீட்பரை
பற்றுமல் நல்ல உண்மையும்
புகழுங் காட்டச் செய்திடும்.

ரு. விழிப்புண்டாக்கி, மோட்சத்தை
குறித்து நல்ல புத்தியை,
எல்லார்க்கும் அன்பாய் அளியும்;
எளிஞரை இரட்சியும்.

சு. களிப்பிலுந் தவிப்பிலும்
பிழைப்பிலும் இறப்பிலும்
எப்போதும், ஊக்கமாகவே:
இருக்கச்செய்யும், ஆவியே!

165. ௱கூரு-ம். கீதம். P. M.

JOHN XIV. 26. ROM. VIII. 14–16.

(க-ம். பங்கு.)

க. கர்த்தாவின் சுத்த ஆவியே!
நீர் எங்கள் ஆத்துமத்திலே:
இறங்கி வாசம்பண்ணும்
பரவெளிச்சமாகிய,
உம்மாலே நாங்கள் சீர்பட:
தெளிந்த நெஞ்சுங் கண்ணும்,
தந்து வந்து,
மெய்ச்செபத்தை, நற்குணத்தைப், போதிவியும்:
மெய்ச்சந்தோஷத்தை யளியும்.

உ. நீர் போதிவிக்கும் வார்த்தையே
எப்போதும் எங்கள் நெஞ்சிலே:
தீயாய் எரிவதாக.
பிதா, சுதன், இருவரால்,
இரங்கும் உம்மையும் அதால்

திரியேக தெய்வமாக.
நல்ல வல்ல,
பத்தியோடும், பணிவோடும், போற்றிப்பாடும்
வாக்கை எங்களுக்குத்தாரும்.

௩. நல்லார் அடைகிற எல்லா
மெய்ஞ்ஞானத்துக்குங் காரணா!
நீர் எங்கள்மேலே வாரும்.
மற்றோருக்குஞ் சன்மார்க்கத்தை
அன்பாகக் காட்டுங் கல்வியை,
நீர் எங்களுக்குத் தாரும்.
நாட்டில் காட்டில்,
தேசமெங்கும் போய் அடங்கும் நாள் உண்டாக.
உம்மால் மெய்ப் பலப்பதாக.

(உ-ம். பங்கு.) P. M.

*The same.* Rom. viii. 26.

௧. வழித்துணையாங் கர்த்தரே!
நல்யோசனை யறியோமே:
நீரே வழியைக்காட்டும்.
எல்லா உபத்திரத்திலும்
திடம் நிலவரத்தையும்
அளித்து, முசிப்பாற்றும்.
வாரும், பாரும்
கை சலித்துக் கட்டுவிட்டுப் போனயாவுஞ்
சீர்பட நீரே உசாவும்.

௨. பொல்லாத சத்துருக்களை
எப்போதும் வெல்லும் வல்லமை
குறையற உண்டாக,
நீர் எங்கள்மேல் நற்றைலமே:

இறங்கிச் சேவகத்திலே
முனைகொடுப்பீராக.
தேற ஏற
கண்ணெடுக்கும் யாவருக்கும் நவமாக
ஆறுதல் அளிப்பீராக.

(௩-ம். பங்கு.) P. M.

*The same.* 1. COR. XII. 8–11. GAL. V. 22, 23.

க. சீவாவி! நாங்கள் ஏசுவின்
பிரிய சுவிசேஷத்தின்
பேரின்பத்தால் நிறைந்து ;
ரட்சிப்பின் நீளம் அகலம்
சினேகம் ஆழம் உயரம்
ஏதென்றுணர்வடைந்து ;
பாவம் சாபம்
வென்ற கர்த்தா! எங்கள் பத்தாவென்றறியும்
திட நிச்சயம் அளியும்.

உ. பரத்தின் மதுரப்பனி
நீரெங்கள் உள்ளத்துருகி
அன்பால் நிரம்பப் பண்ணும்.
சகோதரர் ஒன்றாகிய
சினேகத்தைக் கெடுக்கிற
பொறாமையும் வன் கண்ணும்
வாடி மாறி
நல்லிணக்கம் மெய்யிரக்கம் நேசக்கட்டும்
சாந்தம் அன்பும் வளரட்டும்.

௩. கற்போடே எங்கள் நாட்களை
நடத்த, எங்கள் ஆவியை
பலப்படுத்தி வாரும்.

பொல்லாத ஆசை இச்சையை
விலக்கி அது வெங்களை
விஷந் தீண்டாதே காரும்:
ஆன வான
வாழ்வைநாடுஞ் சீரைத்தாரும் மோட்சங்காட்டும்
அதால் எங்கள் நெஞ்சை யாற்றும்.

## மனிதனைக்குறித்தது.

### அவனின் சீர்கேடு.

166. ௱சுகூ-ம். கீதம். P. M.

*"Behold, I am vile; what shall I answer thee?"*
JOB. XI. 4.

க. கர்த்தரோ! வருத்தமான
கேடு என்னில் இல்லையோ?
நான் முன்னோரின் தன்மையான
துர்க்குணத்தானல்லவோ?
கெட்ட நானே
வெட்கத்தோடு நிற்கிறேன்.

உ. என் நடக்கை மாறுபாடு
சித்தமும் பொல்லாததே:
நன்மைக்கே அது ஏலாது
பொய்களுக்கு ஓடுமே:
இந்தகேடு
என்னை விட்டு நீங்குமா?

ங. என்னை யுமதாவியாலே:
நீர் திருப்பி யாவையும்,

உம்முடைய அன்பினாலே ;
என்னில் மாற்றி ரட்சியும்.
கெட்ட சுபாவம்
போகப்பண்ணும் கர்த்தரோ !

167. ௱௬௭-ம். கீதம். ST. POLYCARP.

"*What must I do to be saved?*" ACTS XVI. 30.

க. எங்கே யோடுவேன் ?
பாதகனானேன் :
தீமை யெங்கும் என்னை மூடும்
ஆதரிக்க ஆராற்கூடும் ?
எங்கே யோடுவேன் ?
பாதகனானேன்.

உ. ஏசு! கர்த்தா நீர்
என்னைக் கூப்பிட்டீர் :
ஆதலால் உமக்கடங்கி
அன்புடன் உம்மை வணங்கி
நிற்கிறேன். ஆ ! நீர்
என்னைக் கூப்பிட்டீர்.

௩. பாவத்தாலுண்டாம்
துன்பமே யெல்லாம்
உம்மால் தீர நீர் மரித்தீர் ;
மாசில்லாத ரத்தம் விட்டீர் ;
இவ்வகையே : நீர்
என்னை ரட்சித்தீர்.

ச. பாவந் தீயது !
ஆகிலும் அது
நீர் அடைந்த சாவினுலே ;
நீங்கிப்போயிற்ருதலாலே ;
பாவியான நான்
சுத்த நீதிமான்.

168. ௱௬௲ு-ம். கீதம். C. M.

2. JOHN II. 16.

க. மிகுந்த பாவச்சேற்றிலே
அமிழ்ந்தவனுனேன்
விஸ்தார பூதலத்திலே
சகாயத்தைக் காணேன்.

உ. ஆ, நேசரோ ! என் நோவிலே
சகாயரா யிரும்
தெய்வீக அன்பை நெஞ்சிலே
நிறுத்தி ரட்சியும்.

ங. அதே அன்புள்ள ஏசுவே !
என் ஆவியிற் பயம் ;
நில்லாமல் விட்டுப்போகவே
பலத்த எத்தனம்.

ச. என் தேகமும் என் ஆவியும்
விலகும் போதிலே ;
நான் உம்மைக்காண என்றைக்கும்
சந்தோஷங்கோள்வேனே.

அழைக்குதல்.

169. ௱௬௯-ம். கீதம். 7's.

*"Come unto me, all ye that labour and are heavy laden, and I will give you rest."* MAT. XI. 28.

க. பாவப்பாரஞ் சுமந்து
இளைத்தோரே! வாருங்கள்.
தூரம்போனோரை ஏசு!
சேர்ப்பாரென்று பாருங்கள்.
மனஸ்தாபமுள்ளோரே!
கேளுங்கள்; அவர் வாக்கு
உங்களை ஏற்றுக்கொண்டே
ஆற்றுவேனே: என்பது.

உ. தயவுள்ள ஏசுவே!
நீர் சொல்லுவது சத்யம்.
என்று நம்பினோம், நீரே
எங்கள் குற்றத்தை நீக்கும்.
எங்கள் பாவத்தைத் தீர்த்து
எங்களை மன்னிப்பீரே:
நாங்களுஞ் சந்தோஷித்து
பாக்யராவோம் அப்போதே.

௩. பாவ மனஸ்தாபமும்
நிறைந்த ஏழைகளாய்;
தேவ கோபாக்கினைக்கும்
பயப்பட்டவர்களாய்;

துக்கம் ஆற்றுவீரென்று
விசுவாசித்து வந்தோம் :
உம்மிற் பாவமன்னிப்பு
இப்போ வாங்கக்காக்கிறோம்.

170. ௱எ௰-ம். கீதம். 7's.

*"Why will ye die?"* EZEK. XVIII. 31.

க. பாவீ, கேள் ! ஏன் கெடுவாய் ?
கர்த்தர் தாம் இரக்கமாய்
கேட்டுக்கொண்டு நிற்கிறார்
மோட்சஞ் செல்வந்தருவார்.

உ. உன்னை சிஷ்டிசெய்தவர்
காத்துக்கொண்டு வந்தவர்
உன்னை மீட்ட ஏசுவே !
காயங் காட்டி நிற்கிறாரே.

௩. மீட்கப்பட்ட பாவியே !
தேவ அருட் சீவனை
தள்ளிவிட்டு கொடிதாய்
நித்தம் சாபம் ஏன்கொள்வாய் ?

௪. சுத்த ஆவியானவர்
உன்னைச் சுத்தஞ் செய்வார்
மோட்சானந்தம் பெறவே ;
உனக்கருள் ஈவாரோ.

௫. பாவீ, கேள்! நீ தீயிலும்
வெந்தெரிந்து என்றைக்கும்
வேதனை நிறைந்த சா
என் கொள்வாய்? திரும்பிவா.

மனஸ்தாபம்.

171. ஙளக-ம். கீதம். 7's.

*Conviction of sin.*

க. தேவனே! நான் எத்தனை
பாவ பாதகங்களை
செய்து வந்தேனென்பதே;
தோன்றப்பண்ணும் கர்த்தரே!

உ. ஆ, ஐயோ! மா பாவத்தில்!
மாண்டுபோயிருக்கையில்,
என்றும் வாடி நோகிறேன்.
துக்கத்தாற் கலங்கிறேன்.

௩. நெஞ்சு என்னை குத்தவே;
துன்பந் துயர் மிஞ்சவே;
ஆவியுங் கலங்கிற்று.
கண்ணீர் பாய்ச்சலாயிற்று.

௪. வெட்கம் கொண்டவேழையேன்
துக்கத்தோடுமே வந்தேன்.
சுவாமி! யென்னை மிகவும்
தேற்றி மன்னித்தருளும்.

172. ாஎஉ-ம். கீதம். L. M.

*"God be merciful to me a sinner."* LUKE XVIII. 13.

க. நிர்ப்பந்தமான பாவியாய்
நான் இங்கே தேவரீருக்கே:
முன்பாக மா கலக்கமாம்.
பயமாய் வந்தேன் கர்த்தரோ!

உ. என்பாதகத்தை மன்னியும்.
என் சஞ்சலத்தை நீக்கிடும்;
இரங்கித்தயை அளியும்:
ஆ! கோபமாயிராதேயும்.

ங. என் குற்றத்துக்குத் தக்கதாய்
செய்யாமல் தயவாயிரும்.
பிதாவே! என்னைப்பிள்ளையாய்
திரும்ப நோக்கியருளும்.

ச. என் நெஞ்சில் திகில் தணியும்
நீர் என்னைக்கேட்டு ரட்சிப்பீர்;
ஏசுவே! ஆற்றலளியும்.
ஒர்க்காலும் என்னைக் கை விடீர்.

173. ாஎங-ம். கீதம். C. M.

*"Enter not into judgment with thy servant."*
Ps. CXLIII. 2.

க. கர்த்தாவே என்னைக் கோபமாய்!
விசாரியாதிரும்.

நான் செய்த தீமைக்கேற்றதாய்
சரிக்கட்டாதிரும்.

௨. நான் சாபத்தைக்காணுமலும்
என்றென்றும் வாழவே;
என் பாவத்தைப்பாராமலும்
மன்னியும் கர்த்தரே.

௩. ஆரோக்கியத்தை அளியும்
நோவாய்க்கிடக்கிறேன் :
என் நெஞ்சில் புண்கள் எரியும்
மனம் நருங்குண்டேன்.

௪. ஆத்தும மீட்பராகவே ;
திரும்பிச் சேர்த்திடும்.
ஆ! உமதன்புக்காகவே ;
கர்த்தாவே! ரட்சியும்!

174. ௱எ௪-ம். கீதம். 7's.

"*O wretched man that I am!*" Rom. vii. 24.



௧. ஏழைப்பாவியான நான்
கேடுவன்மமுள்ளவன் :
நான் மகா தரித்திரன்
பாழ்நிலத்தைப் போன்றவன்.

௨. என் சரீர இச்சையும்
ஆவியைக் கெடுக்குமே :
உலக துன்மார்க்கமும்
மனதை நெருக்குமே.

௩. ஆ, நான் உம்மை ஏசுவே!
நல்ல பத்தியுடனே
பற்றிக்கொள்ளும் நேசமே;
என்நேஞ்சில் உண்டாகவே.

௪. ஆ, இவ்வேழைக்கே! உம்மால்
ஆதரிப்புண்டாகுமே;
என் இக்கட்டும் அதினால்
மாறி நீங்கலாகுமே.

175. ௱௭௫-ம். கீதம். P. M.

*The broken heart.* 2. Cor. vii. 10.

(௧-ம். பங்கு.)

௧. அருளின் ஊற்றும் ஏசுவே!
வியாகுலமும் பாடும்.
படுகின்ற என்நேஞ்சிலே
இருக்கும் நோவைப்பாரும்.
அநேக அம்புதைத்ததாய்,
என் பாவங்கள் அகோரமாய்,
என் மனசை வதைக்கும்.

௨. மரத்திற் சாவின் வாதையாய்
நீர் பட்ட நோயைப்பாரும்;
என் நோவை நீக்கி,
தயவாய் ரட்சிப்பளிக்க வாரும்.
நான் துக்கத்தோடே என்னுட
இக்கட்டிலே மடிகிற,
நிர்ப்பந்தத்தை விலக்கும்.

௩. என் நாட்களில் நான் பண்ணின
போல்லாப்பேன் ஞாபகத்தில்,
வந்தால் கற்பாரமாகிய
பயமேன் ஆத்துமத்தில்
உண்டாம் நீர் சோன்ன வார்த்தையால்,
நல் ஆறுதல் இல்லாவிட்டால்,
என் நோவிற்கேட்டுப்போவேன்.

௪. நோறுங்கின நேஞ்சுடனே
வந்தும்மைப் பற்றிக்கோள்ளும்.
எல்லார்மேற்றாழ்ச்சியன்றியே ;
அருள் உண்டேன்று சோல்லும்.
அவ்வார்த்தை நிலையானதால்,
என் மனதைத்தன் இன்பத்தால்,
முழுதும் உயிர்ப்பிக்கும்.

௫. இப்போதும் பாரமாகிய
என் மனசாட்சியாலே ;
வதைந்த நானும் உம்முட
தேய்வீக ரத்தத்தாலே ;
மன்னிப்படைய ஆவலாய்,
உம்மண்டை வந்து பணிவாய்,
குனியும் ஏழைப்பாவி.

(௨-ம். பங்கு.)　　P. M.

*The same.*

௧. புவியிற்சிறுவயதை
துவக்கி இஃதுமட்டும் ;

நான் செய்த அக்கிரமங்களை
அன்பாய் மன்னித்தகற்றும்:
என்றும்மை என் இக்கட்டிலே
சாஷ்டாங்கப்பணிவுடனே;
விண்ணப்பம் பண்ணச்சேர்ந்தேன்.

உ. ஆ! சுவாமி நான் பிழைத்தினி
கீழ்ப்பட்ட பிள்ளையாக,
நீர் மகிமைப்படும்படி
நடக்கிறதற்காக,
நீர் உம்முடைய தயவின்
படி, மன்னித்துப் பாவத்தின்,
நுகத்தடியை நீக்கும்,

ங. மகிழ்ச்சியுள்ள ஆவியால்!
இவ்வேழையைக்காப்பாற்றும்:
நீர் பாடுபட்டு மாண்டதால்
என் சாவில் என்னை யாற்றும்
என் நெஞ்சில் விசுவாசத்தை
முடியக் காத்தடியேனை
உம்மண்டை சேர்த்துக்கோள்ளும்.

176.      ாஎசு-ம். கீதம்,      8's. & 7's.

*Sin confessed and pardon sought.*

க. மா போல்லாங்கை நடப்பித்தேன்!
பாவக்கேடு மிஞ்சிற்று,
நல்ல பாதை விட்டுவிட்டேன்;

உமக்கே விரோதித்து,
கோபத்துக்குப் பயமாக
ஏதுவாய் இருக்கிறேன்.

௨. கல் நெஞ்செனக்குட் பிளந்து
அறஞ்செய்தும் ஆகாதே,
கண்ணீர் வெள்ளமாய்ப் புரண்டு
ஓடினாலும் நீங்காதே.
பாவம் போக்கும் பலியாக,
சீவன் தந்தும் போதாதே.

௩. நீரோ, தேவ ஆட்டுக்குட்டி!
சிந்தின இரத்தமே:
பாவங்களைச் சுத்தம்பண்ணி
ஆக்கினையை நீக்குமே,
அந்த ரத்தமே என்னையும்
சுத்தம் பண்ணச் செய்திடும்.

177. ௱௭௭-ம். கீதம். L. M.

*Mourning over sin.*

௧. என் பாரமான பாவத்தை
நீக்கி அகற்றி அருளும்,
என் ஆத்துமாவைத்தயவாய்
தாழ்மையில் பார்த்திரட்சியும்.

௨. என் கர்த்தரோ! என் மீட்பரோ!
எப்போதும்மைத்தரிசிப்பேன்?
தேடி தவித்தும், உமக்கே;
வராமல் தூர நிற்கிறேன்.

ங. என் நெஞ்சுக்கு சந்தோஷத்தை
தேடுகிறேன் என் மீட்பரே,
சிநேகம் சாந்தம் ஊக்கத்தை
எனக்கு தாரும் ஏசுவே.

ச. கட்டான பாவ பாசத்தை
அறுத்தென்னை இரட்சியும்,
நான் உம்மில் சேர்ந்து சுத்தத்தை
அடையும்படி அருளும்.

ரு. வாரும் கர்த்தாவே, பாவியை
தாமதியாமல் தேற்றிடும்,
என் நெஞ்சிலும் நற்கிருபை
வெளிப்படுத்தியருளும்.

178. ஈஎஅ-ம். கீதம். S. M.

*Blessedness of the pardoned penitent.* Ps. XXXII.

க. தன் குற்றம் நீங்கினோர்
தேவருள் பெற்றோர்:
ஆண்டவர் குற்றஞ் சொல்லாதோர்
வாழ்வுள்ளவர்களே.

உ. தாஞ்செய்த பாவமே
ஆற்றாத துக்கந்தான்
நடையும் பேச்சுங்காட்டுமே;
மெய் மனஸ்தாபமாம்.

ங. குற்றம் மறைத்ததால்
பட்டேன் மாதுயரை.

அதை அறிக்கை செய்ததால்
அடைந்தேன் மன்னிப்பை.

௪. தீயோர் சீர்கொள்ளட்டும்
பாவத்தை விடுவார்.
நல்லோர் கர்த்தாவைச் சேரட்டும்
கிருபை பெறுவார்.

௫. துன்மார்க்கனுக்கையோ!
வேதனைவருமே :
தேவனை நம்புவோனுக்கோ :
மா தயை உண்டாமே.

௬. அன்புள்ள நீதரோ !
மகிழ்ச்சிக்கொள்ளுங்கள்
மனதிற் செம்மையுள்ளோரோ !
களித்துக் கூடுங்கள்.

குணப்படுதல்.

179.　　௱௭௯-ம். கீதம்.　　S. M. D.

*"I abhor myself and repent in dust and ashes."*
JOB. XIII. 6.

க. நான் மனந்திரும்பி
சுய இச்சைவிட்டு ;
தாழ்ந்து மனஸ்தாபமாகி ;
சந்நிதானம் நின்று,
தேவுக்கெதிர் செய்யும்
தீங்கை எண்ணி நைந்து,
திருரத்தம் மூழ்கி, சாந்தம்
பெறச்செய்யும், ஏசு !

உ. ஏசு! எனதுள்ளம்
குணப்படச்செய்து;
உண்மையான மனஸ்தாபம்
நையும் நெஞ்சிற்றந்து;
கடாட்சமாய் நோக்கி,
வன்னெஞ்சை உருக்கும்.
கன்மனதை அன்பால் தாக்கி,
ரண்டாய்ப் பிளந்திடும்.

180. ஙஅ-ம். கீதம். L. M

PSALM LI.

க. பிரலாபர் செய்யும் சேபம்
கேட்பீர்: பாவி செய்த குற்றம்
திருவுள்ளத்தடையாது,
கோபம் நீங்கும், கடாட்சித்து.

உ. என துள்ளம் சுத்தமாக
மாற்றும் பாவம் எல்லாம் நீங்க:
உமதாவியுடன் கூடி,
என்றும் அதில் வாழும், தங்கி.

ங. தேவரீரா நீங்கி, ஒளி
இன்றிவாழ்வதேலாதினி.
என்னைக்காக்கும் பலன் தாரும்:
பாவம் செய்யாதென்னைப்பேணும்.

ச. ஆவிக்கு நான் துக்கம் செய்தும்;
இன்னும் துணை தந்து தேற்றும்.

சுதன் புண்ய பலம் பெற
அருள் செய்யும், உம்மைச் சேர.

௫. அப்போ, யார்க்கும் சொல்வேன் ரட்சை :
தீயர் காண்பார் தெய்வ தயை :
மீட்பர் சிந்தும் ரத்தம் சார்ந்து,
போற்றியடைவார்கள் மீட்பு.

181. ௱௪க-ம். கீதம். 7's & 6's.

*"The Lord turned and looked upon Peter."*
LUKE XXII. 61.

க. கடாட்ச ஏசு! பாரும்
நெறி தப்பும் ஆட்டை :
பேத்ருபோற்கண்ணீர் வெள்ளம்
பாயச், செய்யுந் தயை.
நீடிய சாந்தம் காட்டி,
என்னைச் சீர்படுத்தும்.
கர்த்தா! என்னிற் கண்ணோக்கி,
கன்னெஞ்சுரம் போக்கும்.

உ. உயர்ந்தோங்கும் பிரபு!
தாரும் மனஸ்தாபம் :
மகா அன்பு காண்பித்து,
மனத்தாழ்மை தாரும்.
என்னைத்துக்கப்படுத்தி,
தாரும், பிரலாபம் ;
கர்த்தா! என்னிற் கண்ணோக்கி,
கன்னெஞ்சுரம் போக்கும்.

௩. சுயவிரக்கங் கொண்டு,
அருள் மேன்மை காட்டும்.
என்னைச்சுத்தம் புரிந்து,
பாவமெல்லாம் நீக்கும்.
என்னில் மனம் உருகி,
தாரும் மனஸ்தாபம் :
கர்த்தா ! என்னிற்கண்ணோக்கி,
கன்னெஞ்சுரம் போக்கும்.

௪. கடாட்சம் வைத்து, யேசு !
சாவாதருள் செய்யும்.
ஆனந்தம் சீவன் அன்பு
தேவர் கண்ணிற்பாயும்.
மீட்குஞ்சொல்லால் உருகி,
தயை வெளிப்படுத்தும்.
கர்த்தா ! என்னிற் கண்ணோக்கி,
கன்னெஞ்சுரம் போக்கும்.

182. ௱அ௨-ம். கீதம். 6's. & 7's.

*"I will take away the stony heart out of your flesh."*
EZEK. XXXVI. 26.

க. உயர்ந்தோங்கும் பிரபு !
இஸ்ரேலின் மீட்பர் ! பாரும் :
சாந்தஞ்செய்யுந்தேவன்பு
தந்து, நீக்கும் நெஞ்சுரம்.
மெதுவாக்கும் கல்லையும் :
நோக்கி நெஞ்சை நொறுக்கும்.

௨. ஆயக்காரன் ஆலயம்
  வந்தாற்போலத்துக்கித்து,
தூர நின்று தவித்தும்
  அஞ்சி மார்பில் அடித்து,
என் பேரிற்றயைசெய்யும்
  என்று சொல்வேன் விண்ணப்பம்.

௩. நிழல்போலும் இவ்வாழ்வு
  என்னை நினைத்தருளும்:
மாய்ந்து போகும்போழுது,
  காட்டும் தேவருதிரம்
சோருமனம் தேவனை
  காணச்செய்யும் தயவை.

183. ௱௮௩-ம். கீதம். L. M.

*"My yoke is easy and my burden is light."*
MAT. XI. 30.

க. என் பாவங்களின் பாரத்தை
நீங்குவது என் விருப்பம்
ஏசுவே! என் ஆத்துமத்தை
தாழ்மையிற்பார்த்து இரங்கும்.

௨. என் கர்த்தரோ! என் மீட்பரோ!
உம்மை எப்போ தரிசிப்பேன்?
தேடித்தவித்தும் உமக்கே
வாராமல் தூர நிற்கிறேன்.

௩. என் ஆத்துமத்துக்காறுதல்
தேடுகிறேன் ரட்சகரே!
சாந்தந்தாழ்மை தேவசாயல்
எனக்குத்தாரும் ஏசுவே!

௪. உட்கொண்ட பாவ பாசத்தை
அறுத்தென்னை விடுவியும்
நான் உம்மிற்சேர்ந்து சுத்தத்தை
அடையும்படி அருளும்.

௫. உமது, லேசான சுமை
எடுத்தும்மிற்கற்றுக்கொள்வேன்
ரத்தஞ்சிவந்த சிலுவை
பார்த்து ரட்சிக்கப்படுவேன்.

௬. ஆசை எனக்குண்டு; நீரோ
பலத்தைத்தந்து ரட்சியும்.
நிறைந்த பாக்யத்தால் இப்போ,
தென்னை நிரப்பவே வாரும்.

௭. வாரும் கர்த்தரே! பாவியை
தேற்றத்தாமதிக்காதேயும்.
என் மனதில் உந்தயவை
வெளிப்படுத்தியருளும்.

184. ௱அ௪௯-ம். கீதம். 8's. & 7's.

"*Blind Bartimeus.*" Mark x. 46–47.

க. ஆ, இரங்கும் ஏசு ஸ்வாமி!
தாவீதின் குமாரனே:

கண் குருடன் துன்பவாளி
பர்த்திமியு கேட்டானே.

௨. முத்து தங்கம் கல்வி என்னும்,
லோக ஆஸ்திவேண்டாமே:
கண் திறந்து பார்வை தாரும்,
நேசமுள்ள ஏசுவே!

௩. நெஞ்சே ஏங்கியிட்ட சத்தம்,
சனங்கேட்டுக் கோபமாய்
அவனைக் கடிந்து கொண்டும்,
கூப்பிட்டான் விடாமையாய்.

௪. ஏசு! நின்று கண்கடாட்சம்
செய்யப்பார்வை பெற்றோராய்;
சோதி கண்டு நேசத்தோடும்
பின்சென்றானே களிப்பாய்.

௫. கண்ணில்லாத மாந்தர் யாரும்
சோஸ்த சீரடையவே;
நேசம் பத்தி ஆவலோடும்
சேரப்பண்ணும், ஏசுவே.

185. ௱௮௫-ம். கீதம். 8, 7, & 4.

"*Heal my soul.*" Ps. LXI. 4.

௧. தேவரீரோ! தாழ்மையாக
திருப்பாதத்தண்டையே;

தேண்டனிட்ட ஆவலாக
வந்தேன் நல்ல ஏசுவே !
உம்மைத்தேடி
காணவே விரும்பினேன்.

உ. தயவாக, என்னைப்பாரும்
நின் சித்தத்தின்படியே :
என்றனை நடத்திக்கோள்ளும்.
என்னை மீட்டவர் நீரோ ;
உம்மைத்தேடி
உம்மைச்சேர்ந்த ஆளாவேன்.

௩. உமதருள் ஆசீர்வாதம்
மாத்திரம் வேண்டியது.
உம்முடைய தேவபாதம்
முத்தஞ்செய்ய அரிது
உம்மைத்தேடி
எல்லாம் உம்மோடடைவேன்.

௪. வல்ல கர்த்தாவினுடைய
சுத்த ஆட்டுக்குட்டியே :
கருத்தோடே என்னுடைய
ஞான மணவாளனே :
உம்மைத்தேடி
தரிசிக்கவே வந்தேன்.

ரு. என் பிரார்த்தனையைக்கேளும்
அத்தியந்த பணிவாய் :

கெஞ்சினேனைக் கேட்டுக்கொள்ளும்.
உம்முடைய பிள்ளையாய்
உம்மைத்தேடி
உம்மிடம் வருகிறேன்.

சு. லோக செல்வம் ஆசாபாசம்
வேண்டாமென்று தள்ளினேன் :
இந்த மாயை மனத்துக்கம்
மெய்வாழ்வை விரும்புகிறேன் :
உம்மைத்தேடி
மோட்சங்கூட அடைவேன்.

186. ௱அசுா-ம். கீதம். 7's. & 6's.

*Surrender of the heart.* Ps. cxix. 10.

க. தேவரீரைச் சார்ந்தோனாய்
கர்த்தாவே ! உண்மையில்
நிலைநிற்கத்தயவாய்,
நீர் எனக்கறிவில்
வளர்த்தி செய்தன்பினால்
என்னை நோக்கிக்கொண்டிரும்.
உம்முடைய வார்த்தையால்
வழியைக் காண்பியும்.

உ. லோகத்தை நான் வெறுத்து
என்னெஞ்சை உமக்கே ;
என்றென்றைக்குங் கொடுத்து
பிழைக்கும்படிக்கே ;

என் பொல்லாத இச்சையை
தயவாக ப்பாரும்.
நருங்குண்ட மனதை
தேவர் தானே ஆற்றும்.

187. ராஅள-ம். கீதம். 7's. & 6's.

*The same.* Ps. xix. 16.

க. காருண்ணிய ஒளியாய்
அன்புள்ள ஏசுவே!
நரசீவ கோலமாம்:
உம்மாலே என்னிலே
சோதி தாழ்மை குணமும்
உண்டானாலன்றியே;
மா சந்தோஷம் திடனும்
உண்டாக மாட்டாதே.

உ. பாவம் யாவும் மன்னித்து
அகற்றி யருளும்:
கடுங்கோபத்தை விட்டு
என்மேல் அன்பாயிரும்:
வந்திரும் என் மனசில்
சாந்தத்தைத் தாருமே:
என்னுடைய நெஞ்சத்தில்
நற் சீருண்டாக்குமே.

ஙூ. அடியேனை மீட்டோரே!
நானும்மைச் சேவிப்பேன்:

முழுப்பத்தியாகவே
  எப்போதும் நடப்பேன்:
அப்படி யுண்டாகவே
  பலம் கடாட்சியும்:
யாவும் புதிதாகவே
  படைத்துக் கொண்டிரும்.

188. ராகம்-ம். கீதம். C. M.

*The same.* PROV. XXIII. 26.

க. குமாரனே உன்னெஞ்சைத்தா
  என்றெனின்றிற் கேட்டீரோ.
சுவாமி என்னெஞ்சை நான் மகா
  அன்பாய்ப் படைப்பனே.

உ. ஐயா! இதை யிரக்கமாய்
  எடுத்துக்கொண்டிரும்.
என்னெஞ்சை யுள்ளவண்ணமாய்
  தந்தேன் அன்பாயிரும்.

ங. மெய்யாக நான் சுகிக்கவே
  இதைப்படைக்கிறேன்.
என்றைக்கும் ஆதரிக்கவே
  பணிந்து கேட்கிறேன்.

ச. கற்போன்ற நெஞ்சத்தை நன்றாய்
  திருத்திச்சாலவும்.
கண்ணீருடன் உருக்கமாய்
  கரையச் செய்திரும்.

ரு. அப்போதன்புள்ள ஏசுவே!
எல்லாரின் மீட்புக்கும்.
இறந்த தேவரீருக்கே
என்னெஞ்சு கீழ்ப்படும்.

சு. மன்னிப்புத்தந்து உள்ளத்தை
நடத்தி யாண்டிரும்
கடைசியிற் சுகுர்தத்தை
அளித்து ரட்சியும்.

189. ௱அ௯-ம். கீதம். 7's.

*The penitent coming to Christ.* Ps. XVIII. 28.

க. ஆ! அன்புள்ள ஏசுவே!
இந்த அந்தகாரத்தில்;
மானிடர் தவிக்கவே,
சூறைக்காற்றடிக்கையில்,
உம்மிடத்தில் சேருவேனே:
என்னைக் காத்துக் கோண்டிரும்.
மனதைக்கோடுக்கிறேன்;
அக்கரையில் ஏற்றிடும்.

உ. தேவரீர் இராவிடில்
வேறுதுணை இல்லையே;
நான் தனித்திருந்திடில்
கேட்டுக்குள்ளே போவேனே.
ஆ, துணையில்லாத நான்
உம்மிடத் தோதுங்கிறேன்

நீர் நல்லோடமாய் வந்தால்
அக்கரையிற் சேருவேன்.

௩. கிறிஸ்துவே! என்னெஞ்சுக்கு
நீர் நிறைவு செய்திடும்.
கீழ் விழுந்த ஏழைக்கு
செம்மையைக்கொடுத்திடும்.
ஊக்கமற்ற ஈனனை
நீர் நிறுத்தி ரட்சியும்.
கஸ்தியுள்ள நெஞ்சத்தை
அன்பினாலே தேற்றிடும்.

௪. நான் மிகுந்த பாவிதான்
நீர் மிகுந்த சுத்தரோ;
நான் அநீதி கேடுள்ளான்
நீர் நிறைந்த நீதியே.
நான் மிகுந்த ஆக்கினை
பெற்றுக்கொள்ள பாத்திரன்.
நீர் மகா ரட்சிப்பினை
ஈந்திடும் தயாபரன்.

௫. மட்டில்லாத பாவத்தை
நீக்க நீர் பலத்தவர்.
தேற்றும் மா சந்தோஷத்தை
எனக்கீயும் ரட்சகர்!
சீவ ஆற்றின் ஊற்று நீர்
உம்மில் தாகம் ஆறுமே;
என்றென்றைக்கும் தேவரீர்
என்னில் தோன்றும யேசுவே!

190. ௱கூ௰-ம். கீதம். C. M.

*Desire for holy affections.*

க. உள்ளான தேவபயமும்
  தீமையை வெறுத்தும்,
விரோதிக்கிற குணமும்
  என் வாஞ்சையானது.

உ. ஆங்காரமுந் துராசையும்
  எழும்பும்போது, நான்
அவை அடக்குங்காரணம்
  அன்புடன் பயந்தான்.

௩. இனி நான் என்றும் உம்மையே
  விடாத படிக்கு;
பிள்ளைக்குத்தகும் பயமே
  எனக்குக்கொடுத்து.

௪. நான் உம்மை விடும் நேரத்தில்
  ஆ! என்னைக்கண்டியும்,
மெய்த்துக்கத்தை என் மனதில்
  எழுப்பி யருளும்.

௫. என் குற்றம் யாவும் மனதில்
  நோகப்படச்செய்திடும்
கிறிஸ்துவின் அன்பால் மோட்சத்தை
  நான் தேட அருளும்.

191. ராகூக-ம். கீதம். L. M.

*"Thou knowest that I love thee."* JOHN XXI. 17.

க. நான் உம்மை நித்தமுள்ளத்தால்
சினேகிப்பேன் என் ஏசுவே!
நான் உம்மை நித்தம் வாஞ்சையால்
பின்பற்றுவேன் என் மீட்பரே;

உ. என் நேசரே! ரட்சிப்புக்கு
உதித்த தேவமைந்தனே;
முன் உம்மைச்சேர்ந்திராதது
எனக்குத்துன்பமாயிற்றே.

ந. உம்மைப்பற்றுமல் வீணுய்
பொல்லாங்கை செய்து சுற்றினேன்;
பரத்தைவிட்டுத் தூரமாய்
நிலத்தை யன்பாய்ப் பற்றினேன்.

ச. இப்போது நான் வணக்கமாய்
நடப்பதற்குத் தேவரீர்,
என்னைத்திருப்பி மா அன்பாய்
பிதாவிடத்திழுக்கிறீர்

ரு. இதே இரக்கம் மா தயை
அன்புள்ள உம்மைப் போற்றுவேன்;
ஏசுவே! என் நெஞ்சத்தை
உமக்கன்பாய்ப் படைக்கிறேன்.

192. ஏகூஉ-கீதம். C. M.

*Presence of Christ desired.* Isa. lvii. 15.

க. நொறுங்கப்பட்ட நெஞ்சிலே
பிரவேசிப்பேனென்றீர்;
அவ்வாக்குக்கேற்றதாகவே;
என்னில் பிரவேசிப்பீர்.

உ. இதில் உமக்கேற்காததை
அகற்றி போடுமேன்;
உம்மோடுசேரும் நெஞ்சத்தை
அன்பாய் நடத்துமேன்.

ந. இப்பாவியை எத்தினமும்
அன்பாக நோக்குவீர்:
நீர் கிறிஸ்துவின் நிமித்தமும்
என் குற்றம் மன்னிப்பீர்.

ச. என்லாபமே என் ஏசுவே!
அழிந்து போயினேன்,
ஆனாலும் என்னிடத்திலே
இருமென்றேங்கிறேன்.

ரு. அன்பாக என்னை நோக்கினால்
என் ஆவி வாழுமே!
அதற்கு நீர் தேவாவியால்
என்னை நிரப்புமே.

193. ௱௯௩-ம். கீதம். St. Polycarp.

*Living near to God.*

க. மா இராசனே!
  தாழ்மையாகவே ;
தேவரீருக்கே பணிந்து
  திருவார்த்தையை அறிந்து ;
அதை நெஞ்சிலே
  வைப்பேன் ஏசுவே.

உ. என்னை முழுதும்
  உம்மிடத்திழும் ;
நேசத்தோடே பூரிப்பாக
  உம்மோடோட்டிக்கொள்வேனாக ;
என்னை முழுதும்
  உம்மிடத்திழும்.

௩. லோகவாழ்வுக்கு
  சாயும் நெஞ்சுக்கு ;
உள்ளத்தை நன்றாய் திருத்தும்
  நீர் என் வாழ்வும் நீர் என் முத்தும் ;
லோகம் கேட்டுக்கே
  ஏதுவாகுமே.

௪. நான் விழிக்கவும்
  நித்தம் நித்தமும் ;
கெஞ்சவும் மகா அன்பாலே
  நீர் பலத்த ஆவியாலே!
என்னை நித்தமும்
  ஏவி ரட்சியும்.

194. ௱௯௪-ம். கீதம். L. M.

*The same.*

க. ஆ! உமது மா தயவால்
என்மேல் இரங்குங் கர்த்தரோ!
என் பாதகம் என் தோஷத்தால்
என்றும் என்முன் நிற்கின்றதே.

உ. அதை அன்பாக நீக்குமேன்
நான் செய்த பாவம் உமக்கே;
விரோதமேன்றழுகிறேன்
நீர் தண்டித்தாலும் நீதியே.

௩. நான் சன்மத்தால் அடைந்த சீர்
எல்லாம் பொல்லாங்கும் பாவமும்;
நல் உண்மையை விரும்பும் நீர்
அதைத்தானே ஈந்தருளும்.

ச. என் பாவக்குஷ்டரோகத்தை
அகற்றி என்னைக் கழுவும்;
நொறுங்கப்பட்ட ஆவியை!
திரும்பவும் உயிர்ப்பியும்.

ரு. என் பாவத்தைத்தொலைத்தென்னில்,
சுத்தாங்கமான மனதை;
படைத்து எனதுள்ளத்தில்
அருளும் புது ஆவியை!

விசுவாசம்.

195. ௱௬௫-ம். கீதம். ST. POLYCARP.

*Faith in Christ.* 1. COR. I. 30–31.

க. ஏசு நாதரே!
என் சுகிர்தமே;
நீர் என் பூரிப்பு என்றைக்கும்
உம்மிற்பாக்கியந் தழைக்கும்;
உம்மை நோக்குவேன்
என்னைச்சேருமேன்.

உ. மறைவின் கீழே
ஓடுவேன் நீரே;
என்னைக்காத்துக்கோள்வீராக
சாத்தானை அழிப்பீராக;
அப்போதேழையேன்
தப்பி மீளுவேன்.

௩. தேவரீருக்கு
மேன்மைதக்கது;
உம்முடைய சோதியாலே;
நான் பிரகாசமானதாலே
என்றுந் தாழ்மையேன்
உம்மைப் பற்றுவேன்.

196. ௱௯௬-ம். கீதம். 8's. & 7's.

*Trust in God through Christ.*
ROM. V. 1–2. EPHES. II. 18.

க. தேவரீரை விசுவாச
 பத்தியோடே தொழுவேன் ;
தாழ்மையாக நேசமாக
 உம்மையே நான் அண்டினேன் ;
நீர் மண்ணான பாண்டமான
 என்னை அன்பாய் பாருமேன்.

உ. என்னைச்சுத்த சீர்ப்படுத்த
 தயைபண்ணும் கர்த்தரே !
என்னைச்சொந்த ஆடாய்க்கொண்ட
 மேய்ப்பரான உம்மையே ;
சேர்வேனாக நீர் அன்பாக
 என்னைப்பாரும், ஏசுவே !

௩. நேசத்துடன் நீர் உம்மோடே
 ஐக்கமாக்கி எல்லோர்க்கும் ;
ஈயும் ரட்சை அடையவே
 தயை என்மேல் அருளும் ;
யாவும் நீரே தேவரீரே
 என்னைப்பார்த்து ரட்சியும்.

ச. ஆ ! என் ஞான ஒளியான
 தேவ ஆட்டுக்குட்டியே ;
எனதாவி உம்மைத்தாவி
 சேரும் மணவாளனே !

8's & 7s

பட்சத்தோடும் தயவோடும்
என்னைப்பாரும் மீட்பரோ!

197. ௱௯௰௭-ம். கீதம். L. M.

"*This one thing I do.*" PHIL. III. 13.

௧. ரட்சகரான ஏசுவே!
இரங்கி எனக்குதவும்;
பூலோகம் பற்றும் ஆசையே
அகற்றி என்னில் வந்திடும்.

௨. உம்மை எப்போதும் நேசிப்பேன்
வேண்டுதல் கேட்டிரங்குவீர்;
உம்மால் திருத்தியாகுவேன்
சுத்தாங்கந் தாரும் தேவரீர்.

௩. பூமியில் தங்கும் நாளெல்லாம்
உலக வாழ்வை வெறுப்பேன்;
ஏசுதானே என் விருப்பம்
அவரை நாடிப்பற்றுவேன்.

௪. அவர் காலடிகளை நான்
பற்றிப்பின்றொடர்ந்தோடுவேன்;
மேலான அவர் அன்பைத்தான்
தினமும் எண்ணிக்கொள்ளுவேன்.

௫. சிற்றின்ப ஆசை இனிமேல்
என்னில் இராமல் புரியும்;
மனம் ஒடுங்காதாகையால்
ஆண்டே அடக்கியருளும்.

198. ௱௯௮-ம். கீதம். C. M.

*"Unto you therefore who believe he is precious."*
1. Pet. ii. 7.

க. நன்மீட்பர் ஆட்டுக்குட்டியே!
நீர் எங்கள் வாஞ்சனை
உமது திருநாமமே
கொடுக்கும் இன்பமே.

உ. உமது வார்த்தை இன்பத்தை
செவியில் தோன்றவே ;
கேட்டால் மகா மகிழ்ச்சியாய்
சேர்வோம் உம்மண்டையே.

௩. இப்பூமியில் இருக்கையில்
ஏசு ! எம்சிந்தனை ;
பூலோகம் வானம் போயிடில்
அவர் எம்வந்தனை.

௪. தூதர்களோடும் அவரோ
மேகமேல் வருகில் ;
மீட்டோரும் நாம் கெம்பீரித்தே
துதிப்போம் மோட்சத்தில்.

199. ௱௯௯-ம். கீதம். 8-7's. & 4's.

*"One thing is needful."* Luke x. 42.

க. ஒன்றே தேவை என்றுசொன்னீர்
ஏசு! அதை நாடுவேன் ;

என்னை உம்மண்டைக்கழைப்பீர்
மாயையை அரோசிப்பேன்;
　　இவ்வுலோகம்
தழுவாமல் விடுவேன்.

உ. நன்மை லோகப்பொருள்களில்
தேடினாற் கிடையாதே;
ஏசு சுவாமி! உம்மண்டையில்
வாழ்வெல்லாம் இருக்குமே;
　　அதைத்தாரும்
மீட்பரான் ஏசுவே!

௩. இந்த நன்மை மரியாளே
வேண்டுமென்பதாகவே;
வாஞ்சையாகத் தெரிந்தாளே.
கிறிஸ்தின் பாதத்தண்டையே
　　சாந்தமாக
கேட்ட நன்மை பெற்றாளே.

௪. நானும் முழுவாஞ்சையோடும்
உம்மையே என் ஏசுவே!
அண்டிக்கொண்டேன் நீர் என்னோடும்
ஐக்கமாகும் சீவனே;
　　உம்மைப்பற்றும்
விசுவாசம் ஈவீரோ.

200. உஎ-ம். கீதம். L. M.

*Trust in God.* Ps. xv. Ps. cxxv. 1.

க. கர்த்தாவை நல்ல பத்தியால்
எப்போதும் நம்பும் நீதிமான் ;
எத்தீங்கிலேயும் கர்த்தரால்
ரட்சிப்படைந்து பூரிப்பான்.

உ. சந்தோஷம் செய்ய ஏற்ற நாள்
அவர் தெரிந்திருக்கிறார் ;
தண்டித்தபின் மகிழ்ச்சியால்
சன்மார்க்கனை நிரப்புவார்.

ஙு. உன் காரியத்தை நலமாய்
திருப்பும் வல்லவருக்கு
நீ ஒப்புவித்தால் நிசமாய்
விசாரிப்பார் அமைந்திரு.

ச. மன்றுடிப்பாடி பத்தியை
நடந்து கொண்டுன் வேலையை ;
மெய்யோடு செய்து உண்மையாய்
பணிந்து கொள் ரட்சிப்பாரே.

201. உஎக-ம். கீதம். C. M.

*The same.*

க. கர்த்தாவின் சித்தம் நல்லது
விவேகமாகவே ;
விளங்கிடும் செயலுக்கு
அடங்க வேண்டுமே.

௨. இக்கட்டிலும் ரட்சிப்பாரோ
மந்தாரம் போக்குவார்;
மிகுந்த ஊக்கமாகவே
இரு அருள் செய்வார்.

௩. கர்த்தாவின் சித்தம் நல்லது
கெடுக்க மாட்டாரோ;
தகப்பன் தான் தன் பிள்ளைக்கு
விஷத்தைப் போடானே.

௪. இதை அறிந்து நம்புவேன்
அவர் ரட்சிப்பாரோ;
இடைவிடாத அன்புடன்
சுகத்தை ஈவாரோ.

202. ௨௱௨-ம். கீதம். C. M.

*The same.*

௧. கர்த்தாவுக்குட் சந்தோஷமாய்
இரு நிதானனே;
உன்னை மிகுந்த திட்டமாய்
விசாரிப்பாருண்டே.

௨. அவர் கொடுத்த வார்த்தையை
நீ நம்புவாயானல்;
உன்னெஞ்சிலே சந்தோஷத்தை
அனுக்கிரகம் செய்வார்.

௩. உன் ரட்சகர் உன் வன்மையாய்
இருந்து ஆளுவார்;

உன் வேண்டுதற்குத் தக்கதாய்
பலத்தையே ஈவார்.

ச. ஓர் வேளை உன் சரீரக்கண்
அதைக் காணமல் போம்;
நம்பிக்கையான மனக்கண்
அதைத் தரிசிக்கும்.

ரு. மிகுந்த சோதியாகவே
உன்னில் பிரவேசிப்பார்;
சிறந்த மாதலத்திலே
உன்னை நடத்துவார்.

சு. அவர் சயித்தார் ஆகையால்
நீயும் சயம் கொள்வாய்;
அவரிடத்தில் அன்பினல்
சிறப்பாய் பூரிப்பாய்.

203. உாரு-ம். கீதம். C. M.

*Faith.*

க. சுத்தாங்கமாக்கும் நெஞ்சத்தை
மெய் விசுவாசந்தான்;
காணுத காரியங்களை
காட்டும் விசேஷமாம்.

உ. வானம் உலகஞ் சிஷ்டித்தார்
வானம் பூவும் அழியும்;
நீதிசெலுத்த வருவார்
என்றிவையை நம்பும்.

௩. முன் பின் நடக்கும் யாவையும்
　　மெய்யென்று ஏற்குமே
தற்செயலாய் ஒன்ருகிலும்
　　செல்லாதேன்றேண்ணுமே.

௪. ஆபிரகாமே முதலாய்
　　ஆனந்தத்திற் பத்தர்;
யாவரும் விசுவாசமாய்
　　கதியை யடைந்தார்.

௫. நாமும் அவர்களுக்கோப்பாய்
　　சிற்றின்பை வெறுப்போம்;
பேரின்பம் பெறும்படியாய்
　　ஏசுவை நம்புவோம்!

௬. மெய் விசுவாசம் அவரை
　　நம்பி பின்பற்றுமே;
இந்தருள் பெற்ற பாவியை
　　ரட்சிப்பார் ஏசுவே?

C. M.

204. உ௱௪-ம். கீதம். P. M.

*Walking under the guidance of God.*

க. கர்த்தாவே! உமக்கு
　　அடங்கத்தக்கதாக;
நடக்குஞ் சிந்தையை
　　கொடுத்த அன்புக்காக;
உமக்கிஸ்தோத்திரம்.
　　இப்போதும் நித்தமும்.

அதற்குப் பாத்திரம்
உண்டாகச் செய்திடும்.

உ. என்யோசனையை நீர்
நடத்திக் கொள்வீராக ;
என் இஷ்டத்தின்படி
நடக்கில் மோசமாக
போவேன் நீரோவேன்றால்
என் வேலையை யெல்லாம்
அன்பாய் நடத்தினால்
மிகுந்த நன்மையாம்.

௩. பொல்லாத ஆசையை
வெறுத்து உம்மைப் பற்றி ;
தகாத செய்கையை
சந்தோஷமாம் அகற்றி ;
உம்மோடு ஐக்கத்தை
எப்போதுந் தேடவும்,
என் ஏழை சித்தத்தை
உம்மில் அன்பாய் இழும்.

ச. என்னிலிருக்கிற
நல்லீவை நித்தமாக
எழும்பிக்கோள்ள நான்
உம்மில் நிலைப்பேனாக.
அதால் உம்மோடுதான்
மகா பரத்திலும்
அனந்த பாக்கியம்
எனக்கு நேரிடும்.

205. உாடு-ம். கீதம். 4-8's, & 2-6's.

*"Who will have all men to be saved."*
1. TIM. II. 4.

க. விசுவாசத்தின் கர்த்தரோ!
நான் அழியாமல் வாழவே;
நீர் விரும்புகிறீர்:
என் கண்திறந்து ரட்சிப்பை,
அளித்து நித்ய சீவனை
கொடுக்கக்கடவீர்.

உ. நீர் இருளை நீக்காவிட்டால்
உம்மை அவ்விசுவாசத்தால்
காணுமல் அஞ்சுவேன்:
உமது பேர் என் மனதில்
வெளிப்படுத்தி எழுதில்
அன்போடாராதிப்பேன்.

௩. தெய்வீக விசுவாசத்தை
அடைவது மகா தயை
என்றறிகிறேன், நீர்
நாங்கள் கேட்டால், எல்லாருக்குமாய்,
மரித்துப்போனீரென்றதாய்,
காண்பித்துணர்த்துவீர்.

ச. நாங்கள் தட்டாற் பிரவேசித்து,
கிருபைக்கேட்டாலடைந்து,
வரலாமென்கிறீர்:
எல்லாரையும், என்னைக்கூட,

இன்றும் என்றும் இரட்சிக்க
நீர் சித்தமாகிறீர்.

ரு. உமது சித்தப்படிக்கு,
இப்போ என் பாவமன்னித்து
நான் கேட்பதைத்தாரும்:
விசுவாச தேவ அன்பு
என்ற கதவைத்திறந்து
என்னை ஏற்றுக்கொள்ளும்.

206. உ௱சூ-ம். கீதம். C. M.

"*I will praise thee.*" Ps. CXVIII. 21.

க. என் தேவனைப்புகழவும்,
அவரின் ரத்தத்தை
என்றும் உணரும் இதயம்,
என் முதற்கோரிக்கை.

உ. என் இதயத்திற் பொறுமை
தாழ்மையுஞ் சாந்தமும்,
கிறிஸ்துவின் தேவ ஆளுகை,
தரிக்கவே செய்யும்.

௩. சீவனுஞ் சாவுங் கிறிஸ்துவை
நீக்காதபடிக்கு,
சத்தியஞ் சுத்த நம்பிக்கை,
அருளும் எனக்கு.

ச. உமது இருதயத்தில்
குற்றமில்லை என்றும்;
அத்தேவ நேசச் சாயலில்
நின்றேங்க உதவும்.

ரு. நீர் மனிதரின் துக்கத்தை
உணர்ந்திரங்குவீர்;
என் துக்கந்தீர்க்கத்தேவன்னை
உணர்த்தக்கடவீர்.

சா. நீர் தயை செய்யாதிருந்தால்
இளைப்பாறேன் அன்பே!
நான் பாவத்தை விட்டொழிந்தால்
உம்மில் தரிப்பேனே.

207. உ௱௭-ம். கீதம். C. M.

*Walking by faith.*

க. என் தயவுள்ள ஏசுவே!
எல்லாரின் மீட்புக்கும்.
நீர் சிந்தின இரத்தமே!
போதுமாய் முடியும்.

உ. மன்னிப்புண்டாக்கி உள்ளத்தை
சீராக்கும் உம்மையே!
நான் கற்றுக்கொள்ளும் திடனை
அளியும் கர்த்தரோ!

ந. எனக்கு பரிசுத்தத்தின்
உடுப்புடுத்துமேன்:

அதால் மாசற்றுச்சுவாமியின்
முன்பாகவே நிற்பேன்.

ச. இருள் பகையும் கபடும்
உம்மாலே போய்விட ;
வெளிச்சம் நேசம் மெய்மையும்
உம்மாலே வளர.

ரு. இங்கேன்னை தீயோர் கெட்டசீர்
துன்மார்க்கம் மோசமும் ;
சூழ்ந்தாலும் சுவாமிக்கேன்னை நீர்
நற்பத்தனுக்கிடும்.

208. உாஅ-ம். கீதம். P. M.

*"Great boldness in the faith which is in Christ Jesus."* 1. TIM. III. 13.

க. இயேசு நம்பங்கிலிருப்பாரானால்
நன்னேசரிடத்தில்நாம் நம்பிக்கொண்டால்;
அப்போதவர் தயை நம்மேலே என்றும்
ஒருக்காலும் மாறாமை நிலைத்திருக்கும்.

உ. இராவொருவேளை மா ஞானத்தினால்
தந்திருமுகத்தை மறைத்திருந்தால் ;
நீ திட்டமாயிரு உதயத்திலே
மகிட்ச்சியடைவாய் நற்சோதியிலே.

ங. விட்டோடிப்போனாலும் நிற்கின்றமலை
காணாமற் போனாலும் உயர்ந்தமேடை ;

மெய்யன்பினூற்றன நீர் மாறமாட்டீர்
பரத்திலுண்டான என்வீட்டைக் காப்பீர்:

ச. விண்ணோரைப்போல நாமும்மகிழ்வுடனே
இயேசுவின் நாமம் உயர்த்துவோமே;
அவர் பூரிப்போடே தயையைச்செய்வார்
என்றைக்கும் நம்மோடே நிலைத்திருப்பார்.

மன்னிப்பு.

209. உளகூ-ம். கீதம். P. M.

*Pardon through faith in Christ.*

க. தாழ்வில் இருந்து கூப்பிட்டும்
என் சத்தங்கேட்டன்பாக;
என்னழுகை எல்லாத்துக்கும்
செவிக்கொடுப்பீராக.
கர்த்தாவே! பாவமானதை
நீர் மன்னியாமல் நீதியை
பார்த்தால் ஆர் நிறகக்கூடும்?

உ. மன்னிப்பே எவனுகிலும்
தன் புண்ணியங்களாலே;
அடையான் உமமை யாவரும்
ஏசுவின் வழியாலே;
தேடி நம்பிக்கையுடனே
வந்தால் மா தயவாகவே
மன்னிக்கிறீர் கர்த்தாவே!

ரு. நான் ஏசுவைக்கண்ணோக்கிறேன்
என் புண்ணியம் அபத்தம்
தேவ அன்பையே நான் நம்புவேன்
அதற்கு வாக்குத்தத்தம்
மெய்யான தேவ வார்த்தையில்
உண்டாகுமே என் மனதில்
அதற்குக் காத்திருப்பேன்.

210. உாய-ம். கீதம். P. M.

*Praise for Pardon and Salvation.*

க. கர்த்தாவே! என் பிறப்பினுல்
உமக்குத் தூரமான;
நான் மீண்டுந் தேவதயவால்
உமக்கு பிள்ளையான;
சீர் அடைதல் மா பாக்கியம்
ஆ! உமக்கே இஸ்த்தோத்திரம்
பிதா, குமாரன், ஆவீ.

உ. நீர் என்னைத்தள்ளி போடவும்
தண்டிக்கவும் என் பாவம்,
என்னை நேரஸ்த்தனுக்கியும்
நீர் என்மேற் பரதாபம்,
வைத்தென்னை உம்மண்டையிலே
அன்பாகச் சேர்த்துக்கோண்டீரோ
ஆ, தயவுள்ள சுவாமி!

ங. இதாலே என் பிதா நீரோ
நான் உம்முடைய பிள்ளை;
தவறுதல்கள் என்னிலே
நீர் கண்டும் மோசம் இல்லை;
நான் பத்தியாய் என் தாழ்மையில்
மன்னிப்புக்கேட்டுக் கொள்ளுகில்
என் விண்ணப்பத்தைக் கேட்பீர்.

211. உாயக-ம். கீதம். 2-6's. & 4-7's.

*The prodigal's gratitude.* Ps. XXXIV. 1–4.

க. பரம பிதாவே!
உம்மைத்துதிப்பேனே;
விண் மண்களின் துதியை
கேட்கப்பிரியமாயிரும்.
பாவத்திற் செத்த என்னை
நீர் உயிர்ப்பித்தவரும்.

உ. நான் உமது சொந்தம்.
கிறிஸ்தில் என்னைப்பாரும்.
அந்நிய திக்கற்றோனாய்
வெகுகாலம் அலைந்தேன்;
இப்போ திரும்பினோனாய்
உமக்கு வருகிறேன்.

ங. தூரம் என்னைக்கண்டீர்
எனக்கிரங்கினீர்;
நிற்பந்த ஏழையனாய்

பாவச்சாவில் என்னை நீர்
கண்டு பரதபிப்பாய்
இரட்சிக்கத்தீவரித்தீர்.

ச. என்னை முத்தமிட்டு
பாவத்தை மன்னித்து ;
வாசியான வஸ்திரம்
எனக்கு உடுப்பித்தீர்
உமதன்பின் மோதிரம்
தந்து அலங்கரித்தீர்.

212. உ௱௧உ-ம். கீதம். 7's. & 6's.

"*The light of the world.*" JOHN VIII. 12.

க. அருளின் சோதியான
அன்புள்ள ஏசுவே !
நரரின் சீவனுன
உயர்ந்த நாயனே !
என் பாவத்தை மன்னித்து
சந்தோஷத்தைக் கொடும்
சினத்தை நீக்கிவிட்டு
என் மேல் இரங்கிடும்.

உ. நீர் தேவ ஆவியாலே !
மகிழவும் வன்மையும் ;
தந்தேன்னிலே அன்பாலே
எல்லாம் நடப்பியும்.
என்னெஞ்சினுலே கேட்டேன்

என் சென்மபாவத்தால்
நன்மை நீதி நீங்கினேன் ;
நான் செய்த த்தீமையால்.

ச. தயாபரர்! ரட்சித்து
துற்செய்கையாவையும் ;
என் ஆத்துமாவை விட்டு
விலக்கிப் போக்கிடும் ;
என் நெஞ்சு சுத்தமாக
நல்வார்த்தைக் கேற்கவே ;
நடக்கத்தக்கதாக
இரங்கும் கர்த்தரே !

சுவிகாரம்.

213. உ௱ஙூ-ம். கீதம். C. M.

*Adoption.*

Rom. viii. 15. Gal. iv. 5–6.

க. விண்ணோர்க்காதி தேவே ! கேளும்
அற்ப பிராத்தனே.
தந்தை ! யோக்கியன் அல்லனேனும்,
கேளும், அடியேனே.

உ. தெய்வ தந்தையென்னுஞ்சத்தம்,
எனதச்சம் நீக்கி ;
வானோர் பாடுங் கீதத்திலும்
தரும் மகா திர்த்தி.

உாருய மனிதனைக்குறித்தது.

௩. வாரும், ஆவி ! அருள் ஊற்றும்
பூரிக்கும் மனசில் ;
தாரும் புத்திர சுவிகாரம்
சேரும், பிதா அன்பில்.

௪. தெய்வ சாட்சி பெற்று நம்பி,
மகிழ்வேனே, என்றும் :
அப்பா, பிதா என்று சொல்லி,
கொள்வேன் மகா திடம்.

214. உாயசு-ம். கீதம், L. M.

*The same.* JER. III. 19.

க. பிதா அடியேன் பேரிலே
இரக்கம் வைத்தேன்னுடனே ;
நீ கிருபை யடைந்தவன்
நீ நம்முடைய புத்திரன்.

உ. நீ வேண்டியதை நம்மைக்கேள்
நாம் ஈவோம் ஏனெனில் உன்மேல்
கண்ணோக்கமாந் தகப்பனார்
நாந்தானே என்றுரைக்கிறார்.

௩. என் ரட்சகராம் ஏசுவால் !
நான் சேர்க்கப்பட்டபடியால்
தேவாவியின் வரங்களும்
அடியேனுக்ககப்படும்.

தேவன் பேரிலே அன்பு.

215. ௨௱௰௫-ம். கீதம். C. M.

"*My God, my portion and my love.*" Ps. xviii. 2.

க. என் தேவனே, என் செல்வமே,
நீர் நித்தமாட்சிமை ;
விஸ்தார வையகத்திலே
நீரோ என் வாஞ்சனை.

உ. இவ்வானமும் இப்பூமியும்
மிகுந்த அற்பமே ;
இவைகளில் ஒன்றாகிலும்
உமக்கோப்பில்லையே.

ஈ. சிநேகிதரும் செல்வமும்
கொடுப்பவர் நீரோ ;
அவையும் நன்மையாகிலும்
என் தேவனல்லவே.

ச. உலக ஆஸ்திகள் எல்லாம்
என் சொந்தமாகிலும் ;
நீரோ என்னில் இராவிட்டால்
என் நெஞ்சு நோய்ப்படும்.

ரு. அது நிமித்தம் கர்த்தரே!
உம்மைக்கொடுத்திடும்.
நீர் நிறைவான ஆஸ்தியே !
நீரோ சமஸ்தமும்.

216. உாலகூ-கீதம். C. M.

*The love of Christ constraining to his service.*

2. Cor. v. 14.

க. ஆ, யேசுவே! நீர் எத்தனை
நன்றாகத்தேற்றுவீர்;
நீர் உம்மைதான்பேறுகவே
எனக்குத்தருவீர்.

உ. என் நேசரோ அருமையாய்
இவ்வன்பு யாவுக்கும்;
உமக்கேப்போதுந் தகுமாம்
தோத்திரம் உண்டாகும்.

ங. எத்தயவையும் நினைத்து
நான் என்றும் உமக்கே;
என் இதயத்தைப்படைத்து
சன்மார்க்கனவேனே.

ச. நான் செம்மையாக நடந்தே
நீர் காட்டும்பாதையில்;
உம்மைப்பின்பற்றும் போருட்டே
மெய் விசுவாசத்தில்.

ரு. வளர்ந்து நிலைநிற்கவே
தயை கூர்ந்தருளும்;
மரணபரியந்தமே
காப்பாற்றிக்கோண்டிரும்.

217. உ௱௰எ-ம். கீதம். C. M.

*Approach to Jesus.* JOHN VI. 68.

க. என்னை ஏசுவே!
உம்மிடத்திலே;
சேரச் சொல்லும், ஏற்றுக்கொள்ளும்,
ஏசு நாதரே!

உ. தேவ வாக்கியம்
என் நட்சத்திரம்:
கிறிஸ்தைக் காட்டும் நல் உவாத்தி
தேவ வாக்கியம்.

௩. உம்மை ஏற்கிறேன்
காட்சி தாருமேன்;
ஆவலோடும் பத்தியோடும்
உம்மை ஏற்கிறேன்.

௪. தேவமைந்தனே!
நல்ல மீட்பரே!
உம்மை நாடும் நெஞ்சை வாழும்
தேவ மைந்தனே!

218. உ௱௰அ-ம். கீதம். S. M.

*My God, my life, my love.* Ps. XXIII. 25.

க. என் சீவனாகிய
அன்புள்ள கர்த்தரே!
ஆ! தேவரீரை விட்டோனாய்
பிழைக்கமாட்டேனே.

உ௱ருச மனிதனைக்குறித்தது.

உ. உமது பலனால்
எல்லாம் உண்டாயிற்று.
நீர் செய்யும் மா இரக்கத்தால்
எல்லாம் நிறைந்தது.

ந. ஆ! உம்மைக் கர்த்தரோ!
எப்போதும் தேடுவேன்;
ஆ! உம்மை நோக்கி ஏசுவே!
நான் என்றும் சிந்திப்பேன்.

ச. உம்மாலே தோன்றிய
கிருபை அதுவே;
என் நெஞ்சிலுள்ள கொடிய
துக்கத்தை நீக்குமே.

ரு. நீர் இருக்கையில்
பரம செல்வமே;
நீர் இங்கிராதவேளையில்
நரகவாதையே.

சு. உமது பட்சமே
மிகுந்த இன்பமாம்;
எனக்கும்மாலே தேவனே!
கதி கிடைக்கலாம்.

எ. தூதர் அனைவரும்
நீர் செய்த தயவை;
அறிந்துமக்குத் தோத்திரம்
செய்வார்கள் கர்த்தரோ!

அ. நீரோ இராவிட்டால்
பூமியும் வானமும் ;
மெய்யானக் களிப்பற்றதால்
வனாந்தரமாகும்.

கூ. அன்பென்னுங் கடல் நீர்
என் மன வாஞ்சையே
நீர் மாத்திரம் ஆற்றுகிறீர்
எனக்கிரங்கவே.

சகோதரர் பேரிலே அன்பு.

219. உாயகூ-ம். கீதம். 7's.

*Love to brethren.* Ps. CXXXIII.

க. ஆ! சகோதரர் ஒன்றாய்
ஏகமான சிந்தையாய் ;
சஞ்சரித்தால் எத்தனை
நேர்த்தியான மாட்சிமை.

உ. அன்புள்ளோர்க்கு ஆண்டவர்
இன்பம் யாவும் ஈகுவார் ;
அவவிடத்தில் என்றைக்கும்
சீவமாட்சிமை வரும்.

ங. நீரோ நெஞ்சை நெஞ்சுடன்
கட்டி நேசத்தின் பலன் ;
நன்மை தீமை நாளிலும்
காணக் கட்டளையிடும்.

ச. உண்மையுள்ளதாகிய
வேதம் மாட்சிமைப்பட ;
எங்கள் வேண்டுதலையே
அன்பாய்க்கேளுங் கர்த்தரோ!

220. உ௱உ௰-ம். கீதம். P. M.

*The same.* 1. JOHN III. 10–14.

(க-ம். பங்கு.)

க. கிறிஸ்தோர்கள் சகோதர் ஒருமையாக
இருந்து அவர்கள் நடக்கையிலே ;
தெய்வீக சிநேகம் எல்லாரின் முன்பாக
விளங்கினால் மெத்தவும் இன்பமாமே ;
அவர்கள் நற்சீர் அதினாலே தெரியும்
அவர்களின்மேல் ஆசீர்வாதம் பொழியும்.

உ. சகோதரரை நாஞ் சிநேகிப்போமாக.
சிநேகமுடையோன் கர்த்தாவுடையன்
பகைக்கிற மனிதன் மிகுதியாக ;
கர்த்தாவுக் காகாதோன் சாவவன்பலன்
தயாபரருக்கு நாம் ஏற்பதற்காக [க.
எல்லாருக்கும் பட்சத்தைக்காண்பிப்போமா

ங. பிதா நம்மை யித்தனையுட் கருத்தோடே
குமாரனுக்குள்ளே சிநேகித்தாரோ ;
சிநேகத்தால் ஏசு! மா வேதனையோடே
எல்லாருக்குமாக மரித்ததுண்டே ;
மடிய நாம்போனோம் ஆனால் அவர்தாமே
அன்பாய் நம்மை மீட்டு ரட்சித்தவராமே.

ச. பகைஞரை சிநேகிக்க ஏசுவினாலே
நாம் போதிக்கப்பட்டால் சகோதரனை,
நாம்வெகு அதிகமாய் உட்கருத்தாலே
சிநேகித்து நம்முடன் ஆண்டவரை;
வணங்கிற எந்த சகோதரனுக்கும்
மா! தயவைக்காண்பிக்க நம்க்கடுக்கும்.

(உ-ம். பங்கு.) P. M.

*The same.*

க. நாம்ஏகமாய்மோட்சத்தின்நன்மைகளுக்கு
தயாபரரால் அழைப்பிக்கப் பட்டோம்.
நாம் ஏகமாய்க் கர்த்தரின் பட்டணத்துக்கு
நெருக்கவழியில் நடந்து போறோம்.
ஒரே மனப்பட்ட சன்மார்க்கத்தின் சட்டம்
காணுதேபோனால்கிறிஸ்துமார்க்கம்அவத்தம்.

உ. தெய்வான்பினால் ஞானசகோதரரான
நாம் ஏக பிதாவுட வீட்டாராமே ;
இரட்சகர் என்றதலையின் கீழான
அனைவரும் ஏக சரீரிகளே ;
விரோதங்கள் வேண்டாஞ் சகோதரர்க்காக
நாஞ் சாகவும் மனதுவருவதாக.

ந. எல்லாரும் ஒரேமண்ணினாலேயுண்டானோம்
கர்த்தாவுக்குமுன் சுயமேன்மையுண்டோ?
நாம் எதினால்க் கர்த்தரின்பிள்ளைகளானோம்?
இரட்சகர் புண்ணியத்தாலே யல்லோ?

அகந்தைக்கும் வாதுக்கும் ஏவுவதேது?
சிநேகமில்லா விசுவாசமுமேது?

ச. ஆ! உம்முட மந்தையில் உத்தமமான
சிநேகம் உண்டாக்கும் பராபரனே!
ஆ, ஏசுவே! உம்மைச்சிநேகிப்பதான
சிநேகம் பெருகுவது மன்றியே;
அடியார் எல்லாரையும் உட்கருத்தாக
சிநேகிக்க எங்களை ஏவுவீராக.

லோகத்தை வெறுத்தல்.

221. உாஉக-ம். கீதம். C. P. M.

*Rejecting the world, and depending on God.*
1. JOHN II. 15–17.

க. நிலையில்லாத செல்வத்தை
இச்சித்து நாட மாட்டேன்;
என் மீட்பர் தேடின
மோட்சானந்த மா செல்வத்தை;
கிடைக்கப் பண்ணும் தயவை
அருளும் பிதாவே!

உ. இந்நன்மை உமதீவுதான்.
என் ஆண்டவரே! உம்மை நான்
இஸ்த்தோத்திரிக்கிறேன்.
நற்குணம் என்னில் என்றைக்கும்
நிலைக்கக் கட்டளையிடும்
பலத்த தேவனே!

௩. நீர் செய்த தயவை எல்லாம்
பார்த்தால் மகா திரட்சியாம் ;
முடிய ரட்சியும்
கிருபையுள்ள பிதாவே !
என் கேட்டை நீர் விரும்பீரோ ;
கருணை அளியும்.

222. உ௱உஉ-ம். கீதம். S. P. M.

*Rejecting the world and choosing God and heaven.*
MAT. XVI. 24–26.

க. மண்ணே ! உன் இன்பத்தை
நாடேன் என் மனதை ;
பரத்தில் என்றும் நிலைக்கும்
மேல்வாழ்வின்மேல்வைப்பேன் ;
அதாலே அடைவேன்
நீங்காத நல்லபாக்கியம்.

உ. உன் ஆஸ்தி லோகமே
நிலை நில்லாததே ;
அதின்றுதானே இருந்தும்
நாளைக்குப்போவதை ;
அப்போதுன் நன்மையே
பற்றினோருக்குச்சஞ்சலம்.

௩. விண்ணில் இருப்பவர்
மெய்யாஞ்சிநேகிதர்
அவர் நன்றாய் காப்பாற்றுவார்
என் நோவை ஆற்றியும்.

தம்மையே அளித்தும்
ஆசீர்வதித்தும் வருவார்.

௪. விண்ணில் வாழ்வெனக்கு
ஆயத்தப்பட்டது ;
என் நாமம் அவ்விடத்திலே
சீவ புத்தகத்தில் ;
இருக்குங் களிப்பில்
என் ஆத்துமாப்பிழைக்குமே.

௫. வரும் மோட்சானந்தம்
நான் தேடும் பாக்கியம் ;
அதின் நினைவும் அன்றன்றும்
தயிரியப்படுத்தும் ;
ஏசுவினால் என்றும் !
நற்கதி வாழ்வுங் கிடைக்கும்.

223. உாஉ௩-ம். கீதம். L. M.

*The same.*

Eccles ii. 1–2. Mat. xiii. 44–46.

க. போ, அற்பமாஞ் சிற்றின்பமே !
போ, கெட்டலோக இச்சையே !
வா தேவநேசம் வாவேன்
நான் உனதாலயமானேன்.

௨. நான் தேவ சுதன் சீவனை
கொடுத்த அந்த நேசத்தை ;
நினைத்து இச்சையாவையும்
வெறுத்திருக்கச்செய்திடும்.

௩. ஓர் நிமிஷத்தின் இன்பமே !
அனந்த நோவுக்குண்டாக்குமே ;
ஆ ! என்னைச்சேர்த்தும்மண்டையே
சுத்தப்படுத்தும் ஏசுவே !

௪. நான் மோட்சத்திற் பங்கற்றோனாய்
போகாதபடி நேர்த்தியாய் ;
சீர்ப்பட உம்மை நேசிக்கும்
இதயத்தை ஈந்தருளும்.

௫. நரருடைய இதயம்
அறிந்திராத ஆனந்தம் ;
அங்கேனக்குப் பரத்திலே
கிடைக்கப்பண்ணும் கர்த்தரோ !

224. உ௱உ௪-ம். கீதம். S. M. D.

*The same.* 1. Cor. vii. 31.

க. சீர்கெட்ட லோகமே !
உன்வாழ்வு எனக்கேன் ?
என் மீட்பவர் என் கதியே
நான் உனனச்சார்வதேன் ?
என் ஆஸ்தி ஏசுதான் ;
என் செல்வம் அவரோ ;
உன் மேன்மை அற்ப குப்பைதான்
சீர்கெட்ட லோகமே !

உ. என் ஏசுவைச்சார்வேன் ;
விண் நன்மை நிற்குமே ;

உன்னில் யாதொன்றையும் நம்பேன்
எல்லாம் கேடாகுமே ;
நான் கிறிஸ்துவுடனே
சுமக்கும் நிந்தையே ;
என் பெருமை நீ போ
சீர்கேட்ட லோகமே !

௩. ஓர் நிமிஷத்திலே
உன் வாழ்வும் அழியும் ;
என் சாவு வருகையிலே
மகிழ்வும் முடியும் ;
ஆனாலும் வாழுவேன்
என் வாழ்வு ஏசுவே !
உன் செல்வத்தை நான் வெறுப்பேன்
சீர் கேட்டலோகமே !

௪. என் ஏசு என் கதி,
என் ஏசு என் களிப்பு,
என் ஏசு என் கனம்,
என் ஏசு என் ரட்சிப்பு :
என் சீவன் அவரோ,
என் மோட்சம் அவரோ,
நீ சாரமற்றது
சீர் கேடட லோகமே !

225. உளஉரு-ம். கீதம். 8, 7, & 4.

*The value of Christ and heaven, and the vanity of the world.*

க. மோட்ச மண்டலத்திலுள்ள
மாட்சிமை என் ஊதிபம்.
கிறிஸ்து வென்னுஞ் சோதியுள்ள
ரட்சகர் என் போக்கிஷம்.
மோட்ச லோக
நன்மையே என் ஆறுதல்.

உ. மானிடர் பணத்திஞலே
தங்களைத் தேற்றட்டுமேன் ;
என் உள்ளத்தை ஏசுவாலே,
தேற்றி விண்ணை நோக்குவேன் ;
ஆஸ்தி போகும்
நீரோ என்றும் நிற்கிறீர்.

ந. கிறிஸ்துவால் என்க்குயர்ந்த
ஆஸ்திகள் உண்டாயிற்று ;
விக்கினங்களால் நிறைந்த
லோக ஆஸ்தி ஏதுக்கு ?
கிறிஸ்து நாதர்
என்றுமுள்ள போக்கிஷம்.

ச. அந்த மோட்சமண்டலத்தில்
நான் என் பங்கடையவே ;
நீர்தான் இவ்வஞந்தரத்தில்
நீங்கிடாச் சகாயரோ ;

நான் என்றைக்கும்
உம்முடன் இருப்பேன்.

226.    உாஉகூ-ம். கீதம்.    C. M.

*"We will come unto him, and make our abode with him."* JOHN XIV. 23.

க. என் முழு நெஞ்சையும் அன்பாய்
  கர்த்தாவே! என்றைக்கும்;
அகமும் ஆலயமுமாய்
  படைத்துக்கொண்டிரும்.

உ. நீர் அதை ஆளுங் கர்த்தரே!
  அதால் நான் பாக்கியன்;
நான் உலகத்தோன் அல்லவே;
  நான் உம்முடையவன்.

ரு. பசாசின் மணவாளியே;
  ஒகர்காலும் உன்னை நான்
சேரோன்; உன் பேச்சு மாயமே;
  உன் செல்வம் குப்பைதான்.

ச. போ, லோகமே! போ, பாவமே!
  என் மனம் உமக்கு;
எக்காலத்துக்கும், ஏசுவே!
  கொடுக்கப்பட்டது.

## தருமம் செய்தல்.

227. உ௱௨௭-ம். கீதம். 8's. & 7's.

*Benevolence and charity.*

Luke iii. 11. Heb. xiii. 16. 2. Cor. ix. 7.

௧. சங்கங்கூடி ஏழைக்கென்று
நல்ல மனதுடனே,
தருமத்தைச் செய்ய நீரோ
தயை தாரும் பரனே:
நன்மை செய்ய பிறனுக்கு
தங்கள் கடனுகவே
பணமற்றோர் செல்வங்களும்
மனஞ்சாய அருளும்.

௨. ஏழைக் கைம்பெண் நேசமாக,
நல்ல மனதுடனே
தாழ்மையாக ஈந்தபோது
மேன்மையாய் விதந்தீரோ:
தேவனே! உம்மாலே நாங்கள்
காக்கப்பட்டோராகவே,
சுகங், கல்வி, பல, நன்மை,
பர ஈவும் பெற்றோமே.

௩. சைவ சமயத்தின் கட்டாம்
ஆகமம் புராணமும்
மேன்மையான பரிசுத்த
வேத நூலால் அழியும்:
உண்மையான மனதோடே
நித்தமுழு பத்தியாய்

நிறைவாக தருமத்தை
செய்ய அருள் புரியும்.

ச. சுகமுள்ள காலம் யாவும்,
சொல்லப்பட்ட விதமாய்,
அகம் பூரிப்பாக யாரும்
மிகு நன்மை செய்யவும்,
பத்தி விசுவாசத்தோடும்,
சுத்த மனதுடனே,
கிறிஸ்து செய்த தருமத்தை
நோக்கவுஞ் செய்தருளும்.

துன்புறுதல்.

228. உ௱உ௮-ம். கீதம். 8's. & 7's.

"*Let him take up his cross.*" MAT. XVI. 24.

க. சிலுவை சுமந்தோனாக
உம்மைபற்றி வருவேன்;
ஏழைப்பரதேசியாக
மோட்ச ஸ்தலந் தேடுவேன்.
உற்றார் மேன்மை ஆஸ்தி கல்வி,
முன்னோர் சொல்லும் ஞானமும்,
அற்ப குப்பை என்று சொல்லி
வர, என்னையே இழும்.

உ. உமக்கேற்ற பாடு பட்டோன்
நஷ்ட்ப்படமாட்டானே:
உமக்கென்று சீவன் விட்டோன்
சாகாச் சீவன் பெற்றானே.

உம்மை அப்பா பிதாவென்று,
சொல்லி என்றும் வாழுவேன் :
கஸ்திப்படுஞ் சாவும் வென்று
விண் கிரீடம் அடைவேன்.

௩. நெஞ்சமே! உன் மேன்மை எண்ணு :
வருஞ் செல்வம் நோக்கிப்பார் :
மோட்ச சாயல் இங்கேகொண்டு
உன் சுதந்திரத்தைக் கார்.
கொஞ்சவேளைக்குட் பிறந்து
ஏசுவண்டை சேருவேன் :
தேவ தூதரோடே நின்று
என்றென்றைக்குந் துதிப்பேன்.

229. உ௱௨௯-ம். கீதம். 7's. & 6's.

*Deliverance from danger.* DAN. VI.

க. தானியேலின் தேவனே !
கேளீர் என் பிரார்த்தனை :
வந்து ரட்சை செய்யுமே
பூட்டுஞ் சிங்கவாயை.
ஆத்ம நாசம் புரிய
லோகம், பாவம், பேயும்
எதிர்த்து நெருங்கின
புகலிடம் தாரும்.

உ. யாரும் போற்றுந் தேவனே !
எனக்குள் செய்யும் :

சிங்கத்துக்குத் தூரமே
என்னைக்காத்துப்பேணும் :
உடன் பாட்டின் தூதனே
வந்து என்னைக்காத்து
மீட்கவல்ல ஏசுவே !
உம்மைச்சார்வேன் நன்று.

௩. தானியேலின் தேவனே
உம்மை யாரும் போற்ற,
கையைத் தந்து இப்போதே
என்னை மீட்பீராக :
வல்ல தேவை யாவரும்
என்றுந் துதிசெய்க
நேசரோன்று நம்பியும்
அஞ்சுவார்களாக.

230. உ௱௩௰-ம். கீதம். 7's.

*The same.* II. Cor. I–10.

க. பிராண நேச ஏசுவே !
வெள்ளம் பாய்ந்து பெருகி
சூறைக்காற்று வீசவே
நேஞ்சிலே என்னைப் பேணி :
சீவப் புயல் அடிக்க
புகலிடந் தாருமே :
நான் மோட்ச கரையேற
அருள்செய்யுங் கர்த்தரோ !

உ. நீரன்றித் தஞ்சமில்லை,
உம்மைச்சேர்ந்ததென்னுத்மம்,
கைவிடாமற் காத்தென்னை
ஆற்றித்தாங்கிக் கொண்டிரும் :
நான் உம்மைச் சார்ந்து நம்பி
திடங்கொள்ளும்படிக்கு
சிறகால் என்னை மூடி
அருள் செய்யும் எனக்கு.

௩. தயா நீதி கிறிஸ்து நீர்
என் குறை நிறைவேற்றி,
விழுந்தேனைத் தூக்குவீர் :
துன்பந் தீர்த்து விளக்கி,
நீரோ சுத்த நீதிமான் :
நானோ மருளாளனே
வஞ்சன் துஷ்டன் தீயன் நான்,
நீரோ அருளாளரோ.

௪. பாவம் எல்லாம் ஒழிக்க
உமதருள் போதுமே :
என்னை சுத்திகரிக்க
அருள் நதி காட்டுமே :
நீரோ சீவ நதி ; நாம்
உம்மில் என்றும் மூழ்கவே,
உள்ளத்திற் சம்பூரணம்
ஊறச்செய்யும் நித்தமே.

231. உளஙக-ம். கீதம். 8's. & 7's.

*Winds and waves.* MARK IV. 37–39.

க. கோந்தளிக்குங்கடலேறும்
கப்பல் ஆடி ஆடிப்போம்.
காற்றுச் சீறி வீசி யிடும்.
பாய் கிழிந்து போயினும்,
ஏசு சுவாமி ! நீரோ வந்து
கப்பலோட்டியாயிரும்.
காற்றமைந்து வழி தந்து,
கரையேறச் செய்திடும்.

உ. கப்பல் ஏறிப் போவோருக்கு
வரும் மோசம் பயமும்
மின் முழக்கம் சூறை கல்லு
உமக்கெல்லாந் தெரியும்.
காரிராவில் பிரகாசம்
உட்டணத்தில் மேகமே
யாவையும் நடத்தும் ராசன்
சாவிலும் என் சீவனே.

ங. நெஞ்சம் உம்மை எண்ணி எண்ணும்
இன்பம் துன்பம் வந்திடில்,
சீவன் உம்மில் வாசம் பண்ணும்.
லோக மோட்ச வேளையில்.
ஏசு சுவாமி ! நீரோ வந்து,
கப்பலோட்டியாயிரும்.
காற்றை ஆளும் வழிதந்து,
கரையேறச் செய்திடும்.

ச. வாசம் பண்ணும் உலகத்தில்
அங்கும் எங்கும் அலேவேன்.
கஸ்திப்பட்டு உம்மிடத்தில்
தஞ்சமென்று ஓடுவேன்.
தேகக் கப்பல் மோதிப்போகில்,
சேதமின்றிச் சேருவேன்.
மோட்சம் பெற்று உம்மிடத்தில்
அக்களிப்பாய்த் துதிப்பேன்.

232. உளஙஉ-ம். கீதம். 6-8's.

*Courage in affliction.* Ps. xl. vi. 2. Cor. vii. 4-5-6.

க. சேனை எதிரிகள் சூழ்ந்து
உள்ளத்திற் சத்துருக்களும்
என் ஆத்துமத்தைக் கெடுத்து
அழிக்க வகை தேடினும்
நான் தனித்தும் அஞ்சமாட்டேன்
ஏசுவை நம்பத்துணிவேன்.

உ. ஆயிரஞ்சேனை எதிர்த்து
ஆயிரம் லோகம் பகையாய்
போராடினும் எதிர் நின்று
விசுவாசங் கேடகமாய்
பிடித்து எல்லாம் வெல்லுவேன் :
ஏசுவை நம்பத் துணிவேன்.

ங. என்னைப் பசாசின் கையிலும்
லோகத்திலும் விடுவித்து,

என் பாவந்தீர்த்து முழுதும்
தமக்காய்ச் சுத்திகரித்து
ரட்சிக்க வந்தார் அடியேன்
ஏசுவை நம்பத் துணிவேன்.

ச. அவர் நாமத்தினூற் பாவம்
மரணம் நரகம் நின்று
ரட்சிப்புண்டாம் மோட்ச செல்வம்
அத்தால் என்றுங் கிடைக்குது :
அவரைப்பற்றிக்கொள்ளுவேன் ;
ஏசுவை நம்பத் துணிவேன்.

233. உ௱௩௩-ம். கீதம். S. M.

*The same.* HEB. XIII. 13.

க. பசாசினாலேயும்
துன்பம் எழும்புமே ;
பொல்லாத லோகத்தாலேயும்
ஒர் கிறிஸ்தவனுக்கே.

உ. உபத்திரம் உண்டாம்
அவன் நிந்தையையும்
சுமந்து கொள்ளத் தேவையாம்
நோவதினால் வரும்.

௩, இதெல்லாந் தெரியும்
ஆனாலும் பின்வாங்கேன் :
என் நோவுயாவும் அறியும்
கத்தாவைப்பற்றுவேன்.

234. உ௱௬ச-ம். கீதம். 8, 7, & 4.

"*We glory in tribulations also.*" Rom. v. 3.

க. வாழ்க! சிலுவையே வாழ்க!
பாரமற்ற பாரமே,
நீ வந்தால் இணக்கமாக
உன்னை ஏற்றுக்கொள்வேனே:
கர்த்தராலே
நீ அனுப்பப்பட்டது.

உ. இந்த நிந்தை லச்சையல்ல
இது வெட்கமல்லவே;
சோதனை பொல்லாங்குக்கல்ல
நீதிக்காக வந்ததே.
ஏசு நாதர்!
நிந்தைப் பாடு பட்டாரே.

௩. சிலுவையின் கீழ்த்தவிக்கும்
தம்முடையவர்களை
ஏசுநாதர் ஆதரிக்கும்:
அன்பிரக்கம் எத்தனை
துன்பகாலம்
நீதிமானுக்கின்பமாம்.

ச. கர்த்தரைப்பின் செல்லுவோமாக
சிலுவையின் தோழரே.
கர்த்தரை மகிழ்ச்சியாக
தோத்திரிப்போம் நாங்களே.
கர்த்தர் தாமே
அன்புடன் மரித்தாரே.

௫. லோகம் நம்மை மா இகழ்ச்சி
பண்ணிச்சங்கரிக்கவே,
கர்த்தராலே மா மகிழ்ச்சி
ஆறுதல் கிடைக்குமே ;
அதற்காக
நாயனுக்கே தோத்திரம்.

235. உ௱௩௫-ம். கீதம். 7's. & 6's.

*"Cast thy burden on the Lord."*

Ps. LV. 22. PHIL. IV. 6. 1. PETER V. 7.

க. உன் நெஞ்சிலே உண்டான
விசாரம் யாவும் நீ
கர்த்தாவின் உண்மையான
நடத்தைக்கொப்புவி :
வையத்தை ஆண்டுகொள்ளும்
மகா தயாபரர்.
உன் காரியங்களுக்கும்
வகையுண்டாக்குவார்.

உ. சயமடைந்து வாழ
கர்த்தாவின் பிள்ளைப்போல் !
நீ நம்பி மனதார
பணிந்து பற்றிக்கோள் :
உன் யோசனையினலே
பயம் வர்த்திக்குமே,
பொறுத்துப்பத்தியாலே
நீ வேண்டிக்கொண்டிரு.

௩. பராபரன் செய்யட்டும்
தெய்வீக கைத்திறம்
நன்றுகவே நடத்தும்
உன் பேரிலே யுண்டாம்.
மிகுந்த துக்கம் யாவும்
கர்த்தாவின் செய்கையாய்,
தெளிந்து போம் என்றைக்கும்
மகிழ்ந்து பாடுவாய்.

௪. நீ பத்தியை விடாமல்
பொறுத்திருக்கையில்
கர்த்தா நீ சிந்தியாமல்
இருக்கும் நேரத்தில்,
உன் துக்கத்தை அகற்ற,
வகையைக்காண்பிப்பார் :
நிசத்துக்காகப்பட்ட
இக்கட்டை நீக்குவார்.

236. உ௱௩௰௬-ம். கீதம். P. M.

*Comfort in prospect of death.* 2. Tim. iv. 6–8.

க. என் இதையமே களித்து,
உன் உபாதியை மற
இங்கே நோவையே சகித்து
கஸ்தியால் மயங்கின :
உன்னை ஏசு!
மோட்சத்துக்கழைப்பிப்பார்.

உ. என் பராபரனை நோக்கி
நித்தம் நித்தங் கூப்பிட்டேன் ;
நாயன் என் இக்கட்டைப்போக்கி
ஆதரிக்கக்கெஞ்சினேன் :
நான் என் சாவை
காணவும் விரும்பினேன்.

௩. ஆதலால் அன்பாய் விளங்கும்,
சோதியே பிரகாசியும் :
ஏசுவே! என் மேலிரங்கும் :
தூரத்திற் செல்லாதிரும் :
நான் மகிழ
என்னைக் காத்துக்கொண்டிரும்.

ஆறுதல்.

237. உ௱௩எ-ம். கீதம். 7's.

*"He will feed his flock like a shepherd."*
Isa. xl. 11. John x. 3–4.

க. காணாமற்போன ஆட்டை நீர்
தேடிக்காணக்கடவீர் ;
துக்கம் ஆற்றித்தோளிலும்
சுமந்தேற்றி அருளும்.
மேய்ப்பர் சத்தம் அறிந்து,
அத்தால் என்றும் மகிழ்ந்து,
என்றும் உம்மில் வாழுவேன்,
ஆவியாலே பிழைப்பேன்.

௨. உம்மிலே நான் பிழைத்து
பாவம் நீங்கும் பொழுது,
நான் கேடாதபடிக்கும்
மோட்சானந்தம் சேர்த்திடும்;
ஆட்டைப்போலும் பத்தரில்
திவ்விய நாளுந் தெய்வ மந்தையில்
திவ்விய சுதந்திரம்
பெறும்படி அருளும்.

238. ௨௱௬௰௮-ம். கீதம். 7 & 6's.

(க-ம். பங்கு.)

Ps. xxxiv. Heb. xii. 5-6.

க. கர்த்தாவை நம்புவாரை
எப்போதுங் கைவிடார்:
கேட்டோரின் தாறுமாறை
அடக்கிப் போடுவார்.
சன்மார்க்கரைப் பலத்த
கையால் தயாபரர்
ரட்சித்து, தாழ்ச்சி யற்ற
அன்பாய் விசாரிப்பார்.

௨. கர்த்தாவின் சித்தத்துக்கு
உட்பட்டடங்குவேன்;
அப்போது சீவனுக்கு
எதிர்கொண்டேகுவேன்.
லவுகீகவாழ்வின் பாதை
செல்லேன் ஏசுவை;

பின் பற்றி இங்கே வாதை
சகிப்பதே நன்மை.

ங. என் மேலே பாரமாக
வரும் இக்கட்டிலே,
பராபரன் அன்பாக
என்னோடிருப்பாரோ:
பொறுக்கிற வரத்தை
நான் அவரைக் கேட்பேன்;
அந்தடைவாய் இக்கட்டை
சகித்து வெல்லுவேன்.

ச. கசப்புங் கர்த்தராலே
வரும் நான் பின்வாங்கேன்:
சேபத்தில் ஆசையாலே
விண்ணப்பம் பண்ணுவேன்;
அப்போது தயவாக
காப்பாரோ கைவிடார்;
இக்கட்டுப் பெரிதாக
போம்போது தேற்றுவார்.

உ-ம். பங்கு. 7 & 6's.

க. அநேகர் ஆசைவைக்கும்
பொருளின் பேரிலே,
சந்தோஷியேன் என்றைக்கும்
நில்லாமற் போகுமே:
என் பொக்கிஷம் பரத்தில்,
எழுந்த கிறிஸ்துவே;

அங்கே அவரிடத்தில்
நன்மை யெல்லாம் உண்டே.

உ. என் ரட்சகனைப்பற்றி
இருக்கிறேன், அவர்
என் கிலேசத்தை யகற்றி
எப்போதும் ரட்சிப்பார்.
எனக்குச் சீவனுக
மரித்தெழும்பினுர்,
அவனைப்போல் அன்பாக
எவர் சினேகித்தார்?

ந. இஸ்தோத்திரஞ் செலுத்த
மிகுந்த ஞாயமாம் :
என்? சீவனைக்கொடுத்த
என் கர்த்தருக் கெல்லாம்
ஆதீனமாவதாக :
ஆம்! அவர்க்கென்றைக்கும்
பணிந்த பத்தியாக
நான் கீழ்ப்படியவும்.

சு. என்னேழைப் பாடித்தோடே
முடியும், ஏசுவே!
அடியேனுக் கன்போடே
மோட்சானந்தத்திலே
புகழ்ச்சியை யளியும் ;

அப்போது பிழைக்கிறேன்
எல்லா விதகதியும்
அடைந்து வாழுவேன்,

239. உஎகூ-ம். கீதம். 7's.

*Comfort in Christ.* II. Cor. I-3-7.

க. நெஞ்சே! நீ இவ்வுலகில்,
துக்க கவலைகளின்
பாரத்திற்கு நீங்கலாய்
ஆறி வாழத் தக்கதாய்
ஏசு ஒருவரையே ;
பத்தியாய் பிடிக்கவே.

உ. அவர் உன்னதப் பொருள்,
அவராலே நெஞ்சுக்குள்
வாழ்வின் சோதி உதிக்கும்,
அவர் நேசம் தரிக்கும்:
அதால் இம்மை நமக்கு;
மறுமைக் கோப்பாவது.

ங. ஆகையால் என்னெஞ்சை நீ ;
வேதனைக்கு விலகி,
என்றுவாழத் தக்கதாய் :
ஏசுவை மா நேசமாய்
நோக்கி வாஞ்சையுடனே
தேடி பற்றி விடாதே.

240.　　உ௱௪௰-ம். கீதம்,　　8-7-4.

*The same.*

EZEK. XIV-10-11. HEB. V. 8-9.

க. ரட்சகரில்லாமல் நாங்கள்
சாலவும் நிர்ப்பாக்கியர்,
நன்மையேது மற்ற நாங்கள்
கெட்டுப் போன மானிடர்,
என் கர்த்தாவே !
சீரை தந்திரட்சியும்.

உ. நீர் இராவிட்டால் பசாசும்
தீயுடன் பாதாளமும் ;
என்னைச்சாலவும் நடுங்க,
பண்ணும் இந்த நெஞ்சமும் :
என்னைக் கெட்டோன்
என்று சொல்லி வாதிக்கும்.

ந. கெட்ட வையகத் துள்ளோர்கள்,
வைத்தக் கண்ணி மிகுதி
தேவரீர் இல்லாமல் நாங்கள்,
தப்பிப் போவதெப்படி :
அது என்னை
இச்சையாலே பிடிக்கும்.

ச. ஏசுவே பலத்தை தாரும் ;
பாவத்திருளை நீக்கும்

உள்ளக் கண்ணை தெளிவாக்கும்:
நன்முகத்தைக் காண்பியும்,
ஞான தீபம்
என்னிற் பிரகாசியும்.

241. உ௱௪க-ம். கீதம். 8-7-4.

Eph. 3-10-15.

க. கிறிஸ்துவின் மகா சபையே!
முற்சிநேகத்தைப் பிடி
கிறிஸ்துக்குள் நிலைகொண்டேறு
சோம்பலைத் தவிர்த்திரு,
தயிரிய மாக
மோட்ச மார்க்கத்தில் நட.

உ. செல்லுகையிற் றுன்பத்துக்கு,
நீ அஞ்சாமல் வீரங்கொள்
சீவ கிரீடத்தைத் தொடர்ந்து:
கைப்பிடிக்கப் பார்த்துக்கொள்,
உண்மையான
நன்மையை விடாதிரு.

௩. லோகத்துள்ள வாழ்வு மேன்மை,
என்று சிந்தியாதிரு
நீ பழைய பாம்பின் மாயை
செய்யும் இச்சையை வெறு;
லோக இன்பம்,
துன்பமென்றறிந்து கொள்.

௪. நண்பனே மற்றோர்கள் போலே:
நீதியைத் தள்ளாதிரு

நீதிக்காகப் பேயினலே ;
துன்பங் தோன்றில் வென்றிடு,
  கிறிஸ்து நாதர்
உன்னை மேன்மை யாக்குவார்.

242. உ௱௪உம். கீதம். L. M.

*The mind that was in Christ.* PHIL. II--5.

ISA. III--7. HEB. XII--1--3.

க. கர்த்தாவே உம்மைப்போல நான்
மிகுந்த அன்பு சுத்தவான்,
இரக்க முள்ளோனுகவே!
இருக்கச் செய்யும் ஏசுவே ;

உ. இங்கே இருக்கும் அளவும்
நம்பிக்கையுடன் வாழவும்:
என் சித்தங் தேவரீருக்கும்,
அடங்கவுஞ் செய்தருளும்.

௩. இறந்து போகும் நேரத்தில்,
சிறந்து நானும் மோட்சத்தில் ;
உம்மோடிருந்து வாழவே!
கடாட்சியும் நன் மீட்பரே.

243. உ௱௪௩ம். கீதம், L. M.

*Patience under affliction.* 1. PET. II-23.

க. இகத்தில் உன் தலைவர் போல்
உபத்திரம் சகித்துக் கோள்,

போல்லாத எது தோன்றிடில் ;
பலன் தரித்தேதிர்த்து நில்.

உ. எல்லாத்திலும் நல்லறிவை
கோடுக்கும் தேவ வார்த்தையை ;
எந்நேரமும் தியானித்து!
பிரார்த்தித்தே விழித்திரு.

௩. வேன்றோ னுக்காக மோட்சத்து
கிரீட மே வைத்தாயிற்று,
போல்லாத மார்க்க முள்ளவன் ;
இகழ்ச்சிகோண்டு நீங்குவான்.

௪. இரக்கமுள்ள ஏசுவே!
நான் மோட்ச ராச்சியத்திலே ;
உம்மோடிருக்க என்றைக்கும்,
என்னில் தரித்தே ரட்சியும்.

244. உ௱௪௪-ம். கீதம். L. M.

*The same.* Ps. XIII--5.

க. என்னேஞ்சே ஏன் விசாரமாய்,
நம்பாமலே துக்கிக்கிறாய்!
எல்லாரையும் விசாரித்து ;
கர்த்தாவை நம்பிக் கோண்டிரு.

உ. என் கர்த்தர் என்னைக் கைவிடார்
என் மனநோவை யறிவார் ;
தயாபரர் இக்கட்டிலே!
சகாயஞ் செய்பவராமே.

௩. நீர் என் பிதா என் துணை நீர்,
பிள்ளைகளை நீர் கைவிடீர்
வேறுறுதல் இகத்திலே:
துக்கிக்குமெனக்கில்லையே.

௪. என் பரம நல் அப்பாவே!
என் கேட்டை நீர் விரும்பீரோ:
என் துன்பந், துக்கம், யாவையும்,
இரக்கமாய் விசாரியும்.

*சாக்கிரதை.*

245. உாச௫-ம். கீதம். 7's & 6's.

*" He that saith he abideth in him ought himself also to walk even as he walked.*

1. John ii-6. Ps. 51, 10-13. Eph. 3, 10.

க. பரத்துக் குரித்தான
ஒழுங்காய் நடந்து,
நற்சீருக் கேற்ற தான;
கனியைக் கொடுத்து,
எந்நாளும் பிறருக்கும்
நான் நன்மை செய்யவே;
எனக் கொத்தாசை பண்ணும்
அன்புள்ள ஏசுவே!

உ. இக்கட்டில் தேவரீரை
விடாமற் பற்றியே
உமது திருவாக்கை
எவர்க்குஞ் சொல்லவே;

எனக்குத் திடனையும்
அருளிச் செய்திடும்
மெய் விசுவாசத்தையும்
என்னெஞ்சிற் கொளுத்தும்.

௫. சிநேகமென்ற போர்வை
எனக்குத் தரியும்
இடும்பை நீக்கித் தாழ்மை
மனசுக் களியும்
சந்தோஷம் சமாதானம்
இருக்கும் படிக்கே;
பசாசினாலே வரும்
தீங்கெல்லாம் நீங்கவே.

246. ௨௱௪௬ம். கீதம். 7's.

*" Except ye be converted, and become as little children, ye shall not enter into the kingdom of heaven."* MAT. XVIII--3.

க. தேவ கல்வி எனக்கு
உம்மாலாகும் படிக்கு,
குணம் ஆசை தாழ்மையும்
எனக்குத் தந்தருளும்.

உ. தன்மேல் நம்பும் நம்பிக்கை
ஞானியென்ற பெருமை
இவை விட்டு முழுதும்
உமக்கிணங்கச் செய்யும்.

௩. சுபாவ ஞானத்தை விட்டு
பிள்ளைபோற் கீழ்ப்படிந்து
நான் உம்மாலே பார்க்கவும்
பலங் கொள்ளவுஞ் செய்யும்.

௪, அப்போ நல்ல ஆவியே,
கல்வி தேவ ஞானமே
நித்திய சீவன் இவையும்
எனக்குத் தந்தருளும்.

247. உ௱௪௰௭-ம். கீதம். 8. 7's.

*Watchfulness.* MARK XIII. 35--37. 1. THESS. V. 6.

௧. மனமே! உன் தீய இச்சை
மேற் கொள்ளாமற் பார்த்துக்கொள்
அது நரகத்துக் குன்னை
கொண்டு போம் : விழித்துக் கொள்.
இன்பமாகப் பேசினாலும்,
அதின் சத்தங் கேளாதே
கேட்டாயானால் பெரு மோசம்
நிசமாக வருமே.

௨. அல்லதென்று அதெழும்பி
பகைக்கில் ; எதிர்த்துக்கொள்
வென்று விட்டேனே என்றெண்ணி
சோம்பலற்று வீரங்கொள்
சில நாளாய் அமர்ந்தாலும்
அது இன்னம் உள்ளதே

பின்னும்உன்னுடனெதிர்க்கும்
சற்றுந் தூங்கிக் கொள்ளாதே.

ரு. ஆவிக்குவிரோதமாகும்
உனது சரீரத்தை
வெல்வதற்கு ஏற்றதாகும்
தேவ ஆயுதங்களை
வாங்கி நின்று திடமாக
போர் செய்யாமல் விடாதே ;
அப்போதே நீ பூரிப்பாக
வெற்றிக்கொண்டு வாழ்வாயே.

248. உ௱௪௮-ம். கீதம். 7's.

*Watchfulness and prayer.*
Ephes. v. 16. 1. Pet. iv–7.

க. ஆத்துமாவே ! தீமைக்கே
தப்பத்தக்க தாகவே
நீ விழித்துக் கொண்டிரு,
கெஞ்ச சாக்கிரதைப்படு.

உ. நீதியற்ற சாத்தனும்
கெட்டுப்போன லோகமும்
எங்கும் உன்னைச் சூழவே
நின்று துன்பம் செய்யுமே.

ரு. அந்த கேட்டை நீக்குதல்
சர்வ வல்லவர் செயல்

நீ உன் சொந்த வன்மையாய்
ஒன்றுஞ் செய்யவே மாட்டாய்.

௪. பாவம் போக்கும் எதுவாய்
நீ செபித்துத் திட்டமாய்;
உன்னைச் சோதித் தாவிக்கு,
உன்னை ஒப்பு வித்திரு.

௫. தீமையோரைப் பார்க்கையில்,
நீ கர்த்தாவின் நாமத்தில்
வேண்டிக்கொள்ளல் வன்மைதான்:
தீயன் நீங்கி ஓடுவான்.

௬. பத்தியோடே பேணலாய்
நீ நடந்து கொள்ளுவாய்;
நித்தம் நல்ல ஆண்டவர்!
உன்னை அன்பாய் ரட்சிப்பார்.

249. உ௱௪௯-ம். கீதம். 7's.

*"My soul be on thy guard."* MAT. XXVI-41.

௧. நெஞ்சே! நீ விழித்திரு,
வஞ்சகர்க் கஞ்சாதிரு:
திரளான பாதகர்;
உன்னை வெல்லத் தேடுகிறார்.

௨. எந்தக் காரியங்களுஞ்
செபத்தாலே முடியும்;

ஆதலால் நீ ஏசுவை !
கெஞ்சிக் கேள் ஒத்தாசையை.

௩. வென்று விட்டேனென்றெண்ணி,
ஆற நினையாதே. நீ
போர் விடாமல் நீயும் உன்
வெற்றி முடி சூட்டமுன்.

250. உ௱௫௰-ம். கீதம். 8, 7, & 4.

*Persecutions endured.* 2. PETER I. 5-8.

க. கிறிஸ்துவைப் பின் செல்லுஞ் சபை
முற்சிநேகத்தைப்பிடி ;
கிறிஸ்துக்குள் நிலைகொண்டேறு
சோம்பலைத் தவிர்த்திரு :
திடமாக
மோட்ச மார்க்கத்தில் நட.

உ. செல்லுகையிற் றுன்பத்துக்கு
நீ அஞ்சாமல் வீரங்கொள்
சீவமுடியைத் தொடர்ந்து
கைப்பிடிக்கப் பார்த்துக்கொள்
உண்மையான
நன்மையை விடாதிரு.

௩ லோகத்துள்ள வாழ்வு மேன்மை
என்று சிந்தியாதிரு
நீ பசாசால் வரும் மாயை

செய்யும் இச்சையை வேறு
லோக இன்பம் :
துன்பமென்றறிந்துகோள்.

ச. நண்பனே மற்ரேர்கள் போலே;
நீதியைத் தள்ளாதிரு
நீதிக்காகப் பேயினுலே:
துன்பந் தோன்றில் வென்றிடு
கிறிஸ்து நாதர்!
உன்னை மேன்மை யாக்குவார்.

251. உாருக-ம். கீதம். 7. 6.

*Safety from trusting in God.* Ps. LXXI. 1-5.

க. கர்த்தர் உன்பக்கமானுல்
பயமில்லாதிரு
உபத்திரவம் உண்டானுல்
மன்ருடிக் கோண்டிரு :
அதால் உன்மேலே வந்த
பொல்லா வினை யெல்லாம்!
சயிக்கப் பட்டிறந்த
சவம்போல நாசமாம்.

உ. கர்த்தர் தானே துணையும்
உன் நேசருமாமே :
குறைவில் தேவகையும்
உன்னை நிரப்புமே.
எல்லா இக்கட்டி லேயும்
உன் நோவு யாவிலும் ;

அதே சகாயஞ் செய்யும்
சந்தோஷத்தைத் தரும்.

ந. உன் நெஞ்சின் அஸ்திவாரம்,
மேலான கர்த்தரோ!
அதில் நீ மா விஸ்தாரம்
அடைந்து நிற்பாயே
அவர் உன் ஆஸ்தி தானே
உன் சீவனிற் பலன்
நீயோ உன்னாலே தானே
மெய்யாய்த்தகாதவன்.

ச. உன் உள்ளமே களிக்கும்,
துக்கிக்க வேண்டுமா?
கர்த்தர் உன் மேல் உதிக்கும்
பகலோன் அல்லவா?
பரத்தில் வைக்கப்பட்ட
அனந்த பூரிப்பே!
உன் ஆவிக்குப்பலத்த
திடன் உண்டாக்குமே.

252. உாருஉ-ம். கீதம். 8,7,4.

*Deligence in the Christian life.*

PHIL. III. 13-14.

க. கர்த்தரின் தயையைத் தேட
எச்சரிக்கையா யிரு;
ஆவிபார மின்றியேற,

நன்றாய்ச் சாக்கிரதைப்படு;
அங்கே கிரீடம் :
வைக்கப்பட்ட தல்லவோ.

௨. வாசலானது இடுக்கம்,
தாழ்ந்ததில் நீ யுட்படு :
சீவமார்க்கமே நெருக்கம்.
லோக நேசத்தை விடு
வல்ல நாதர்
வல்லமை கொடுப்பாரோ :

௩. நல்ல சேவகத்தைப் பண்ணி
ராச்சியத்துக்குட்படு :
பே யெதிர்க்கில் ஐயமின்றி
நின்று ஏகிக் கொண்டிரு :
உன் சகாயர்;
மார்க்கந் தோன்ற பண்ணுவார்.

௪. வேண்டுதலினு லெதிர்த்து
ஆண்டவர் ரட்சிப்பதை,
காணுமட்டுக்கும் பொறுத்து :
மீட்பரை நன்றாய் நினை
அன்புள்ளோரோ ;
உன் சேபத்தைக் கேட்பாரோ.

௫. கெட்ட இச்சையை யடக்கு
அஃது உன்னை ஆட்கொண்டால்,
நம்பிக்கை என்னும் விளக்கு
மங்கிப்போகு மல்லவா ?
சோதியாரை
உண்மையாகப் பற்றிக்கொள்.

௬. பின்னிருப்பதை யுன்னுமல்
முன்னிருப்பதைப் பிடி:
இச்சைவைத் தழுக்காக்காமல்
தெய்வ சிந்தையைத் தரி:
சீவனுள் ளோர்:
உன்னைச் செல்வனுக்குவார்.

253. உ௱௫௰௩ம். கீதம். P. M.

*Call to watchfulness.* Matt. xxiv–42.

௧. ஓய், எருசலேமியாரே!
விழியுங்கள், மெய்மார்க்கத்தாரே!
இப்பாதி ராத்திரியிலே
பத்தா வர, வேகமாக
எழுந்திருங்கள் புத்தியாக
இருக்குங் கன்னிகள் எங்கே?
தீவட்டி களையே;
எடுத்தெதிர்க் கொண்டே
போம் நேரமாம்:
என்றிரவில்
அலங்கத்தில்
நிற்பாரின் கூக்குரல் உண்டாம்.

௨. சீயோனுகிய மனைவி
சந்தோஷம் மனதில் பரவி,
விழித்தெழுந் திருக்கிருள்.
அவள் நேசர் மேன்மையோடும்
சிநேகத்தோடும் தயவோடும்;

வெளிப் படுகிறதினல்
கிலேசம் நீங்கிற்று,
ஆ! சுவாமி, உமக்கு
ஓசியன்ன!
அடியாருங்
கெம்பீரிக்குங்
கதிக்கு செல்வோமே, கர்த்தா!

௬ சுரமண்டலங்களாலும்
நரர் தூதாக்கள் நாவினலுங்
துதிக்கப்பட்டோர் தேவரீர்.
மோட்ச ஊர் மகா மினுக்கு,
நீர் எங்களை வானோர்களுக்கு
உம்மாலே தோழராக்கினீர்.
அவ்வாழ்வைக் கண்டோரார்?
காதாலே கேட்டோரார்?
நாம் உன்னத
சந்தோஷமும்
மகிழ்ச்சியும்
அடைகிறோம், அல்லேலூயா.

வேண்டுதல்.

254. உாருச-ம். கீதம். S P. M.

*Prayer*. Ps. LXXXVI--6.

க விண்ணப்பத்தைக் கேட்டும்
கர்த்தாவே! இன்றைக்கும்

நமது வேண்டுதலையே :
கேட்டுமதருளே
பேற அடியாரை
ஆசீர் வதியுங் கர்த்தரே !

உ. பிதாக்கள் பொருளை
பிள்ளைகளுக்கு நேசமாய்,
கொடுக்கும் போலத் தேவரீர்
உமது தொண்டரும்
கேட்கும் யாவற்றையும்
இரக்கத்தோடு தருவீர்.

௩. நீர் மோட்ச பிதாவாம்,
ஏழைப் பிள்ளைகள் நாம்
உம்மைக் கண்ணோக்க அருளும்
உமது சித்தமே!
எமக்கு நயமே
என்றெண்ணி என்றுந் துதிப்போம்.

255. உ௱ருரு-ம். கீதம். S. M.

"*Teach us to pray.*" LUKE XI. 1.

க. செபத்தின் ஆவியை
என்னுள்ளத்திலூதும் :
லோகத்தின் கெட்ட பாசத்தை
என் மனதிலே எடும்.

உ. லோகக் கவலையால்
நான் கலங்குவதேன் ?

உம்மை உமதாவியால்
நான் தேடக்கடவேன்.

௩. துணையா யெனக்கு
சீக்கிரத்தோடே வாரும் :
நான் அலையாத படிக்கு
நிலைக்கக் காப்பாற்றும்.

௪. தேவன்பின் பாசத்தால்
கட்டப்பட்டு, என்றும் ;
உம்மை என் முழுமனதால்
பின் தொடரச் செய்யும்.

256. ௨௱௫௰௬-ம். கீதம். L. M.

*The Lord's Prayer.* MATT. VI. 9-13.

க. பரங்களிலிருக்கிற,
பிதாவே ! ஓர் மனப்பட
சேபத்தால் உம்மைத் தேட நீர் :
அடியாருக்குக் கற்பித்தீர்
வாயோடே உள்ளங் கூப்பிட ;
ஒத்தாசையை நீர் அருள.

௨. ஆ! உம்முடைய நாமமே !
மா மேன்மையாக பொய்யையே
நரர் வெறுத்து உம்மண்டை
திரும்பவும் மெய் வேதத்தை ;
அடியார் நன்றாய் என்றைக்குங்,
கைக்கொண்டதில் நடக்கவும்.

௩. பேய் ஆண்ட இங்கே உம்முட
தெய்வீக ராச்சியம் வர
அடியார் நெஞ்சை யுமது
வரங்களாலே சோடித்து ;
பிசாசைக் கட்டி உம்முட
சபைக் கடாட்சியுங் கர்த்தா.

௪. விண் எங்கும் ஆம்போல் மண்ணிலும்,
நீர் வேண்டுமென்ற தாகவும்
அடியார் உமக்குண்மையாய்
கீழ்பட்டடங்கத் தக்கதாய்.
நீர் மாம்சமும் இரத்தமும் :
இச்சிப்பதைத் தடுக்கவும்.

௫. நீர் அன்றன்றுள்ள அப்பத்தை,
அதோடும் மனத் திருப்த்தியை
அளித்துச் சண்டை கலகம் :
உபாதை பஞ்சம் விக்கினம்
விசாரம் பண ஆசையும் ;
விலகிப் போகப் பண்ணவும்.

௬. பிறர்க்கு நாங்கள்யாவையும்
மன்னிக்கும் போல அடியார்க்கும்,
கடனை நீர் இரக்கமாய் ;
மன்னித்து நாங்கள் தயவாய் !
அவரவர்க்கென்னேரமும் :
இரங்கக் கட்டளை யிடும்.

எ. ஆ! எங்களை த்யாபரா;
துற் சோதனையில் உட்பட
ஒட்டாமல், உமதாவியின்
துணையால் சத்துருக்களின்
வினைகளை சோதனையும்
செயிக்கத் தைரியங் கொடும்.

அ. அடியாரை எத்தீமைக்கும்,
விலக்கிப் போட்டு ரட்சியும்
நல்லாறுதலைக் கடைசி;
இக்கட்டிலுந் தந்தருளி:
பிரியும் ஆத்துமத்தையே,
நீர் ஒப்புக் கொள்ளுங்கர்த்தரே.

௯. அடியார் வேண்டுதல்களை,
நீர் தரச் சித்தமானதை;
நன்றாக நம்ப ஞாயமாம்,
சந்தேகமில்லை அதெல்லாம்
மெய்ப்பத்தருக்கு வரப்போம்:
அதற்கு ஆமேன் என்கிறோம்.

துணைப்படுகிறவர்களின் வேண்டுதல்.

257. உ௱௫எ-ம். கீதம். P. M.

*Prayer for faith and victory.*

Ps. iv. 1. ii. Cor. i. 10-11.

க. சீவ கர்த்தரே!
பாவக் கேட்டிலே;

சாகும் என்னையே, ரட்சித்து
சேர்த்த உம்மை நான் துதித்து
போற்ற வேண்டுமே :
சீவ கர்த்தரோ!

உ. அன்பின் ரூபம் நீர்,
என்னை தேவரீர் :
அன்பாய்ச் சேர்த்துக்கொண்டதாலே
என்னை மெய் மகிழ்ச்சியாலே!
பூரிப்பாக நீர்;
அன்பின் ரூபம் நீர்.

௩. உம்மைத் தேடினேன் ;
என்னைத் தேற்றுமேன்,
நம்பிக்கையின் தீபத்திற்கு
நல் வளர்ப்புண்டாவதற்கு
எண்ணெய் வாருமேன்!
உம்மைத் தேடினேன.

௪. வல்ல கர்த்தரோ !
துன்ப நாளிலே :
லோக மோசத்துக்குத் தப்ப
என்னை வன்மையால் நிரப்ப
வாரும் ஏசுவே !
வல்ல கர்த்தரோ.

௫. தேவரீர் துணை,
நீர் உலகத்தை
வென்று கொண்ட அன்பினாலே ;

ஆறுதலுடன் உம்மாலே
நானும் லோகத்தை
வெல்ல நீர் துணை.

258. உ௱௫௰௮-ம். கீதம். S. M. D.

*" The time past of our life may suffice us."*

1. PET. IV. 3.

க. பாவ மயக்கத்தை
விட்டெப்போ விழிப்பேன் ;
இனித்தூங்காமல் மனதை
எழுப்பக் கடவேன்,
எப்போதுஞ் செபத்தால்
கர்த்தர் என்னுத்துமம்.
காப்பாற்ற வேண்டுவதினுல்
மாருத சௌக்கியம்.

உ. கருத்தாய்ச் செபத்தில்,
நிற்கிற மனதால்
சகல கறை குறைச்சல்
நான் கர்த்தர் முன்வைத்தால் ;
நான் கேட்பதற்கு மேல்
அதிகங் கொடுப்பார்.
என்றும் வாடாப்பாக்கியத்தில்
என்னை நிறுத்துவார்.

௩. பாவ உலகத்தை
ரட்சிக்கக் காக்கிறீர்;

பூரண பாவ மன்னிப்பை
நம்புவார்க்கீகிறீர்
என்னைப்போல் எல்லாரும்
மன்றுடும் படிக்கு
உமது கிருபாசனம்,
ஸ்தாபிக்கப்பட்டது.

௪. இங்கேதானிருந்து
என்பாவத்தை நீக்கி
என் கர்த்தரின் சாயலுக்கு;
என்னை புதிதாக்கி
முடியுமட்டுக்கும்
ஓயாமல் வேண்டுவேன்!
பிதாவே! என்றேன் விண்ணப்பம்
விடாமற் சொல்லுவேன்.

௫. பாவத்தை ஒழித்து
நித்திய நீதியை
என்னுத்துமத்தில் ஸ்தாபித்து.
பூரண கிருபை
கேட்கிற எவற்கும்
தாரும் என் ஏசுவே!
மீட்புஞ் சுத்திகரிப்பும்
தருபவர் நீரோ!

௬. விசுவாசத்தினுல்
உண்டாஞ் சௌக்கியத்தை
நாங்கள் மெய்யாய் விரும்பினுல்;
வேண்டிய பொறுன்ம

உமது ஆவியால்,
எங்களுக்குத் தாரும்:
உமது தேவ வார்த்தையால்
கிரியை முடியும்.

259. ௨௱௫௰௯-ம் கீதம். 10's.

*Surrender of the heart to God.* ISA. XXVI. 13.

௧. என் உள்ளமே! என் முழு நெஞ்சே! நீ
கர்த்தாவுக்குன்னை நன்றாய் ஒப்பிவி:
உன்னுடைவர் நல்ஐக்கமாகவே
நீ அவர் சொந்தமாய் இருப்பாயே.

௨. பிதாவே! என்னை ஏற்றுகொண்டிரும்;
தப்பாய் நான் செய்ததைப் பாராதிரும்;
அபாத்திர என்மேலிரங்குமேன்,
நான் பாவிதான்என்றேற்றுக்கொள்ளுவேன்.

௩. என் மீட்பரே! நீர் என்னைச்சேர்த்திடும்
என் அக்கிரமத்தின் பாரம் யாவையும்
நீர் தான் சுமந்தீர் ஆட்டுக்குட்டியே;
ஆ! அதற்கு நான் நீங்கலாவேனே.

௪. தேவாவியே! நீர் என்னை அப்புறம்
நற்பாதையில் நடத்தி என் மனம்
எந்நேரமும் உம்மண்டை சேரவே!
பரம சிந்தையும் கொடுப்பீரே.

௫. திரியேகரே! நான் எனக்கல்லவே;
உமக்குச் சொந்தமாய் இருப்பேனே:

நான் இன்னமிங்கே மண்ணில் தங்கியும்,
என்னெஞ்சு நித்தம் விண்ணை யாசிக்கும்.

260. உ௱௬௰-ம். கீதம். P. M.

*Prayer for spiritual light and joy.*

Ps. XVIII. 28.

க. நீதிச் சூரியனே!
உதித்தேனக்கே;
பாவவிருள் வெகுதிரள்
போக்கவேண்டுமே.

உ. என்னில் ஒளிக்கும்
பாவ முழுதும்
புறம்பாக்குஞ், சுத்தமாக்கும்,
உள்ளே விளங்கும்.

௩. சாத்தான் நடுங்கும்,
இச்சை வதங்கும்,
நீரோயென்னிலொளி தரில்
யாவும் அடங்கும்.

௪. துன்ப முடுநாள்
நீரோ யுதித்தால்;
துக்கமறும், மகிழ்வரும்
உமதொளியால்.

௫. சாவின் பள்ளத்தில்
நான் நடக்கையில்,

கூட் வாருஞ் செயந்தாரும்;
நித்திய மோட்சத்தில்.

261.  உாசுக-ம். கீதம்.  8,7,4.

*Prayer for salvation.* Ps. XVII. 6-8. Ps. LXXX. 2.

க. ஈனருக்கு மா பெலனும்,
துக்கப்பட்டிருக்கிற
பாதகர்க்கு மா திடனும்,
அன்புள்ளோருமாகிய
தேவரீரே!
எனக்கூக்கத்தைக் கொடும்.

உ. என் இதயஞ் சென்மப்பாவம்
ஊறும் ஊற்றேயானது,
என்னுடைய முழுச்சுபாவம்,
தீமையால் நிறைந்தது:
பாவத்தோடு
நான் பிறந்தோன் ஏசுவே!

ங. உம்முடைய ரத்தத்தாலே;
குற்றம் நீக்கி ரட்சியும்:
என்னை யுமதாவியாலே
சுத்தமாக்கி அருளும்:
ஆ! கர்த்தாவே!
ஆற்றித்தேற்றி ரட்சியும்.

ச. என்னுடைய நெஞ்சில் வந்து,
தங்கும் என் சகாயனே:

அஃதால்த் துக்கத்தை மறந்து
வெற்றியை யடைவேனே :
உமக்கேற்ற
வாழ்த்தலைச் செலுத்துவேன்.

262.  உ௱௬உ-ம். கீதம்.  L. M.

*The same.* Ps. LI. 10.

க. விருப்பத்தோடென் உள்ளத்தை,
அண்ணுக்கப் பண்ணிப் பாவத்தை,
வெறுக்கச், சுத்த நெஞ்சை நீர்
என்னிற் படையுந் தேவரீர்.

உ. பசாசினல் இடிந்ததை
எழுப்ப நீர் என் சித்தத்தை
எதிர்ப்படா தகெட்டியும்
பலனுமாக்கிக் கொண்டிரும்.

௩. கர்த்தாவே ! யுமதாவியை,
கொடுத்து இந்தத் தாசனை
பிரகாசிப்பித்து, யாவையும்
மன்னித்திரக்க மாயிரும்.

௪. என் சித்தந் துக்கமற்றதாய்
உமக்கியைந்த பத்தியாய்
நடக்க, நித்தம் நித்தமும் ;
திடன் கொடுத் திரட்சியும்.

263. உ௱௬௰௩ம். கீதம். P. M.

*The same.* Ps. LI. 2. LV. I.

க. பொல்லாத சித்தம் போகவே
விரும்பினலும் நிற்கும் ;
பசாசினல் என் உள்ளமே
நல்லாவியைத்தவிர்க்கும் ;
நற்சுபாவம் போகக் கெட்டோமே ;
எதைச் செய்தாலுந் தீதாயே
முடிந்து கெட்டுப் போகும்.

உ. கெட்டோமென்றே யறிந்தபின்
அவர் முன்பாகத் தாழ்ந்து,
ஏசுவே ! நீர் மாண்டதின்
பலத்தினல் நாம் வாழ்ந்து
பிழைக்கச் செய்யும் மீட்பரே !
என்றேங்கினல் மெய்யாகவே
இரங்கி நம்மை மீட்பார்.

௩. கர்த்தாவே ! யுமதன்புக்கு
புகழுண்டாவதாக
தொழும்பர்கள் விசுவாசித்து,
பிழைக்கத்தக்கதாக
இங்கும்முடைய உன்னத
நன்மைம் மாட்சிமைப்பட
இராசரீகஞ் செய்யும்.

௪. கர்த்தாவின் சித்தப்படியே
எல்லாருஞ் செய்வோமாகவே ;

புசிப்பைத்தாருங் கர்த்தரே!
கடன்களை யன்பாக
மன்னித்துப் பீடைக்கேதுவை
விலக்கிப்போட்டுத் தீமையை
நிவிர்த்தி பண்ணும் ஆமன்.

264. ௨௱௬௪-ம். கீதம். L. M.

*Prayer for spiritual blessings.* James i. 17.

௧. கர்த்தாவே! எந்த நன்மைக்கும்
நீர் காரணர் என் புத்திக்கும்
மிகுந்த ஈன முண்டு நீர்
அதை யறிந்திருக்கிறீர்.

௨. சென்மத்தினால் என்னெஞ்சமும்
உமக்கும் மானிடருக்கும்
தகாத ஆசையுள்ளது
நற்சுபாவமே யில்லாதது.

௩. நற்சுபாவமாகவேண்டுமே;
இல்லாவிட்டாற் பரத்திலே
நான் உம்மைவிட்டு நீங்கியே,
என்றைக்குங் கெட்டுப்போவேனே.

௪. ஏசுதான் மரித்ததால்
பிதாவே! யுமதாவியால்,
என்னெஞ்சத்திற் பிரகாசியும்
நற்சித்தத்தைக் கடாட்சியும்.

௫. அஞ்ஞானியை ரட்சிக்கவும்,
துன்மார்க்கனைத் திருப்பவும்,
நற்சித்தந்தானே, என்னிலே
இருக்கச்செய்யுங் கர்த்தரே.

௬. அதற்குச் சத்திய வேதமும்
அதை விரிக்கும் ஆவியும்
என் உள்ளத்தில் தரிக்கவே
கடாட்சியும் என் மீட்பரே!

265. ௨௱௬௫-ம். கீதம். 8. 7.

*Deliverance from sin by Christ.* HOSEA XIV. 2.

௧. யாவிலும் பலத்த மீட்பர்!
என்னை மீட்டி ரட்சியும்;
ஆக்கினையைப் போக தீர்ப்பர்!
என்னில் சீவனைக் கொடும்.
தேவரீரையே துதிக்க
தூதர்போல வாஞ்சிப்பேன்;
உம்மிடத்திலே தரிக்க
என்றென்றைக்கும் நேசிப்பேன்.

௨. தேவரீருடைய ஆவி!
என்னில் தங்க அருளும்:
நான் மகா குரூர பாவி
நீர் என் னெஞ்சைத்தேற்றிடும்:
பாவஞ் செய்வதற்கு ஆசை
என்னில் நீங்கச் செய்யுமேன்;

சாபம் தள்ளி சுத்த வாஞ்சை
என்னில் தோன்றப் பண்ணுமேன்.

266. உ௱௬௰௬-ம், கீதம். L. M.

*Prayer for true wisdom.* Ps. LI. 6. Prov. II. 7.

க. ஆ! என் பிதாவே! என்னிலே;
இருக்கும் அறிவின்மையே
அகற்றி, புது நெஞ்சையும்
குணத்தையும் தந்தருளும்.

உ. என்றைக்கும் உள்ளமாதயை
இருக்குந் தேவ ஞானத்தை
என் ஆத்துமாவுக் கருளும்,
இவ்வேண்டுதலைக் கேட்டிடும்.

௩. அதும்மிலே பிறந்தது,
அதினுடைய மேன்மைக்கு
ஒப்பில்லை புண்ணியம் எல்லாம்
அதின் வரங்களால் உண்டாம்.

௪. பிழைக்கவும் சுகிக்கவும்
அதே வழியைக் காண்பிக்குமா?
அதின் சொல் கேட்கும் மனிதன்
சேத்தும்பிழைத் திருப்பவன்.

௫. ஆ! எனக்கும் நீர் தயவை
செய்தும்முடைய ஞானத்தை;

என் ஏழை ஆத்துமாவிலே :
இருக்கச்செய்யும் பிதாவே.

267. ௨௱௬௰௭-ம். கீதம். 7, 6.

*Seeking Christ.* Sol. Song i. 4.

க. நீர் என்னை யுமதாட்டாய்
அறியும், மேய்ப்பரோ!
முன் சீவன் ஊறும் ஆருய்
என் தாகந் தீர்த்தீரோ.
நீர் என்னைப் போதிவிக்க
அமிர்த முண்டேனே :
நீர் தேற்றரவளிக்க
பேரின்ப மாயிற்றே.

உ. உம்மண்டை இங்கே நிற்பேன்
என் மேல் இரங்குமேன் ;
விண்ணப்பத்தில் தரிப்பேன்
என் கர்த்தனை விடேன்
இதோ ! நான் உம்மைப்பற்றி,
கண்ணீர் விட்டண்டிணேன்
மரிக்கும் உம்மைக்கட்டி
அணைத்துக் கொள்ளுவேன்.

268. ௨௱௬௰௮-ம் கீதம். 8, 7, 4.

"*Create in me a clean heart O God : and renew a right spirit within me.*" Ps. li. 10.

க. ஏசுவே ! நீர் பிதாவோடும்
என்னை வந்திரட்சியும்,

பரிசுத்த ஆவியோடும்
என்னில் வந்து என்றைக்கும் ;
வாசம் பண்ணும்,
நற்சீரைத் தந்தருளும்.

௨ ஆத்துமாவுக் கின்பமான
உம்முடைய வார்த்தையே ;
நம்ப, நீர் உறுதியான
நல்ல விசுவாசத்தை
எனக்கீயும்,
தயவுள்ள ஏசுவே !

௩. மோட்ச பாதை இன்னதென்று,
உம்முடைய வார்த்தையால்
கேட்ட நானே, அதில் சென்று ;
போவதற்கு நீர் அன்பால்
என்னை நோக்கி
ஆவியைக் கடாட்சியும்.

௪. என்னில் நேடிதாய் உணர,
அவர் என்னைப் போதித்தே ;
என்னை ஏவினாலொழிய,
மனத்திருள் நீங்கவே
நல்ல ஆவி !
ஒளியை ஈந்தருளும்.

269. ௨௱௬௯-ம். கீதம். L. M.

*The attracting power of the love of Christ.*

JOHN XII. 32.

க. ஆ, ஏசுவே ! நான் வானத்தில்
உயர்த்தப்பட்டிருக்கையில்,
எல்லாரையும் என் பக்கமே
இழுத்துக்கோள்வேனென்றீரோ.

உ. என் மனசை இழுக்கையில்,
அது கேட்ட உலகத்தில்
உள்ளானதை ஆரோசிக்கும்
அனந்த நன்மையிற் படும்.

ங. தராதலத்தில் உம்முடன்
உபத்திரப்படாதவன்,
உம்மோடு விண்ணில் வாழ்ந்திரான்,
சகிப்பவன் சந்தோஷிப்பான்.

ச. மகா தலத்தில் தேவரீர்
இருப்பிடம் உண்டாக்கினீர் :
அங்கே வசிக்கும் நீதியர்
இக்கட்டும் நோவும் அற்றவர்.

270. ௨௱௭௰-ம். கீதம். 8, 7, & 4.

*Drawing near to Christ.* JER. XXX. 21.

க. என்னை தேவசாயலான
வஸ்துவாக்கிப் பின்பு நான் ;

கெட்டப்போதேன் மீட்பரான
கர்த்தரோ! நீர் நேசவான்;
என்றென்றைக்கும்
என்னை யும்மிலே யிழும்.

௨. மாந்தர்க்காகப் பாடுபட்டு
நிந்தையுள்ள தாகிய,
சாவினால் மகா ஸ்தலத்து
பாக்கிய முண்டாக்கின,
நீரோ என்றும்
என்னை யும்மிலே இழும்.

௩. மானிடர்க்கு மார்க்கத்தையும்,
மெய்ம்மையையும் நித்திய
சீவனையும் மோட்சத்தையும்
ஈந்த மீட்பராகிய,
நீரோ என்றும்
என்னில் தங்கி ரட்சியும்.

271. உ௱௭௧-ம். கீதம், L. M.

*Christ the light and joy of men.*

௧. ஆ! உலகத்தின் ஒளியாய்
உதித்த ஏசுகிறிஸ்துவே!
இருள் அடைந்த மாந்தர்க்காய்
பிறந்த சீவ சோதியே;
எங்களில் பிரவேசியும்
பிரகாசமாக்கி அருளும்.

௨. சொல்லுக்கெட்டாத அன்பினால்
தேவ சொரூபமானவர் ;
இப்பூமியில் பிறந்ததால்
நிற்பந்தமுள்ள மனிதர்
மகிழ்ச்சியாக பாடவே :
இடம் உண்டாக்கப்பட்டதே.

௩. கர்த்தர் இவ்வள வன்பினால்
காண்பித்த நல்ல யோசனை
நம்மில் பலிக்க, அதினால்
குழந்தைக்கேற்ற சிந்தனை
நமக்குண்டாகும் படிக்கே
இரங்கும் தேவசுதனே!

272. ௨௱௭௨-ம். கீதம். L. M.

*Christ welcomed.*

௧. கர்த்தாவே ! வாழ்க ! பாவியை
நீர் கைவிடாமல் இத்தனை
தாழ்வாய் என்னண்டை வந்தது
அளவில்லாத தயவு.

௨. மகிமையான ஏசுவே !
மெய் ஆஸ்தியான உம்மையே :
நான் பெற்றிருக்க என்றைக்கும்
என்னெஞ்சில் தங்கியருளும்.

௩. வெளிச்சம் தாரும் அறிவில்
சுடன்பை நெஞ்சில் அளியும் :

என் மனப்பலவீனத்தில்
பலம் உண்டாக்கி அருளும்.

ச. அதால் நான் நித்தம் பூரிப்பாய்
இருந்து மா சந்தோஷமாய் :
இவ்வுலகத்தை வெறுப்பேன்
கதியாம் உம்மைப் பாடுவேன்.

விசுவாசிகளின் வேண்டுதல்.

273. உாளக-ம். கீதம். 7. 6.

*Prayer for holiness and eternal life.*
Ps. LXXIII. 24.

க. அழிவற்ற ஆத்துமா
எனக்குத் தந்தவர்,
அதில் தங்கும் படியாய்
உண்டாக்கி மீட்டவர்,
ஏசுவே ! இப்பொழுது
நன்மை நீதி நேசமும்
பலம் எனக்களித்து,
என்றும் விடாதேயும்.

உ. தேவ சாயலை என்னில்
உண்டாக்கிச்சுத்தமும்,
சாந்தம் ஞானமும் என்னில்
என்றும் வளர்ப்பியும்.
உமக்குள் மெய் வாழ்வையே
ருசித்து மோட்சத்திலே
வாழ்வது, நீர் என்னையே
படைத்த எண்ணமே.

௩. தேவ சித்தம் என்னிலே
நடக்கச்செய்திடும் :
உம்மைப்பற்றும் அன்பினலே
நான் வளரப்பண்ணும் :
விண்ணினின்று வந்தோராய்
உம்மைக்கண்டு பார்க்கையில்
என் உள்ளம் நற்பூரிப்பாய்
மகிழும் மோட்சத்தில்.

274. உ௱௭௬-ம். கீதம். S. P. M.

*Christ the light of men.*

க. கர்த்தாவாம் ஏசுவே !
அடியார் நெஞ்சிலே :
புதிய, சீரைச்சிஷ்டியும்
பெரு வெளிச்சமாய்,
விளங்கி நித்தமாய்,
அதிலே பிரகாசியும்.

உ. உம்மாலே ஈவெல்லாம்
பூரணமாய் உண்டாம் ;
பிதாவின் சாயலாய் நீரோ
எல்லாஞ் சீராக்கிறீர் ;
முற்றுமே மாற்றுவீர்
என் நன்மையும் அளிப்பீரோ.

௩. பெரு வெளிச்சமே !
அருதி பொழுதே !
நாங்கள் உம்மாலே, மிகவும்

சீர்ப்படக் கூடுமே :
நீர் எங்கள் நெஞ்சிலே ;
தினமும் ஒளி அருளும்.

ச. அடியார் பத்தியாய்
உமக்கு மேன்மையாய்
வெளிச்சத்தில் நடக்கவே,
நீர் உமக்கேற்கவும்
புதுக்குணத்தையும்
மேன்மேற் கொடுப்பீராகவே.

275. உ௱எரு-ம். கீதம். 7's.

*The same.*

க. என் மெலிந்த மனதை
திடமாக்கிக் கொண்டிரும்;
தாகிக்கும் என் உள்ளத்தை
தேற்றி ஆசீர்வதியும் ;
அருளைக்கடாட்சியும்,
விரைவாய் வந்தருளும்.

உ. சூரியன் உதிக்கையில்
அந்தகாரம் நீங்குமே ;
நீர் என்னில் தோன்றுமையில்
விசனம் பிறக்குமே ;
கிருபையின் கிரணம்
ஆத்துமாவுக் கின்பமாம்.

ந. பாவமான இருளை
நீக்கிப் பிரகாசியும் :

தேவ சோதியால் என்னை
நிறை வாக்கி அருளும் :
பட்டப்பகல் வரைக்கும்
பெருஞ் சோதியாய் இரும.

276. உ௱௭௬-ம். கீதம். 6. 8's.

*Wrestling with God.* Gen. xxxii. 29.

௧. என் ஆத்துமத்தின் நேசரே!
உம்மை யறிவது செல்வம் :
நம்பாமை நீக்கி நன்மையே
உம்முடன் நன்மை காண்பியும் ;
ஏசுவே ! உம்மை எனக்கும்
பேர் சுபாவம் எல்லாம் உரையும்.

௨. நீர் என்னோடிருக்க உம்மை
நான் அறியாத தெப்படி ?
குளரும் பேச்சாய்ச் செபத்தை
நான் பண்ணியும் நீர் இரங்கி
உமது நாமத்தைச் சொல்லும்
உம்மைத்தாம் வெளிப்படுத்தும்.

௩. மண்பூச்சியான என்னோடு
நீர் தயவாகப் பேசினால் ;
திறந்த ஞானக் கண்ணோடு
நான் பார்ப்பதற்கு ஆவியால்
வேதார்த்தத்தைத் தெரிவியும் ;
உம்மைத்தாம் வெளிப்படுத்தும்.

277. உளஎ-ம் கீதம். 8. 7's.

*"Draw me, we will run after thee."*
SOL. SONG I. 4.

க. ஆ, ஏசுவே! புவியிலே
இருந்திரக்கமாக
அடியாரை அங்கும்மண்டை
இழுத்துக்கொள்வீராக.

உ. இழும், இழும்! அடியார்க்கும்
பரகேதியளியும்
அப்போதெல்லா உபத்திர
வருத்தங்கள் முடியும்.

ஙு. ஆ! எங்களை நீர் உம்மண்டை
போம் பாதையில் நடத்தும்.
அடியார் காலத் தப்பாய்ப்போனுல்
நீர் மோசத்தை அகற்றும்.

ச. இவ்வுலகம் ஆகாத்தலம்.
இழும் அடியார் தேடும்
தலம் பரம் ஆ! அவ்விடம்
நீர் கொண்டபோைச் சேரும்.

ரு. நீர் ரட்சகர் நீர் மீட்டவர்;
நீரோ! இம்மானுவேலும்
இரட்சியும். இழும் இழும்,
இவ்வேண்டுதலைக் கேளும்.

278. ௨௱௭௮-ம். கீதம். P. M.

*Prayer for the in-dwelling of Christ.*

EPHES III. 14. 21.

க. பரத்திலும் புவியிலும்
உண்டாயிருப்பதான ;
இனக்கூட்டம் அனைத்துக்கும்
ஏக தகப்பனான ;
அளவில்லாத தயவும்,
முடிவில்லா இரக்கமும்
விளங்கிற கர்த்தாவே !
அடியார் கர்த்தராகிய
அன்புள்ள ஏசு என்கிற
ரட்சகரின் பிதாவே !

உ. நான் தாழ்மையோடே உம்மண்டை
சேர்ந்துமக்கு முன்பாக
பணிந்தேன் முழங்கால்களை
முடக்கி பத்தியாக
செய்யும் விண்ணப்பம் ஏதென்றால்
நீர் பரிசுத்த ஆவியால்
அடியாரை அன்றன்றும்
உள்ளான மனதிலே
மேன்மேலும் தாட்சியன்றியே
பேலன் அடையப்பண்ணும்.

௩. மெய்விசுவாசம் உள்ளத்தில்
பேலத்துப் போவதாக;

அத்தாலே கிறிஸ்து எங்களில்
குடியிருப்பாராக :
தேய்வன்பில் நாங்கள் ஊன்றவும்
எல்லாச்சன்மார்க்கரோடேயும்
அடியார்கள் எல்லாரும்
தேய்வன்பின் மகிமையும்
விரிவையும் உணரவும்
நீரோ உணர்வைத்தாரும்.

ச. ஆம், எங்கள் சின்னப்புத்தியை
கடந்துசேன்றதான,
இரட்சகரின் நேசத்தை
அறியுந் தேளிவான
உணர்வை யருளி, உம்மாலே
உண்டாஞ் சம்பூரணத்தினல்
சபை நிரப்பிவியும் ;
இவ்வேண்டுதலை யும்முட
அளவில்லாத தாகிய
இரக்கத்தால் அளியும்.

ரு. அடியார் கேட்கிறதிலும்
நினைக்கிறதிலேயும்
மகா அதீகமாகவும்
எல்லாம் நற்படியேயும்
அளவில்லாத உமது
பேலத்தால் சேய்கிறதற்கு
நீர் வல்லவருமாமே ;
உம்முடவர்களாகிய

அடியாருக்கிரங்கிற
சகாயரும் நீர்தாமே.

௬. அன்பாக நீர் விசாரிக்கும்
கிறிஸ்தோர் சபையிலுள்ள
எல்லாச் சன்மார்க்கராலேயும்
உமக்கு என்றுமுள்ள
அனந்த காலத்திலுமுண்டாம்
தலைமுறைகளில் எல்லாம்
குமாரன் மூலமாக
வணக்கமும் புகழ்ச்சியும்
கனமுந் தோத்திரங்களும்
உண்டாயிருப்பதாக.

279. ௨௱௭௯-ம். கீதம். 8. 7.

*Christian race.* HEB. XII, 1–3.

க. கரையேற மனதான
மனிதன் பரத்துக்கே ;
போம்வழியில் திட்டமான
சீராய் ஓடவேண்டுமே.

௨. ஏசுவே ! மகா அன்பாக
மோட்ச பந்தயத்தை நீர்
அதைப்பெறத்தக்கதாக
எனக்குங் காண்பிக்கிறீர்.

௩. அடியேனுக்கங்கே சேரும்
வாழ்வு எப்போது வரும் ;

எனதாவி அதைத்தேடும்,
ஆசை என்னிற் பெருகும்.

௪. ஆ! இப்பலவீனனுக்கு
நீர் இரங்கும், ஏசுவே!
நீர்தான் என் சகாயத்துக்கு
வாருமேன், என் மீட்பரோ!

280. உ௱௭௰-ம். கீதம்.

*Prayer for victory over spiritual foes.*

Rom. xvi. 20.

௧. ஏசு கர்த்தரோ! பசாசை
எங்கள் கால்களின் கீழாய்
நீர் நசுக்கி, உம்முடைய
ஆட்டுக்கூட்டத்துக் கன்பாய்
ஊக்கந் தந்து,
ஆறுதலைச் செய்திடும்.

௨. நல்ல பாதையில் நடந்து
போக, எங்களை நீரோ;
கைக்கொடுத் தணைத்துக்கொண்டு
ஆதரிகக வேண்டுமே;
எந்த மோசம்
தோன்றினாலும் ரட்சியும்.

௩. அன்பினாலே ஏவப்பட்டு
உம்மைப்பற்றிக் கொள்ளவே;

உமதாவியின் பலத்தை
தாரும் நேச ஏசுவே!
　எங்கள் நெஞ்சை
செம்மையாக்கிக் கொண்டிரும்.

ச. அதினாலே எங்கள் நெஞ்சும்
எங்கள் சுத்தவாய் நித்தமே;
உமக்கேற்ற வாழ்த்தல் சொல்லும்
உம்மைப்பாடும் ஏசுவே!
　அதே எங்கும்
தோன்ற வேண்டும், கீர்த்தனம்.

பரிந்து வேண்டுதல்.

281.　ஊாஅக-ம். கீதம்.　7's.

*Prayer for the conversion of men.*

Ps. lxvii. Heb. ii. 14.

க. எங்கும் மாந்தர் தேவனே!
தங்கள் கேட்டைக் காணவே
புத்தியைக் கடாட்சியும்,
கேட்டை நீக்கி ரட்சியும்.

உ. உமது விசேஷத்தை
அதினால் இரக்கத்தை
மாந்தர் யாரும் பார்க்கவே;
செய்யும் நல்ல மீட்பரே.

2 F

282. ௨௱௮௨-ம். கீதம். L. M.

*The same.* Luke ii. 30. 32.

க. மெய்ச்சோதியான ஏசுவே!
இருளின் மாந்தர் பேரிலே
இரங்கி அவர் யாருக்கும்
பிரகாசம் கட்டளையிடும்.

உ. பொய்ப்போதகத்தால் ஆருக்கோ
தகாத சிந்தனை உண்டோ;
அவர்கள் ஆத்துமாவிலே
மெய் வரப்பண்ணும் ஏசுவே!

ரு. காணாமல் போன பாவியை
அன்பாக தேடியவனை
நெறிப்படுத்தி அருளும்,
கெடாத படி ரட்சியும்.

ச. அதற்கு வேத வாக்கியம்
எல்லாருடைய நெஞ்சிலும்;
பேலன் உண்டாகச் செய்திடும்
தேவாவியே! பிரகாசியும்.

283. ௨௱௮௩-ம். கீதம். 8, 7, 4.

*Prayer for the success of the gospel.*

Ps. xliii. 3. Isa. lx. 1.

க. தேசத்தார்கள் யாரும் வந்து
நல்ல மா விசேஷத்தை
கேட்டு அதின் சோதி கண்டு

சீர்கொள்வார்களென்றீரோ ;
ஆ, கர்த்தாவே !
சொற்படிக்குச் செய்திடும்.

௨. வையகம் எல்லாம் மிகுந்த
புத்தியீனமுள்ளது
அதால் மாந்தர்க்குட்புகுந்த
கேடு மா பலத்தது
ஆ, கர்த்தாவே !
மாந்தரை இரட்சியும்.

௩. உம்முடைய வார்த்தை சொல்ல
எங்கும் போகும் சீஷரை
நீர் பலப்படுத்தி நல்ல
புத்தி தாரும் மீட்பரோ !
உமதாவி
போதகர்க்கு ஈந்திடும்.

௪. வார்த்தை கேட்கும் ஊர்ச்சனங்கள்
உண்மையை அடையவும்
அங்கங்குள்ள பொய் மதங்கள்
பூதலத்தில் நீங்கவும்,
நீர் மெய்யான
ஆவியைக் கடாட்சியும்.

284. உாஅசஅ-ம். கீதம். L. M.

*Prayer for Idolaters and Roman Catholics.*

Ps. LXVII. 5.

க. கர்த்தாவே! பூதலத்திலே;
உண்டான கேட்டைப் பாருமேன்.
அநேகம்பேர் இருளிலே:
இருந்து நீங்க வாருமேன்.

உ. நீரோ! மெய்த்தேவன் மானிடர்
பொல்லாத இஷ்டமாகவே;
பொன், வெள்ளி, மண், கல், வீரர்கள்
தேவர்களென்கிறார்களே.

ஙூ. சிலர் மிகுந்த ஈனத்தால்
தெய்வீக சொற் புரட்டியும்.
பாப்பென்பவனைத்தேவனால்
நிறைந்தோனென்று சொல்லியும்.

ச. இருந்து பொய்யைப் போதித்து
இலக்கமற்ற பேர்களை,
கெடுக்கும்படி யோசித்து;
தப்பாயிருக்கிறார்களே.

ரு. பலத்த ஏசுவே! நீரோ
அப்பொய்களை அகற்றுமேன்
தெய்வீக வார்த்தையால் நீரோ;
துன்மார்க்கரை அதட்டுமேன்.

௬. எல்லாரும் ஏக சித்தமாய்
மெய்த் தேவனென உம்மையே!
அறிந்து கிறிஸ்தின் மேல் அன்பாய் ;
இருக்கச்செய்யுங் கர்த்தரே!

௯-ம். பிரிவு.

## மரணத்தைக்குறித்தது.

*அதின் சாதாரணம்.*

285. உ௱௮௫-ம். கீதம். P. M.

*"It is appointed unto men once to die, but after this the judgment."* HEB. IX. 27.

க. ஓரம் இல்லாச் சமுத்திரம்
முன் பின் இருக்கச் சாகும் : நான்
ஓர் கணப் பொழுதில்,
முத்தி யடைந்திருப்பேனே ?
பாதாளத் தீக்கிடைக்குமோ ?
ஆ! மிஞ்சுமே திகில்.

உ. தயாபரா! என் நெஞ்சிலே
நித்தியமுள்ள இவையே
பதியச் செய்திடும்.
கெட்டுண்டழிந்துப் போகுமுன்
தேவன்பைப் பெற்றோனாகவும்,
என்னைக் காத்தருளும்.

௩. சுத்தாங்கத் தூதசேனையும்
ஆரம்பம், சோதி, துதியும்.
தோன்றும் அப்பொழுது,
மரித்தோர் உயிரோர் கூடவும்,

எழுப்பி தீர்க்கப்படவும்,
நான் கூட நிற்பேனே.

ச, இங்குள்ள நாட்கள் யாவிலும்,
நம்பிக்கை பத்தி அன்பிலும்.
கதிக்கும் நோக்கமே
என்னெஞ்சில் தாங்கும் படிக்கு,
தேவாபிஷேகம் எனக்கு
அருளும், ஏசுவே!

ரு. சாவால் நான் களிப்புடன்
பரத்திற் சேர்ந்து, உம்மைத்தான்
என்றென்றைக்கும் போற்றுவேன்.
நம்பிக்கை காட்சியாய் வரும்
மேஞ்ஞானம் சுத்தம் அன்பிலும்
பூரணம் அடைவேன்.

286. உ௱௮௰சு-ம். கீதம் 8, 7, & 4.

*The vanity and shortness of life.*

Ps. xc. 6. Ps. ciii. 15.

க. தோழனே! உன் சீவன், இங்கே
என்றென்றைக்கும் நிற்குமா?
தோன்றிப் போகும் புகைபோலே
அதிருக்குமல்லவா?
ஆகையாலே.
சீவகாலம் மீட்டுக்கோள்.

உ. இந்தப்பூமியுள்ள போருள்
போன நாளைப் போலாமே!

மேலிருக்கும் போக்கிஷங்கள்
என்றேன்றைக்கும் நிற்குமே.
திடன் கொண்டு,
இவையே நீ தேடிக்கோள்.

௩. மனிதரின் அலங்காரம்,
பூவைப்போல் உதிர்ந்துபோம்,
என்றும் நிற்கும் அஸ்திவாரம்,
கர்த்தர் சொன்ன வார்த்தையாம்.
அதினுலே,
தோன்று மா சிறப்பைப் பார்!

௪. மனிதரின் மகிமைகள்
புல்லைப்போல் உலர்ந்துப்போம்.
லோகக் கல்வி யோசனைகள்
சீக்கிரம் ஒழிந்துப் போம்,
பேலவானும்
பேலனற்றவனுவான்.

௫. தேகம் சோஸ்த முள்ளவர்கள்,
நினையாத நேரத்தில்
நம்மைவிட்டுப்போகிறுர்கள்,
மறைவுள்ள லோகத்தில்.
அதை எண்ணி,
சாவு வரக் காத்திரு.

௬. மரணத்தை செயங்கொண்ட
ஆண்டவனைப் பற்றிக் கோள்:
அப்போதேன்றும் சீவனுள்ள

ஏசுவினுடைய சொல்
நீயும் கேட்டு,
மோட்சத்துக்கு ஏறுவாய்.

287. ௨௱௮௭-ம். கீதம். C. M.

*"Thee we adore eternal name."* Ps. xc. 3.

க. நித்திய நாமமே! உம்மை
தாழ்வாய்ப் பணிகிறோம்.
சாவுக்குரிய தேகத்தை
உடையோராகிறோம்.

உ. நாள் வர எங்கள் சீவன்கள்
குறுகிப்போகுது.
நாங்கள் வாங்கிற சுவாசங்கள்
நிறைந்தொழியுது.

ங. வருஷந்தோறுஞ் சாவுக்கு
கிட்டி யிருக்கிறோம்,
எங்கும் ஏதாகிலும் குழிக்கு
பயண மாகிறோம்.

ச. அளவில்லாத களிப்பு,
அளவில்லாத நோய்,
மரணம் அடைபவர்க்கு,
அப்பொழுதாகுமோ?

ரு. மோசங்கள் நீக்கும் படிக்கு,
எங்களை எழுப்பும்.
மரணம் விழிப்போருக்கு,
மோட்சத்தை திறக்கும்.

288. ௨௱௮௰௮-ம். கீதம். P. M.

(க-ம். பங்கு.)

*“Lord make me to know mine end, &c.”*

Ps. xxxix. 4.

க. நாள்போம் என் சாவு வேளைச் சேரும்,
இதெத்தனை சமீபமோ?
என் சீவ ஓட்டம் நிறைவேறும்
அவஸ்தை எப்போ காணுதோ?
ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனாகக் கர்த்தரோ!

௨. நான் காலமே சுகமானாலும்,
ராச்சேருமுன் வேறாகலாம்;
என் காலை எங்கேநான் வைத்தாலும்,
என் பிராணனுக்கு மோசமாம்.
ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனாகக் கர்த்தரோ.

௩. குணப்பட என் தாமதிப்பேன்?
இப்போ ரட்சிப்பைப் பற்றுவேன்,
தினம் என் முடிவைச் சிந்திப்பேன்,
என் தீபத்தை நான் சோதிப்பேன்.
ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனாகக் கர்த்தரோ!

௪. நான் பயண முஸ்திப்பாய் நித்தம்
இருந்துகோண்டேப்போதைக்கும்
கர்த்தாவே உம்முடைய சித்தம்

என்றச்சமற்றுச் சொல்லவும்
ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனாகக் கர்த்தரோ.

ரு. விண் எனக்கு தேன்போல் ருசித்து
மண் பிச்சைப்போல் கக்கவும்
மயக்கங் கண்டால் நீர் நேரிட்டு
என் நெஞ்சையுயர இழும்
ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனாகக் கர்த்தரோ.

(உ-ம். பங்கு.) P. M.

க. ஆ! சுவாமி கிறிஸ்தின் நீதியாலே
என் பாவமுக்கை மூடுமேன்
நான் அதை விசுவாசத்தாலே
உடுத்துச்சுத்தமாகிறேன்
ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனாகக் கர்த்தரோ.

உ. ஆம்! அவர் காயங்கள் அடியேன்
சுகப்படும் அடைக்கலம்;
மரித்தோர் அவர் நான் மரியேன்
சரீர சாவோ பாக்கியம்
ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனாகக் கர்த்தரோ.

ங. என் சாவு ரட்சகனை விட்டு
அடியேனைப்பிரிக்காதே
நான் அவர் பக்கத்தில் கையிட்டு
என் சுவாமி யென்று சொல்வேனே;

ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனுகக் கர்த்தரோ.

௪. என் ஞானஸ்நானத்தில் முன் தானும்
நான் ஏசுவை யணிந்தவன்
இந்நாளுந் தெய்வ கடாட்சங் காணும்
நானும்முடைய புத்திரன்
ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனுகக் கர்த்தரோ.

௫. நான் அவர் மாமிசத்தையுண்டு
நான் அவர் ரத்தஞ் சாப்பிட்டேன்
நான் உமதன்பைப் பெற்றிருந்து
அவருக்குள் தரிக்கிறேன்,
ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனுகக் கர்த்தரோ.

௬. என் சீவன் இன்றைக்குப் போனுலும்
என் மீட்பரால் நான் பாக்கியன்
என் காலம் நாளைக்கு வந்தாலும்
நான் அவர்க்குள்ளிருப்பவன்
ஆ! கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனுகக் கர்த்தரோ.

எ. ஆனுல் நீர் என்னை இங்கே வைக்கும்
நாள் மட்டும் என்னை யுமக்கே
சரிப்போனுப்போல என்றேன்றைக்கும்

நடத்தும் கடைசியிலே,
நான் கிறிஸ்துவின் ஒதுக்கிலே
மரிப்பேனாகக் கர்த்தரோ!

289. உ௱அகூ-ம். கீதம் L. M.

*Confidence in death.*

(க-ம். பங்கு.)

க. நாள் போகுது: போகட்டுமேன்:
அநித்தியத்தை நான் நாடேன்:
நான் பற்றிக் கொள்ளும் நித்திய
பொருள் என் பரம பிதா.

உ. என் ஆவிக்கென்னெருக்கமும்,
என் நோவும் பாரமாகியும்,
பரகதியின் நினைவு
மா ஆறுதலுண்டாக்குது.

ங. இக்கட்டால் என் மனதிலே
வியாகுல முண்டாகச்சே,
அதென்னை மோட்ச ஊருக்கு
நேரோ நடக்க ஏவுது.

(உ-ம். பங்கு.) L. M.

*A funeral Hymn.*

க. ஓர் நேசன் சென்று போகையில்
நான்துக்கப்பட்டும் மோட்சத்தில்
நானும் இனிப்பிரவேசிப்பேன்,
என்றென்னை யாற்றித் தேற்றுவேன்.

௨. சவங்கள் கல்லறைகளில்
இக்கட்டும் நோவுமன்றியில்
கிடக்கும், நானும் அப்படி
கிடந்து தூங்குவேனினி.

௩. எத்துன்பத்துக்கும் நீங்கலாய்
என் ஆவி ஏசு வசமாய்
இருக்கும், என் எலும்புக்கும்
புது உயிர்த் தரப்படும்.

(௩-ம். பங்கு.)    L. M.

௧. என் சாவில்தான் என் செல்வமும்
அளவில்லா மகிழ்ச்சியும்
துவக்குது : புவியை நான்
விடும்போதே நான் மோட்சவான்.

௨. அப்போ பிரிந்த ஆத்துமம்,
நற்றூதராலே பாக்கியம்
நிறைந்த பரதீசுக்கு
கொண்டுபோகப்படுகுது.

௩. அத்தால் நல் மாறுதலுண்டே
என் ஆவிக்கு அக்கணமே
கர்த்தாவைப்பார்க்கும் மேன்மைக்கு
வழிதிறந்து போகுது.

௪. அவர்க்கும் ஆட்டுக்குட்டிக்கும்
எல்லாவணக்கத்தோடேயும்

அங்கே ஏராளவானவர்
துதிசேலுத்தி நிற்கிறவர்.

(௪-ம். பங்கு.) L. M.

க. என் ஆவியில் அப்பரம
இஸ்தோத்திரத்தைக் கேட்கிற
நான் இந்த லோகத்தை இனி
இச்சித்துக் கோள்வதேப்படி ?

உ. என் மீட்பணை என் ஆவியால்
நான் பற்றிக்கோண்டபடியால்,
இப்பூமியின் நலம் போலம்
எல்லாம் பின்ஞன காரியம்.

௩. அங்கே சேர்ந்தோரின் பாக்கியம்
மா உறுதி, மா பத்திரம்,
பரத்தின் நன்மை என்றைக்கும்
இருக்கும் இன்பத்தைத் தரும்.

௪. மோட்சானந்தத்தின் ஒளிவு
அங்கே வந்தேறிஞேனுக்கு
மா ஆச்சரிய அழகும்
நேற்றியுமாய் பிரகாசிக்கும்.

(ரு-ம். பங்கு.) L. M.

க. ஆதிமுதல் பரகதி
யடைந்தவர்களோடினி

நான் அங்கே வாழ்வதேனக்கு
மா இன்பமாயிருக்குது.

௨. வெண்வஸ்திர சிங்காரத்தை
தரித்த மோட்சவான்களை,
நான் சேர்ந்து அவர்களுடன்
வாசம் பண்ண மா பாக்கியன்.

௩. நான் தீர்க்கதரிசிகளும்
மகாத்துமாக்கள் யாவரும்
பெரிய மகிமையுடன்
இருக்கும் வாழ்வைப் பார்ப்பவன்.

௪. நானும் அவர்களோடினி
தேய்வாட்டுக்குட்டிக்குத் துதி
செலுத்தப்போவேன் எனக்கும்
அப்பாக்கியம் அகப்படும்.

௫. இச்சிக்கப்பட்ட சீவனே!
என் ஆவி நாடுஞ் செல்வமே!
உன்னல் எப்போ நான் பூரிப்பேன்
எப்போ நான் அங்கே சேருவேன்?

290. ௨௱௯௰-ம். கீதம். P. M.

*The presence of Christ in death.*

LUKE XXIII. 39. 43.

௧. என்றைக்கும் அன்பாய் விளங்கும்
பொழுதே, ஒளி விடும்,

ஏசுவே! என்மேலிரங்கும்,
தூரமாயிராதேயும்.
நான் சந்தோஷத்துடனே
சென்றுபோக மீட்பரோ,
நீர் வழியும் நீர் துணையும்,
நீரோ என்னைவந்தழையும்.

௨. எனக்காக காயம் பட்ட
உம்மைப் பற்றிக் கோள்வேன்.
இப்படி நான் முடிவற்ற
சீவனில் பிரவேசிப்பேன்.
கள்ளன் போயிருக்கிற
பரதீசில் என்னுட
ஆவிக்கும் இடம் அளிப்பீர்
அங்கே என்னைப்பூரிப்பீர்,

௩. கண் வெளிச்சமுஞ் செவியும்
பேச்சும் அற்றுப்போயினும்,
என் வினவு சிதறியும்,
நீரோ என் வெளிச்சமும்
என் உயிரும், என்னுட
ஆதரவுமாகிய
கர்த்தர் மோட்ச வாசல் நீரோ
அங்கே சேர்த்துக் கொள்வீரோ.

௪. லாசருவின் மரணத்தில்
சம்பவித்த படியே
தேவதூதர் என்னிடத்தில்

வந்து நான் மரிக்கச்சே
நீங்கலாகும் ஆவியை
அங்கேதானே உம்மண்டை
கொண்டுபோக, நீர் அன்பாக
கட்டளை யிடுவீராக.

*அதின் வெற்றி.*

291. உ௱௯௧-ம். கீதம். 7's.

*Christ causes us to triumph in death.*

1. Cor. xv, 55.

௧. தோழனே! உன் சீவன் போம்,
நாம் எல்லாரும் மாளுவோம்.
சீவன் கொண்டு சாவுக்கே
யாவரும் தப்பார்களே.

௨. ஆதலால் உன் சாவிலே
உன் நடக்கை நெஞ்சிலே,
பாடில்லாமல் நன்மையை
காட்டத்தக்கதை நினை.

௩. கிறிஸ்து நாதர் மாத்திரம்
நோவை நீக்கும் பாத்திரம்
கிறிஸ்து நாதர் நீதிமான்
தப்பில்லாத தர்மவான்.

௪. உன்னுடைய நீதியே
எவ்விதமும் அற்பமே ;

கிறிஸ்தின் நீதி பூரணம்
அதுவே உன் வஸ்திரம்.

ரு. பாவஞ் சாபந் துஷ்டபேய்
கிறிஸ்தின் கீழ் விழுந்ததே ;
ஏசுவாலே மாத்திரம்,
தோன்றுமே மகா சயம்.

சு. இப்படி நீ சாவையே
நோக்க ஆ! உன் கூர் எங்கே?
என்றுரைத்து சாந்தமாய்
சாவைவென்று ஏறுவாய்.

292. ௨௱௯௰௨-ம். கீதம், L. M.

*Victory over death through Christ.*

Rom. viii. 38. 1 Cor. iii. 22.

க. என் ஏசுவே தயாபரா!
என் மீட்புக்காக, சகல
உபாதியோடுஞ் சாவையே
அனுபவித்த கர்த்தரோ!

௨. ஆரோக்கியமில்லாதோனாய்
கிடக்கிற இப்பாவிக்காய்
நீர் பட்ட வாதை நோவையும்
நினைத்திரங்கி அருளும்.

௩. என் பார்வையும் என் கேள்வியும்
என் வாயிலான சத்தமும்

எல்லாம் இல்லாமற் போகையில்
என் மூச்சொடுங்குங் காலத்தில்.

௪. அறிவில்லாமற் போவதால்
நரர் துணை வீணுகையால்
நீர் வந்து என் இக்கட்டிலே
சகாயராகும், ஏசுவே!

௫. என்னுத்துமாவை உமது
கை யேற்றுக் கொண்டால், நல்லது
மண் பாண்டம், முடிவாகிய
நாள்மட்டும், இளைப்பாறும்.

௬. தலையுடன் இணைந்தவன்
என்றைக்கும் பிரியாதவன்
நீர் எனக்காக மரித்ததே;
முத்திரையாகுந் திட்டமே.

293. ௨௱௯௰௩ம். கீதம். L. M.

*Longing for heaven, and prayer for help in death.*

௧. எப்போதழைப்பீர் ஏசுவே!
நான் உம்மை நித்தமும்
களிப்பாய் தரிசிக்கவே;
தயை ஈந்தருளும்.

௨. ஆ, பரிசுத்த ஆவியே!
நான் என்றுந் தப்பியே

போகாதபடி, என்னிலே
தரித்திருப்பீரோ.

௩. வழியை காட்டி எனது
பகைஞரோடே, நீர்தாம்
போர்செய்யும், அப்போதேனக்கு
உம்மாற் செயமுண்டாம்.

௪. கர்த்தாவே! உன்னதத்திலே,
நின்றுகடாட்சியும்
நற்சாவைத்தாரும் ஏசுவே!
வாழ்வேன் உம்மோடும்.

294. ௨௱௯௪-ம். கீதம். 7, 6.

"*This is not your rest.*" MICAH II. 10.

க. அகல், துன்மார்க்கமான
போல்லாத லோகமே!
என் ஆத்துமாவுக்கான
தலம் நீ யல்லவே.
கர்த்தாவின் மோட்சத்துக்கு
எதிர்கோண்டேகிறேன்.
என்னேச ஏசுவுக்கு
முன்பாக வாழுவேன்.

௨. என்னெஞ்சில் உம்முடைய
சுகுர்த நாமமே;
திகில் எல்லாமறைய,

விளங்கும் ஏசுவே!
அவஸ்தையில் நீர் கிட்ட
இருந்தேன்னேரமும்
மரத்திலே மரித்த
உருவைக்காண்பியும்.

௩. என் ஆவியை அன்பாக
எல்லாப் பயத்துக்கும்
விலக்கி, நேசமாக
கையேந்தி, ரட்சியும்.
இவ்வண்ணமாய் இறந்தால்,
இக்கட்டைத் தாங்குவேன்.
மோட்சானந்தத்தில் வந்தால்,
என்றுஞ் சந்தோஷிப்பேன்.

௪. ஆ! சீவ புத்தகத்தில்
என் பேரை வைத்திடும்:
உம்மாலுயர்ந்த வீட்டில்
நிறைந்த வாழ்வோடும்,
இருக்குங் கூட்டத்தோடே
என்னைச் சேரும், அடியேன்;
அங்கும்மை நல்லோரோடே
என்றைக்கும் போற்றுவேன்.

௫. என் காரியங்களுக்கு
உசாவு ஏசுவே!
அடியேன் ரோகத்துக்கு
நீர் பரியாரியே.

என்னேவையாற்றிவந்து
திடனே யருளும் :
நல் மரணத்தைத் தந்து
அன்பாக ரட்சியும்.

### ௨௱௯௰௫. ௨௱௯௫-ம். கீதம். S. M.

*"To die is gain."* PHIL. I. 21.

௧. என் சீவன் கிறிஸ்துவே,
அதாலே, எனக்கு
சாவு வந்தாலும் லாபமே,
நெஞ்சே மகிழ்ந்திரு.

௨. நான் ஏசு வசமாய்
சேர்ந்தென்றும் வாழவே,
மகா மகிழ்ச்சியுள்ளோனாய்,
பிரிந்து போவேனே.

௩. நான் செத்துப்போகும் நாள்
என் னேவின் முடிவு,
என் பாவந்தான், நன் மீட்பரால்
நிவிர்த்தி யாயிற்று.

௪. அப்பொழுதமைந்து
கலக்கமின்றியே,
நான் நித்திரையே அடைந்து
தூங்கட்டும் ஏசுவே !

௫. நான் உம்மைக் கெட்டியாய்
பிடித்தும்முடனே
என்றைக்கு மா மகிழ்ச்சியாய்,
வாழ்வேன் என் ஏசுவே!

296. ௨௱௯௰௬-ம் கீதம். 8, 7, 4.

*The same.*

க. கொஞ்சநாள் வருத்தப்பட்ட
பின்பு, மோட்ச வாழ்விலே
துன்பம் நோவும் யாவும் அற்ற
மேன்மையோடிருப்பேனே.
நெல் விளைந்த
பின் அறுப்புண்டாகுமே.

உ. மோட்ச வாழ்வு இங்கிராது
அங்கேதானிருக்குமே,
இங்கேதுன்பம் நீங்கிடாது
அங்கே வரும் இன்பமே
அங்கே என்றும்.
கர்த்தனை தரிசிப்பேன்.

௩. கிறிஸ்துவும் இடுக்கணையும்
அன்புடன் சகித்தாரோ
அதால் வருத்தத்தையும்
நான் சகிப்பேனாகவே.
அங்கென்றைக்கும்
மீட்பரோடு தங்குவேன்.

297. உாகூள-ம். கீதம். L. M.

*The same.*

க. மரணத்தாலே செல்வமும்,
அளவில்லாத மேன்மையும்,
எனக்குண்டாம், அதாலே நான்
மரிக்கும்போதே மோட்சவான்.

உ. அப்போது சேர்ந்த ஆத்துமம்,
தூதர்களோடே பாக்கியம்
நிறைந்த பரதீசிலே
களிக்கும் என்றும் கர்த்தரோ!

ஙூ. அதால் நல்லாறுதல் உண்டே,
அக்கணமேனதாவிக்கே,
கர்த்தாவைக்காணும் மேன்மையும்
இன்பமும் பேற, அருளும்.

ச. என் ஆவியில் அப்பரம
இஸ்தோத்திரத்தைக் கேட்கிற
நான் இந்த லோகத்தை இனி
இச்சித்துக்கோள்வதேப்படி?

ரு. அங்கே சேர்ந்தோரின் பாக்கியம்
மா உறுதி மா பத்திரம்,
பரத்தின் நன்மை என்றைக்கும்
இருக்கும் இன்பந் தந்திடும்.

௯. விரும்பப்பட்ட சீவனே!
என் ஆவி நாடும் செல்வமே!
உம்மால் எப்போதும் பூரிப்பேன்;
எப்போதும் அங்கே சேருவேன்.

298. ௨௱௯௰௮-ம். கீதம். C. M.

*Joy at death in view of heaven.* Ps. xvi. 10.

௧. பரத்திலே சுதந்திரம்
எனக்குண்டாமென்றே
அறிந்திருக்கையாற், பயம்
இல்லாமற் போயிற்றே.

௨. என்னில் பசாசு மூர்க்கமாய்
வந்தாலும், பாடுவேன் :
உலகம்யாவும் கோஷ்டமாய்
எழும்பினும், நிற்பேன்.

௩. விசாரம் யாவுங் கூட்டமாய்
என்னைப்பிடிக்கிலும்,
அம்மோட்சத்திற் சந்தோஷமாய்,
சேன்றல் எல்லாம் விழும்.

௪. இளைப்படைந்த ஆத்துமா
அங்குளள் வாழ்விலே ;
நீராடி, நித்தமும் மகா
மகிழ்ச்சிக்கொள்ளுமே.

299. ௨௱௯௯-ம். கீதம். 8, 7, 4.

*God the pilgrim's guide.*

க. ஆ! மகா உயர்ந்த நாதர் !
நிலையற்ற லோகத்தில்,
தவறின்றி நான் நடக்க
ஊக்கமற்ற நெஞ்சத்தில்,
நீர் பலத்தை
அளித்தென்றும் போஷியும்.

உ. நற்சுகத்தை ஈயும் ஊற்றை
நீர் திறந்து ஊற்றிடும்,
மேகந்தீபமாம் ஸ்தம்பத்தை
முன்னும் பின்னும் வைத்திடும்.
மா பலத்த
மீட்பரோ! திடன் கொடும்.

௩. யோர்தான் ஆற்றை நான் கடக்கும்
போது என்னைத் தேற்றிடும்,
சாவு நாசரோ நடத்தும்,
அக்கரையில் சேர்த்திடும்.
என்றென்றைக்கும்
உம்மைப்போற்றிப் பாடுவேன்.

300. ௩௱-ம். கீதம். P. M.

*Victory over death through Christ.* 1 Cor. xv. 57.

க. என்னை மீட்டுத்தாங்கிய
ஏசு சீவனுள்ளோராமே,

கிறிஸ்துவுக்குள்ளாகிய
நான், மகிழ்ந்திருக்கலாமே.
ஆதலாலே சாவுக்கே
நான் கலங்கமாட்டேனே.

௨. ரட்சகர் பிழைக்கிறார்:
நான் அவருடனிருந்து,
வாழ்வன், சாவு நீக்குவார்.
நான் பயங்கொள்ளாதிருந்து,
சவுக்கியமாயிருக்கலாம்,
இன்பமாகப் பாடலாம்.

௩. நம்பிக்கைக் கயிற்றினால்
மீட்பரோடு கட்டப்பட்டேன்:
நேசமான பத்தியால்,
ஏசுவை யணைக்கக் கற்றேன்:
சாவால் நானும் அவரும்
வெவ்வேறாகோம், என்றைக்கும்.

௪. இங்கே நான் தவிக்கிறேன்,
அங்கே பூரிப்பை அடைவேன்.
மண்ணில் மண்ணாய்த் தங்கினேன்,
விண்ணில் விண்ணோனாய்க் களிப்பேன்.
தேக பண்புடைய நான்
அங்கே ஆவியங்கத்தான்.

௫. ஆதலால் துரிச்சையை
இப்போதே மிதித்துப் போடு.

நெஞ்சமே! நீ ஏசுவை,
சேரு என்றுங் கர்த்தரோடு
தங்கத்தேடவ்வாழ்வுக்கு
போகச் சாக்கிரதைப்படு.

உயிர்த்தெழுதல்.

**301.** ௩௱௧-ம். கீதம். P. M.

*Joy at death in prospect of the resurrection.*

க. மோட்சத்துக்குள்ளாகிய நல்லோரே,
நீங்கள் வெகு பாக்கியமுள்ளோரே;
செயங் கொண்டீர்கள்:
இவ்விக்கட்டுக்குப் புறம்பானீர்கள்.

உ. இம்மை சிறைச்சாலைக்குச் சமானம்;
உலகம் நோய்கள் நிரம்புந் தானம்,
புவியின் லாபம்.
வேலையோடே கூடும் மனஸ்தாபம்.

௩. நீங்களோவெனில் புதைக்கப்பட்டு,
உங்கள் மண்ணறைகளில் நோவற்று,
கிடக்கிறீர்கள்:
உங்கள் ஓய்வில் துயரப்படீர்கள்.

௪. கிறிஸ்து உங்கள் கண்ணீரைத் துடைத்தார்.
உங்களைப் பரகதிக்கழைத்தார்;
நரரின் காது
நீங்கள் கேட்கும் ஓசையைக் கேளாது.

௫. பரம இருப்பு எங்களுக்கும்
இதைப்பார்க்க வாசியா யிருக்கும் ;
இங்கே தவிப்பு,
அங்கே சேர்ந்தோமேயானுல் கெலிப்பு.

௬. கிறிஸ்துவே ! அடியாரை யழையும்
எங்களை ரட்சித்து அங்கே வையும்
சன்மார்க்கத்தார்கள்
அங்கே உம்மண்டையில் வாழுவார்கள்.

302. ௩௱௨-ம். கீதம்.

*The same.*

௧. நான் காலம் பண்ணும் நேரத்தில்
அடியேனைத் தற்காரும்,
என் ஏசுவே ! நான் போகையில்
நீரோ துணையாய் வாரும்.
என் ஆவியை என் முடிவில்
நீர் உம்முடைய கைகளில்
அன்பாக ஏந்திக் கொள்ளும்.

௨. என் பாவங்களின் பாரத்தால்
என் மனதென்னைக் குத்தி
வியாகுலப் படுத்தினுல்,
நீர்தான் கடன் செலுத்தி
அடைந்த மரணத்தையே
நினைத்துக்கொள்வேன் ஏசுவே,
அத்தால் மன்னிப்புண்டாமே.

௩. நான் உம்முடைய அவயவம்
என்றென் மனங்களிக்கும்,
அவஸ்தைக்குள்ளும் உம்மிடம்
என் ஆத்துமந் தரிக்கும்.
நான் செத்துஞ் சாகேன், ஏனென்றால்
நீர் எனக்காக மாண்டதால்
அனந்த வாழ்வடைவேன்.

௪. உயிர்த்தெழுந்தீர், ஆகையால்
குழியில் நான் தரியேன்,
பரத்துக்கேறினீர், அத்தால்
சந்தோஷமாய் அடியேன்
என் கண்ணை மூடலாமல்லோ?
நீர் எங்கே ஏறிப்போனீரோ
அங்கென்னையும் நீர் சேர்ப்பீர்.

௫. என் ஆத்துமத்தை ஏசுவின்
கரத்தில் ஒப்புவிப்பேன்,
நான் நித்திரை யடைந்த பின்
திரும்பவும் விழிப்பேன்.
என் மீட்பரானவர் அன்றே
வந்தென்னை மகிமையிலே
அழைத்துக்கொண்டு போவார்.

## ௭-ம் பிரிவு.

## மோட்சம்.

### அதின் ஆனந்தம்.

303. ௩௱௩-ம். கீதம் 8. 6's.

*"There is an hour of peaceful rest."*

க. லோக சஞ்சார ஏழைக்கே;
மா ஆறுதலுண்டாம்.
இக்கட்டை நீக்குந் தஞ்சமே
இருக்கும் ஏசு கிறிஸ்துவே!
அருளும் மோட்சமாம்.

உ. பாவத்தின் சூறைக்காற்றினால்
அடிக்கப்பட்டோர்க்கே,
சுகிர்த வீடிருக்கையால்,
அஞ்சாமல் யுத்தஞ் செய்வதால்,
கிடைக்கும் மோட்சமே.

௩. பூலோக ஆசாபாசத்தால்
உண்டாகும் மாயையே
மெய் விசுவாச நேசத்தால்
தெளிந்துபோம், என் ஏசுவால்
கிடைக்கும் மோட்சமே.

௪. மின் சதி கேடு வாதையும்
வதைக்கும் யாவுமாய்

மோதியடிக்கும் நாளிலும்
சுத்தாங்க பத்தர் யாருக்கும்
கிடைக்கும் மோட்சமா.

௫. ஆ! ஏசுவே! என் சோதியே!
என் சீவன் மீட்சியாம்,
உம்மில் அன்பாயிருக்கவே,
என்னெஞ்சில் வாசம் பண்ணுமே
இதே என் மோட்சமாம்.

௬. ஆனந்த அன்பாய் வாழுவேன்,
சஞ்சாரியாகையில்,
பின் வந்து உம்மைக் காணுவேன்,
கிரீடஞ் செங்கோல் பெறுவேன்,
என்றைக்கும் மோட்சத்தில்.

304. ௩௱௪-ம். கீதம். L. M.

*Glory of the saints in heaven.*

௧. பிதாவின் வலபக்கமாய்,
குமாரன் வீற்றிருக்கிறார்:
பரத்தின் சேனை ஓசையாய்,
மா ஆரம்பத்தோடே துதிப்பார்.

௨. தூதர்கள் சுத்தர் யாவரும்,
மா கோடாகோடி லக்கமாய்,
சிங்காசனத்தைச் சுற்றிலும்
வணங்குவார்கள், பணிவாய்.

௩. கர்த்தாவே ! நானும் மோட்சத்தில்
சேர்ந்தும்மை கண்டு, களிப்பேன் :
எப்போதும் வந்து சோதியில்
என்றைக்கும் உம்மைத் துதிப்பேன்.

௪. அச்சோதி சாயல் கீதமும்
அடைந்திருந்து பாடுவேன் :
பேரின்ப வாழ்விலென்றைக்கும்
களிப்புடன் வணங்குவேன்.

௫. நான் சஞ்சரிக்கும் லோகத்தில்
தியானம் ஆசை இதுவே :
பின் வந்தும்மோடே முத்தியில்
இருக்கச்செய்யும் ஏசுவே !

305. ௩௱௫-ம். கீதம். 7's.

"*What are these which are arrayed in whiterobes?*"

REV. VII. 13.

௧. வெண் வஸ்திரந் தரித்து,
சுடர் ஒளியுள்ளவர்கள்
தெய்வங் கிட்டிப் பூரித்து,
உயர்வானோரோவர்கள் ?
சிலுவையை யெடுத்து,
ஏசுவினிமித்தமே
சண்டை பண்ணிப் போறுத்து
நின்றோர், இவர்கள் தானே.

௩௱௫௮ மோட்சத்தைக் குறித்தது.

உ. மா துன்பத்திலிருந்து
வந்து, விசுவாசத்தால்
தேவ நீதி அணிந்து,
சுத்தமானோராதலால் ;
ஒளியாமல் கர்த்தனை
கிட்டி நின்று சேவிப்பார்
கர்த்தர் பார்த்துச்சுத்தனை
சேர்ந்து, ஆசீர்வதிப்பார்.

௩. இப்போ செயங்கொண்டோராய்
இனிச்சோதிக்கப்பட்டார்.
தீமை விலகினோராய்,
பசி தாகம் அறியார்.
மத்தியான உஷ்டணத்தால்,
இனித்தோய்ந்து போகார்.
நித்ய சௌக்கியம் பகலால்
என்றும் ஆனந்தமாவார்.

௪. தேவ ஆட்டுக்குட்டியும்
அவர்களை போஷித்து,
சீவ மரக்கனியும்
சீவ நீரும் அளித்து,
துக்கம் துன்பம் அழித்து
குறை நிறைவேற்றுவார் :
கண்ணீரையுந் துடைத்து,
அன்பினால் நிரப்புவார்.

306. ௩௱௬-ம். கீதம். 7's.

*Bliss of glorified saints.*

௧. கேளுந் தேவ வாக்கியம்,
வானத்தில் உண்டாவதாய்
என்றுமுள்ள பாக்கியம்
கர்த்தரின் பத்தர்களாய்
மரித்தோர்கள் அடைவார்,
தங்கள் வேலையை விட்டு
என்றும் இளைப்பாறுவார்,
என்று ஆவி சொன்னது.

௨. ஏசு போன ஸ்தலத்தை
சேர்ந்தவர்கள் பூமியில்,
ஏசுவின் நற்கருணை
அடைந்தார்கள் மனதில்,
நீதி பாவ மன்னிப்பு
பரிசுத்தம் இவையே
இங்கே தயவால் பெற்று
வானோராக வாழ்ந்தாரே.

௩. ஏசுதாம் வாய் மலர்ந்து
சொல்லுவார் நன்றாய்ச் செய்தாய்
வாடா முடி அணிந்து
நம்மோடென்றும் ஆளுவாய்,
வானோர் கேட்டு அவனை
வாழச்சொல்லிப் பாடுவார்,
அவன் முடி மகிமை
அவன் சோதி தேவனார்.

## அ-ம் பிரிவு.

## நரகம்.

### அதின் அனந்தம்.

307. நூஎ-ம். கீதம். L. M.

"*The door was shut.* MAT. XXV. 10.
LUKE XIII. 25.

க. ஆ, ஐயையோ! என்னெஞ்சமே!
விண்வாசல் பூட்டப்பட்டதே.
மறுதலித்தாய் ஏசுவை,
ஐயோ! ஐயோ! மா சோதனை.

உ. இனிச் சகாயமில்லையே!
எரிந்தெரிந்து தீயிலே
நானே பட்டாலுஞ் சகிப்பேன்.
என் உறவர்கள் வந்ததேன்?

ந. நீதான், நீதானே ஒவ்வொன்றாய்
சொல்வார்களே, மகா கசப்பாய்.
விரோதம், பகை, கோபமும்,
சாதித்துக்கொள்வார், என்றைக்கும்.

ச. என்தோழனே! என்தோழனே!
பசாசோடும் இத்தீயிலே
நான் விழுவ தறிந்தையோ!
ஏன்சொல்லவில்லை? ஐயையோ!

ரு. அறிந்தாயே! அறிந்தாயே!
என்னேசனல்ல அல்லவே!

ஆ, துரோகி ! துரோகி ! என்றுமாய்
சாபங்கொண்டேன், உன்வழியாய்.

௬. அண்ணா ! அண்ணா ! நான் உன்னையே
நேசித்து நம்பி கொண்டேனே ;
பசாசு, பேய், தீ, இந்த நோ,
எந்நேரமும் முடியாதோ ?

௭. முடியாதே ? ஐயோ ! ஐயோ !
சபிக்கப்பட்டோம் அல்லவோ ?
சிற்றின்ப விலையாகவே,
நம்மாத்துமாவை விற்றோமே.

௮. பிதா மாதாக்கள் பிள்ளையும்,
கூடப்பிறந்த எல்லோரும்
ஒருவரோடொருவராய்
குற்றஞ்சொல்வார்கள் கோபமாய்.

௯. ஆ, பாவி ! கேள் ஏன் கெடுவாய் ?
உன் இனஞ் சனங் கோடிதாய்,
நரகத்தீயிற் படுவார் :
அறிந்த நீ திகைத்துப்பார்.

308.　　௩௱௮-ம். கீதம்.　　L. M

*The same.*

௧. நரகமென்ற சொல்லையே
நினைக்க நெஞ்சம் எங்குமே,

அது தீயுங் கந்தகமும்
எரியும் நித்திய பாதாளம்.

௨. பசாசும் அதின் தூதரும்,
பத்தியில்லாத மாந்தரும்,
அதில் விழுந்தழுந்துவார்,
அக்கினிக்கிரையாய்ப் போவார்.

௩. நூருத சுவாலை பூச்சியும்,
கர்த்தாவின் கோபஞ் சாபமும்,
சொல்லுக்கெட்டாத விதமாய்
வாதைப்படுத்தும் நித்தமாய்.

௪. அங்கே தீயோர் பற்கடித்து
ஐயோ! ஐயோ! வென்றழுது
புலம்பி நித்த தீயிலே,
கரைந்தெரிந்துஞ் சாகாதே.

௫. ஓர் சொட்டு நீர் கிடையாது,
நாக்கை நனைக்கக்கூடாது:
மா! கோடாகோடி காலமாய்
பட்டாலும் படும் புதிசாய்.

௬. ஆ, ஐயையோ! இச்சாவை யார்
பொறுத்துத் தாங்கிக் கொள்ளுவார்?
கர்த்தாவே! நானும் நரகில்
போகாமல் சேரும் மோட்சத்தில்.

கூ-ம். பிரிவு.

# வேத வாக்கியம்.

அதின் மேன்மை.

309. ௩௱௯-ம். கீதம். L. M.

*The Holy Scriptures*, Ps. XIX. 10.

க. வானப்பிதாவே! உமது
அருளால்வந்த வேதமே,
பூரணமுள்ளதாயிற்று;
அதால் ஆன்மா சீராகுமே.

உ. தேவருளான வாக்கியம்,
சத்தியஞ் சுத்தமானதே:
உமது கற்பனைகளும்
மிகுந்த செம்மையானதே.

௩. கர்த்தாவே! நின் நியாயங்கள்,
நன் நீதி, சுத்தம், மேன்மையே,
தங்கத்தைப்பார்க்க, அவைகள்
விரும்பப்படத் தக்கதே.

௪. அவைகளாலே மனிதர்
இருளை நீங்கி ஞானத்தில்
வந்தும்மை கண்டு களிப்பர்,
என்றைக்குமுள்ள மோட்சத்தில்.

௫. இவ்வேதத்தை எத்தினமும்
படித்து, ஓதி, உமக்கே,
என்னெஞ்சத்தைப் படைக்கவும்,
கடாட்சஞ்செய்யுங், கர்த்தரோ!

310. ௩௱௰-ம். கீதம். C. M.

*Praise for the Holy Scriptures.*

௧. சத்தியவேதம் முழுதும்
நமக்குண்டாயிற்றே,
அதற்கு நாம் இஸ்தோத்திரம்
செலுத்த நியாயமே.

௨. நம்மாத்துமாவுக்கதினல்
வெளிச்சந்தோன்றுமே,
அதாலே யன்றி எங்களால்
இருட்டு நீங்காதே.

௩. அதை நாம் சாந்த விதமாய்
ஆராய்ந்து வாசித்தால்,
அப்போது கர்த்தர் தயவாய்
தமது ஆவியால்.

௪. அதின் மெய்யான பொருளை
விளங்கப்பண்ணுவார்,
அதோடே புத்தி ஞானத்தை
நமக்கு அருள்வார்.

௫. கர்த்தாவே உமதாவியை
என் மேலே ஊற்றிடும்,
வேதத்துக்கேற்றதாய் என்னை
நடக்க அருளும்.

311.　　ஙாயக-ம். கீதம்.　　C. M.

*The same.*

க. தேவாவியால் இரக்கமாய்
உண்டானவேதமே,
உயர்ந்தஞான முள்ளதாய்
நமக்குண்டாயிற்றே.

உ. அதில் பிறந்த போதனை
விளக்கைப்போலவே,
கதிக்குப்போகும் மார்க்கத்தை
விளங்கக்காட்டுமே.

ங. மேலிந்துபோன நெஞ்சத்தில்,
மிகுந்த ஆறுதல்
கண்ணீர் உகுக்கும் பள்ளத்தில்
அதாலுண்டாகுமே.

ச. இருள் நிறைந்தப்பூமில்
அதே நடத்துமே,
பரத்தைநோக்கிப் போகையில்
வெள்ளியைப்போலாமே.

ரு. அதைக் கர்த்தர் கொடுத்ததே
மகா அன்பாயிற்று,
அதைக்குறித்தேன்னெஞ்சமே
சந்தோஷமாயிரு.

312. ௩௱௰௨-ம். கீதம். P. M.

*The word of God the Christian's guide and delight* Ps. I.

௧. பாதகரின் தீவினைக்கும்,
பாவிகளின் பாதைக்கும்,
துர்ச்சனரின் தோழமைக்கும்,
மார்க்கத்துக்கும் மிகவும்
தூரமாகிக், கர்த்தரை
தேடித்தன் இதயத்தை
அவருக்கோப்புக் கொடுத்தோன்,
என்றும் பாக்கியம் பெருத்தோன்.

௨. ஆம் கர்த்தர் அன்பாகத்தந்து
போதிவிக்கும் வார்த்தையை,
வாஞ்சையாய் ஆராய்ந்து வந்து,
ராவும் பகலுமதை
யோசித்து உட்கொள்பவன்
மிகுதியும் பாக்கியன்.
அவன் ஆவி என்றென்றைக்கும்
அம்மன்னுவினுற் பிழைக்கும்.

௩. அவன் ஆற்றுக்காலிடத்தில்
நடப்பட்டு, தன்னுட
நற்கனியைத் தருணத்தில்
தந்து புஷ்டியாகிற
நல் மரத்துக்கொத்தவன்;
அவன் நல்ல யோக்கியன்;

அவன் செய்கை நிலைநிற்கும் ;
அது நன்மையாய்ப் பலிக்கும்.

ச. ஆனால் பாவ மனிதர்கள்
காற்றில் ஓடிப்போம் பதர் ;
நியாயத்தீர்ப்பிலே அவர்கள்
தள்ளப்பட்டுப் போவார்கள் :
நீதியருட வழி
கர்த்தருக்குப் பிறிதி
அது ரட்சிப்பாய் முடியும்
துஷ்டமார்க்மோ அழியும்.

## 313. ௩௱௰௩-ம். கீதம் P. M.

*The Holy Scriptures.*

க. கர்த்தாவே ! நாங்கள் நெஞ்சத்தில்
மெய்ஞானமற்ற மாந்தர்.
நற்புத்தியைத் தராவிடில்,
எப்போதும் புத்தியீனர்.
உம்மால் உண்டான வேதமும்,
அதோடே உமதாவியும்,
நற்சிந்தை காட்டவேண்டும்.

உ. வேதத்துக்காகத்தோத்திரம்
உமக்குண்டாவதாக.
தேய்வீகவார்த்தையைத் தினம்
எல்லாரும் பத்தியாக,
தியானம்பண்ணி, யோசித்து
கைக்கோள்ள, நீர் கடாட்சித்து,
நல்லாவியைச் செலுத்தும்.

௩௱௩ வேதவாக்கியத்தைக்குறித்தது.

௩. பிதாவே! எங்கும் உமது
நல்வார்த்தைச் செல்வதாக:
ஏசுவே! நீர் காட்டிய
வகையில் போவோமாக:
தேவாவி எங்கள் உள்ளத்தில்
இரங்கி, வார்த்தையால் அதில்
நற்சீரைச் செய்வாராக.

314. ௩௱௰௪-ம். கீதம். L. M.

*The word of God neglected through worldliness.*

௧. பிதாவே! கிறிஸ்தின் வேதத்தை
கொடுத்த தேவ தயவை
நரர் நன்றாய் எண்ணார்களே,
அசட்டை செய்கிறார்களே.

௨. நல்வார்த்தையை அரோசித்து,
மண்ணும் பொருளைக் கும்பிட்டு,
பயம் இல்லாமல் மாந்தரோ
மதத்திருக்கிறார்களே.

௩. துன்மார்க்கமான வண்ணமாய்
பணத்தைச்சேர்க்க ஆசையாய்,
அநேகர் தங்கள் நெஞ்சத்தை
கெடுத்திருக்கிறார்களே.

௪. கர்த்தாவே! இந்த ஆசையை
விலக்கி, லோகத்தார்களை
நெறிப்படுத்தி ரட்சியும்,
நீர் பட்டசாவைச்சிந்தியும்.

## ൰-ம். பிரிவு.

## சபையைக்குறித்தது.

### அதின் ஐக்கியம்.

315. ௩௱൰௫-ம். கீதம். 7's.

*Prayer for the diffusion of benevolence.*

க. ஆ! இவ்வையகத்திலே,
நேசங் குறைவாயிற்றே,
தன் உயிரைப்போல ஆர்?
மற்றவர்க்கிரங்குவார்.

உ. நரர்க்கு ஐக்கியமும்
அன்பும் இல்லை யாவனும்
தன் சுகத்தைப் பார்க்கிறான்,
அன்னியனைச்சிந்தியான்.

௩. மீட்பரோ, இக்குணத்தை
நீக்கிப் பிறர் நன்மையை
சுய நயம் பார்க்கிலும்
தேடும் நேசத்தைக் கோடும்.

௪. மெய்ம்மையுள்ளதாகிய
வேதம் மாட்சிமைப்பட
இந்தவேண்டுதலையே
அன்பாய்க் கேளுங் கர்த்தரோ.

316. ௩௱൰௬-ம். கீதம். 7's.

*Brotherly love.*

க. மேய்ப்பரோ! நீர் கிருபை
செய்து சிதறுண்டதை

மந்தையாக்கி யாவையும்
சேர்த்தணைத்துக்கொண்டிரும்.

உ. எங்கள் நெஞ்சில் சகல
நற்குணங்கள் பெருக
தேவ அன்பை யதிலே
ஊற்றும் ஏசுகிறிஸ்துவே!

ஙா. நீரோ நெஞ்சை நெஞ்சுடன்
கட்டி, நேசத்தின் பெலன்
எங்கும் எந்தநாளிலும்
தோன்றக் கட்டளையிடும்.

ச. மூன்றென்றாகிய பிதா!
சுதன் ஆவி எல்லா
நாளும் ஒருமைப்படும்
போல், இம்மந்தையாக்கிடும்.

*அதின் விருத்தி.*

317. ஙா௰எ-ம். கீதம். L. M.

*"And I if I be lifted up,"* &c. JOHN XII. 32.

க. இயேசுவே! நீர் வானத்தில்
உயர்த்தப்பட்டிருக்கையில்,
எல்லாரையும் உம் பக்கமே
இழுத்துக்கொள்வேனென்றீரோ.

உ. என் சித்தத்தை யிழுக்கையில்,
என் ஆசை இந்த லோகத்தில்,
உள்ளானதை யரோசிக்கும்
அனந்த நன்மையிற்படும்.

௩. தராதலத்தில் உம்முடன்
உபத்திரவப்படாதவன்
உம்மோடு விண்ணில் வாழ்ந்திரான்
சகிப்பவன் சந்தோஷிப்பான்.

௪. மகா தலத்தில் தேவரீர்
இருப்பிட முண்டாக்கினீர் ;
அங்கே வசிக்கும் நீதியர்
இக்கட்டும் நோவுமற்றவர்.

௫. பிதாவின் வலப்பக்கத்தில்
நீர் ஆண்டுகொண்டிருக்கையில்
இங்கும்மை தேடினோர்க்கும், நீர்
சமீபமா யிருக்கிறீர்.

௬. நரர்களே! கீழானதை
வெறுத்துத் தேவவார்த்தையை
படித்து ஏற்றுக்கொள்ளுங்கள்
பரத்திற் பங்கடையுங்கள்.

318. ௩௱௰௮-ம். கீதம். L. M.

*Effusion of the Spirit on the day of Pentecost.*

௧. இரட்சகர் எழுந்த பின்,
தேவாவி சீஷர் நெஞ்சத்தில்
பிரவேசமான நாள் மகா
பிரகாசமான தல்லவா ?

௨. அப்போது தேவ ஈவுகள்
மா மேன்மையான திராணிகள்

அவர்களுக்குண்டாயின,
அவை மற்றோர்க்குந் தோன்றின.

ங. அப்போதனேகம் பேர்களே
மெய்யானதைக் கண்டார்களே;
கர்த்தர் சகித்த சாவுக்கு
உண்டான ஏது தோன்றிற்று.

ச. தம்மில் இருந்த குற்றத்தை
உணர்ந்து நின்ற மா சபை
ரட்சிக்கப்பட வேண்டுமே
என்னத்தைச் செய்வோமென்றதே.

ரு. அதற்கு சொன்னவார்த்தையை
அவர்கள் கேட்டு தீமையை
அகற்றி நல்ல மீட்பர்மேல்
நம்பிக்கையை வைத்தார்களே.

சு. கர்த்தாவே, அந்த நாளிலே
நடந்ததற்கொப்பாகவே
இப்போதநேகம் பேர்களும்
மனந்திரும்பச் செய்திடும்.

319. ஙாயகூ-ம். கீதம். 7's.

*Desiring the spread of the Gospel.*

க. மா! அன்புள்ள ஏசுவே!
உம்முடையோர் பேரிலே
நீர் இரங்கி யாரையும்
சீர் திருத்தி ரட்சியும்.

௨. தேவரீர் செயங்கொண்டீர்
அஃதைக் கூறப்பண்ணினீர்:
மீட்கப்பட்ட யாருக்கும்
பேயின்மேற் செயங்கொடும்.

௩. எங்கும் மானிடர்களே
தங்கள் கேட்டைக்காணவே:
புத்தியைக்கட்டாட்சியும்,
கேட்டை நீக்கி ரட்சியும்.

௪. உமது விசேஷத்தை
அஃதாற்றேன்றுந்தயவை
மாந்தர் யாரும் பார்க்கவே
செய்யும் நல்ல மீட்பரே.

320. ௩௱௨௰-ம். கீதம். L. M.

*The same.*

௧. ஐயோ! அநேகம்பேர்களும்
இன்னேரமாம் வரையிலும்
தெய்வீக பாக்கியமற்றேராய்;
நடக்கிறர்களேகமாய்.

௨. கர்த்தாவே! யேழைமானிடர்
அலைந்திராமற் பாக்கியர்
ஒப்பாயிருக்கத்தேவரீர்;
அவர்களுக்கிரங்குவீர்.

௩. இரங்குவேனென்றே சொன்னீர்
அஃதிற்குஞ் சீவனை விட்டீர்

அநேகம்பேர்கள் உம்மையே ;
அறிந்தணைக்கவில்லையே.

௪. கொடுத்தவாக்குத்தத்தத்தை
முடித்து நீர் விசேஷத்தை
உலோகத்தாரெல்லாருக்கும்
அனுக்கிரகிக்குமட்டுக்கும்.

௫. நான் உம்மை நோக்கி விண்ணப்பம்
இடைவிடாமற் பண்ணுவேன் :
ஏசுவே ! எல்லாரையும்
இரட்சியும், இரட்சியும்.

321. ௩௱௨௧-ம். கீதம். P. M.

*"He shall reign for ever and ever."* Rev. xi. 15.

க. பூலோகத்தின் மீட்பர் சிங்காசனமேறி,
செங்கோலுஞ் செலுத்த, மெய்யாய் வருவார்;
இச்செய்தி இப்போதும் எங்கெங்குமாய்த்தேறி,
பூவெங்கும் வர்த்திக்கச், செய்வார்.

உ. தேசாதேசமாக அந்தந்தச் சனங்கள்,
இராசாக்கள், மா சந்தோஷமாய்,
ஒரேக்கூட்டமாகப் பணிந்து கொள்வார்கள்,
என் ஏசுவிடத்தில் அன்பாய்.

௩. பூலோகத்தார் யாரும் விண்ணோர்களைப்போலே
சுத்தாங்க வணக்கஞ் செலுத்திருப்பார்.
சங்கீதங்கள்பாடி, மகா களிப்போடே,
மோட்சானந்த சாயல் கொள்வார்.

௪. பூலோகத்தின் மீட்பர், சிங்காசனம் ஏறி,
செங்கோலுஞ் செலுத்த, மெய்யாய் வருவார்.
விண் மண் தலத்தோருங் கெம்பீரமாய்த்தேறி,
முன் பின் சேனையாய்ப் பணிவார்.

322. ௩௱௨௨-ம். கீதம். L. M.

*The reign of the Messiah.* Psalm lxxii.

௧. சூர்யன் தோன்றும் லோகம் எங்கும்
ஏசு, ஆண்டுகொள்வார் என்றும்,
அவர் ராச்யம் பரந்தோங்கி
நிலைநிற்கும், ஒழிவின்றி.

௨. சபை எல்லாம், அவர் மூலம்
செபம் பண்ணி, முடிசூட்டும்.
அவர் நாமம் என்னும் தூபம்,
காலை மாலை எழுந்திடும்.

௩. அன்பு பெற்ற சர்வ தேசர்,
போற்றுவார்கள் தெய்வநேசர்.
பாலர் தாமும் "வாழ்க" என்னும்
நமஸ்காரம் செய்வார், என்றும்.

௪. அவர் ஆள நிற்கும் இன்பம்
சிறைப்பட்டோர் தளை நீங்கும்.
இளைத்தோருக்குண்டாகும் சாந்தம்
குறைநீங்க, நிறைவாகும்.

௫. அவர் சோஸ்தம் செய்யும் இடம்
எங்கும், சாபம், சாவு நீங்கும்.

ஆதி தந்தை விட்ட இன்பம்,
அவர் மூலம் மீண்டு தோன்றும்.

சு. எங்கள் ராசஸ்துதிபாட,
யாரும், வாரும் நேசமாக.
போற்றவாரும், தூதர்யாரும் !
மாந்தருடன் பாட, வாரும்.

323. ௩௱உ௩-ம். கீதம். 8, 7, 4

*" O'er the gloomy hills of darkness."*

க. காரிருளால் மூடப்பட்ட
பர்வதங்கள் மேலே பார் !
வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட
சோதி தோன்றச் செய்கிறார் ;
அதற்காக
சாலவும் மகிழ்ச்சிகோள்.

உ. ஆ ! கர்த்தாவே ! இந்து தேசர்,
கல்வியற்ற காப்பிரிகள்,
பிர்மர், சீனர், யூதர், கிரேக்கர்,
தீவார், துஷ்டர், ஏழைகள்
மற்றெல்லாரும்
உம்மைப்போற்றச் செய்திடும்.

௩. கோல்கத்தாவில் பட்ட பாட்டை
கோண்டு மானிடர்களில்
அன்புவைத்து மா ரட்சிப்பை
செய்து, மோட்ச மார்க்கத்தில்
முன் நடந்து
மோட்சத்தைச் சம்பாதித்தீர்.

௪. அதை தேசத்தாரெல்லாரும்
காணச்செய்யுங் கர்த்தரே!
அந்தகாரமுள்ளயாரும்
அதால் சீர்கொள்வார்களே
நீர் சகித்த
சாவுக்கே அதேபலன்.

௫. இந்தக்காலம் லட்சணமான
பேர்கள் நன்மை சேர்ந்தது
உம்முடைய உண்மையான
அன்பினாலே ஆயிற்று
அதற்காக
உமக்கே ஸ்தோத்திரம்.

324. ௩௱௨௪-ம். கீதம் 7's. D.

*"A little cloud like a man's hand."*
1 KINGS XVIII. 44.

௧. கிருபையின் பொறியால்
சுவாலை எழுந்தோங்குது.
லோகம் கிறிஸ்துவின் அன்பால்
அனல் பற்றி வேகுது ;
அக்கினி போட வந்தார் :
சிலர் அதின் வெப்பத்தை,
நெஞ்சில் இப்போ உணர்வார் :
இது ஆவியின் செய்கை.

௨. சுவிசேஷம் ஆதியில்
கொஞ்சமாம் தோன்றினது
இப்போதே விஸ்தாரத்தில்

மிகுத்தோடி வெல்லுது;
பாவத்தின் அரண்களை,
செயமாய் இடிக்குது.
நரகவாயில்களை
நடுங்க அசைக்குது.

௩. இதைபார்த்து ஏசுவை!
மகிழ்ச்சியாய்த்தொழுங்கள்;
அவர் தேவ வார்த்தையே
தந்தாரோ யென்றெண்ணுங்கள்;
உலகத்தின் சிருஷ்டிகர்
சர்வ வல்லவராவார்:
ஏசுவே எங்கள் மீட்பர்!
ஏசு செய்ங் கொள்ளுவார்.

௪. மேகம் எழும்புகையில்
கைபோற் சிறிதான்து,
இப்போ நீண்டவானத்தில்
பரந்தேங்குங்காணுது:
பெருமழை பூமியில்
கர்த்தர் வருஷிக்கிறார்:
பூர்ணமாய்ச் சீக்கிரத்தில்
அன்பின் ஆவி யூற்றுவார்.

325. ௩௱௨௫-ம். கீதம். P. M.

"*In thy majesty ride prosperously.*" Ps. XLV. 4.

க. பலத்த தேவ வார்த்தையே
எல்லா இடமுமாக,

ரட்சிப்பின் மா விசேஷமே
எல்லாருக்குள்ளுமாக,
சிந்திக்கப்பண்ணும், ஏசுவே!
எல்லாரையும் ரட்சிக்கவே
இவ்வுலகிற் பிறந்தீர்.

௨. கர்த்தாவே! போய் மதங்களை
இரக்கமாய் அழித்து,
நரருக்கு மெய்ஞ் ஞானத்தை
அன்பாகவே கொடுத்து,
எல்லாவகைத் துன்மார்க்கமும்
ஒழிந்துபோகச் செய்திடும்:
அதற்குப் பாடுப்பட்டீர்.

௩. கர்த்தாவே! எந்த தேசமும்
உமக்குள்ளாவதாக.
எல்லாவகைச் சனங்களும்
துதித்தல் செய்வதாக.
நீர் மாத்திரம் மெய்த்தேவனே!
புகழ்ச்சி உமக்கேற்றதே
அதை நீர் வாங்கிக்கொள்க.

326. ௩௱௨௰௬-ம். கீதம். L. M.

*The Jews.*

௧. மெய் விசுவாசமுள்ளோரே,
மெய் வேதம் பெற்றுக்கொண்டோரே,
பூர்வீகத்தில் ஏகோவாதாம்
தெரிந்துகொண்ட சனமாம்.

௨. என்றாலும் வந்த ஏசுவை
வெறுத்துக்கொண்ட பாவத்தை
செய்ததினால் எத்திக்கிலும்
சிதறிப்போனார் யாவரும்.

௩. போனாலும், கர்த்தர் மீளவும்,
உடன்படிக்கைப்படியும்,
யாக்கோபின் வமிசத்தாரோ ;
திரும்புவார்கள் என்றாரோ !

௪. திரண்ட கூட்டம் கூட்டமாய்,
பற்பல தேசவழியாய்,
சீயோனில் வந்து சேருவார்,
கர்த்தாவின் பத்தராகுவார்.

௫. முன் அறையுண்ட ஏசுதாம்
மேசியாவென்று, கண்டோமாம் ;
மகா களிபபாய்ச் சொல்லுவார் :
நம்பிக்கையோடும் பணிவார்.

௬. பற்பலதேசத்தார்களும்
இச்செய்தி கண்டு கூடவும்
ஒன்றாகி, வருவார்களே !
மா கோடாகோடி சனமே.

௭. விழி ! விழி ! சீயோனைப்பார் :
விழுந்த மதில் கட்டுவார் :
கிரேக்கர், யூதர், ஏகமாய்
செய்வார்களே விவேகமாய்.

௮. கர்த்தாவின் மேன்மை, சோதியும்,
லோகத்தை முற்றும் நிறைக்கும்
எங்கெங்குமுள்ள தேசத்தார்,
தேவாபிஷேகம் பெறுவார்.

௯. ஆ! களிகூர்ந்து, பாடுங்கள்.
சீயோனில் வாழ, வாருங்கள்
பூலோகம் வானம் புதிதாய்
சிஷ்டிக்கப்படுஞ், சுத்தமாய்

327. ௩௱௨௭-ம். கீதம். L. M.

"*All nations shall call him blessed.*" Ps. LXXII. 17.

௧. வெற்றிச்சிறந்த சபையும்,
மெய் விசுவாச முள்ளோரும்,
எல்லாருங் கொண்டு களிப்பை
துதியுங்கள் குமாரனை!

௨. இராசாக்கட்கிராசாவே!
பூலோகப் பாவப்பலியை,
மரித்தெழுந்த தேவரீர்
செங்கோல் செலுத்தி, ஆளுவீர்

௩. பூமியிலுள்ள தேசத்தார்
அந்தந்தப்பாஷை பேசுவார்:
எல்லாரையும் ஒன்றாகவே,
இழுத்துக்கொள்வோமென்றீரே.

௪. கிரேக்கர், யூதர், தீவார்கள்
இராயர், குடிசனங்கள.

படித்தோர், மூடர், யாவரும்,
வந்தும்மைப்போற்ற, செய்திடும்.

௫. பொன், வெள்ளி, முத்து, மாணிக்கம்,
பூமியின் மேன்மை யாவையும்
காணிக்கையாக, உமக்கே,
செலுத்தப்படும். ஏசுவே !

௬. சிஷ்டிக்கப்பட்ட உலகம்
கர்த்தாவின் சுத்த ஆலயம்
எங்கெங்குமுள்ள தேசத்தார்
குமாரனை வணங்குவார்.

௭. வானங்களே ! பூலோகமே !
சுத்த்ராங்கக் களிப்புடனே,
பிதாக்குமாரன் ஆவிக்கு
துதிசெய்யுங்கள், என்றைக்கும்.

௰௪-ம் பிரிவு.

## தேவ சடங்குகள்.

### ஞானஸ்நானம்.

328. ௩௱௨௮-ம் கீதம். P. M.

*Baptismal engagement.*

௧. திரியேகரோ! தயாபரா !
தெய்வீக ஞானஸ்நானம்
முழுக்கால் எங்களைமகா
உயர்ந்த நிறைவான,

அன்போடு சுத்தமாக்கின,
இரத்தத்துக்கும், உன்னத
அருளுக்கும், புகழ்ச்சி.

௨. கர்த்தாவே! தேவரீரோடே
நான் இவ்விடத்திற் செய்த,
உடன்படிக்கை எனக்கே
எப்போது மேன்மையாக
இருப்பதற்கு, ஆவியை
கொடுத்துத், தேவ நன்மையை
என் ஞாபகத்தில் வையும்.

௩. உம்மோடு ஐய்க்கமாகவே,
இஸ்நானம் பெற்றேனென்று,
என்மேலே பாயுந் தீமையை
அகற்றிப்பேயைவென்று,
என் ஆவி, தேகம், யாவையும்,
கர்த்தாவே! உமக்கென்றைக்கும்
மெய்யாய்ப் படைப்பேனு?

௪. மிகுந்த ஈனத்தாலே நான்
விழுந்தால், நீர் நிறுத்தும்:
மென்மேலும், உம்மைப்போலத்தான்
நான் சுத்தனுகச் செய்யும்.
கர்த்தாவே! மோட்ச கதியில்
நான் சேரு மட்டும், நெஞ்சில்
இரக்கமாகத் தங்கும்.

329. ௩௱௨௯-ம். கீதம். P. M.

*The same.*

க. திரியேகரான உம்மையே!
நான் முழுப் பத்தியாக
பணிந்துமக்கேற்கவே
நடப்பேனென்பதாக,
இஸ்நானத்தில் அடியேன்
உடன் படிக்கைப்பண்ணினேன்:
இதை நினைப்பேனாக.

உ. பசாசை நான் தீர்மானமாய்,
என் மனசால் வெறுத்தேன்
என்றப்போதுமக்கு முன்பாய்,
நான் வார்த்தையைக்கொடுத்தேன்.
ஆ! அதின் தந்திரங்களை
நான் வெல்ல, என் இருதயத்தை
உமக்கே ஒப்புவிப்பேன்.

௩. பிதாக்குமாரன் ஆவியே!
நான் உம்மைப்பற்றிக்கொண்டு,
நான் அன்று தந்த வார்த்தைக்கே
இசைவாயே நடந்து
முடியப்பாவத்துக்கென்னில்
இடங்கொடாமல் மோட்சத்தில்
உம்மண்டைச் சேருவேனாக.

330.　　௩௱௩௰-ம். கீதம்.　　P. M.

*The nature of Baptism.*

க. மெய் ஞானஸ்நானம் எத்தனை
சுகிர்தத்தைக் கொடுக்கும் !
தேவாவி ஆத்துமாக்களை
அழுக்கில் நின்று இழுக்கும் :
தண்ணீர் அதற்குச் சாயலாய்
கர்த்தாவின் சொல்லுக்கேற்றதாய்
பொருளை நன்றாய்க்காட்டும்.

உ. தேவன்பினால் நிறைந்தோனாய்,
நீ ஞானஸ்நானங் கொள்ளு.
கிறிஸ்துவைப்பற்றிக் கொண்டோனாய்,
திரியேகனை நீ தொழு :
ஆவிக்கொடுக்கும் ஸ்நானமும்
மிகுந்த நன்மை அருளும்,
உன் பாவத்தை மன்னிப்பார் :

௩. இவ்வாறுதலுக்காகவே,
கர்த்தாவுக்குப் புகழ்ச்சி.
அதை நீ உண்மையாகவே,
கர்த்தாவுக்குச் செலுத்தி,
சன்மார்க்கத்தில் நிலைத்திரு.
அப்போது கர்த்தர் உனக்கு.
கிரீடத்தைக் கொடுப்பார்.

331. ருஙக-ம். கீதம். C. M.

*Baptism.*

க. இரட்சகர் உரைத்தது
போய் மாந்தர் யாருமே,
என் சீஷராகும்படிக்கு,
நற்புத்திசோல்வீரோ.

உ. விசுவாசமாகஸ்நானமே!
பெறுவோரெல்லாருக்கும்,
மெய்யாக மா இரட்சிப்பே
என்றைக்குமே வரும்.

ங. ரட்சிப்பின் சுவிசேஷத்தை
விசுவாசியாதவன்,
உரைகூடாதவேதனை
உட்கோள்ளப்படுவன்.

ச. கர்த்தாவே! உமதாவியை
அன்பாக தந்திடும்
அவராலே ஞானஸ்நானத்தை
எல்லாருக்குங் கோடும்.

332. ருஙஉ-ம். கீதம். L. M.

*Children brought to Jesus.*

க. குழந்தை என்னிடத்திலே
வரட்டும் என்றிரட்சகர்
உரைத்ததால் பெற்றோர்களே!
அவரிடத்தில் வாருங்கள்.

௨. குழைந்தகளுக்காகவும்
இரட்சகர் மரித்தாரே:
கைமாறில்லாத நன்மையும்
அவர்க்குண்டாக்கச் செய்தாரே!

௩. அன்புள்ள கிறிஸ்துநாதரே!
இப்பிள்ளையைக் கைக்கொண்டிரும்
இதற்கு நன்மை தோன்றவே
இதை அன்பாக ரட்சியும்.

333. ௩௩௩. கீதம். S. M.

*The same.*

௧. குழந்தை நாயனுர்
தம்மிடம் அழைத்து
தழுவி ஆசீர்வதித்தார்,
அன்புற அணைத்து.

௨. சேரட்டும் என்ருரே,
தடை செய்ய வேண்டாம்,
சுதந்திரம் பரத்திலே
இவைகளுக்குண்டாம்.

௩. ஆ, ஏசு இவைகள்
என்றைக்கும் உம்மோடும்
இருக்கச்செய்யும் கர்த்தரே
உமக்கே தோத்திரம்.

இராபோசனம்.

334. ௩௱௩௪-ம். கீதம். C. M.

*The Lord's supper.*

க. வாரும், சுத்த ஆவி! வாரும்!
நம்மை ஏவும்படி
அப்பாசம் இவையோடும்
தாரும், தெய்வ சத்தி

உ. விசுவாசப்பத்தருள்ளம்
அன்பூறத்துணையாய்,
இவ்விருந்து சித்தியாக்கும்,
யார்க்கும் ஆனந்தமாய்.

335. ௩௱௩௫-ம். கீதம். 8, 7, &4.

*The same.*

க. ஆத்துமாவே! உன்னைச்சோதி;
துக்கம் யாவையும் விடு;
மீட்பரினிடத்தில் ஓடி
சேரச் சாக்கிறதைப்படு;
கர்த்தர் உன்னை
பந்தியில் அழைக்கிறார்.

உ. இந்த போசனத்தின் மேலே
வாஞ்சையாயிருக்கிறேன்
மா மகா இம்மானுவேலே!
உம்மையே உட்கொள்ளுவேன்.
தேவரீரோ!
சீவ அப்பம் அல்லவோ?

௩. மாசில்லாத ரத்தத்தாலே,
என்னை அன்பாய் ரட்சித்தீர்.
அதை மா தயையினாலே
நெஞ்சத்துக்கு ஈகிறீர்
இந்த பானம்
என்னை என்றுங் காக்கவே.

௪. உம்முடைய சாவின் லாபம்
மாட்சிமை சிறந்தது,
என்னிடத்திலுள்ள சாபம்
நீங்குதற்கு ஏற்றது,
அப்பம்போல,
அதை நான் புசிக்கவே.

௫ நீருந்தேவ சொற்படிக்கு,
இங்கிரும் நல் நாதரோ!
இந்த பந்தி தேற்றலுக்கு
ஏதுவாயிருக்குமே.
தேவ அன்பை
என்னில் ஊற்றி ரட்சியும்.

336. ௩௱௩௬-ம். கீதம். 7. 6.

*The same.*

க. ஆ, ஏசுவே! உம்மாலே
நான் மீட்கப்பட்டேனே,
நீர் செய்த நீதியாலே,
நான் சுத்தமானேனே.

மிகுந்த கஸ்தியாலே,
என் குற்றத்தைத் தீர்த்தீர்.
நிறைந்த வாதையாலே,
நீர் என்னையும் மீட்டீர்.

உ. உம்மால் நான் என்றும் வாழ,
இப்போசனத்தில் நீர்
மிகுந்த பாவியான
என்னைச் சந்திக்கிறீர்.
அன்போடு என்னைச் சேர்த்து,
இரக்கமா யிரும்:
என்னுள்ள ஈனத்துக்கு
மா! பலனைக்கொடும்.

ரு. நீர் இன்னுமென்னிற் காணும்
பொல்லாங்கு யாவையும்,
அகற்றிப்போடவாரும்.
என்றைக்கும், ரட்சியும்.
நான் உம்மைப்பற்றிக்கொள்ள.
நீர் என்னை ஏவுமேன்.
மிகுந்த தாழ்மையுள்ள
மனமுண்டாக்குமே

ச. நல் மீட்பரே! உம்மோடே
நான் ஐக்கமாகவும்,
நாடோறும் வாஞ்சையோடே
உம்மில் நிலைக்கவும்,
மிகுந்த அன்பினாலே
துணைசெய்தே யிரும்

தெய்வீக அப்பத்தாலே
என் னெஞ்சைப்போஷியும்.

337. ௩௱௩௰-ம். கீதம். L. M.

*The same.*

௧. உலோகத்தாரின் பாவத்தை
அழித்து அன்பாய்ச் சீவனை
கொடுத்துச் சிலுவையிலே,
மரித்த தேவ மைந்தனே!

௨. எல்லாருக்கும் நீர் ரட்சகர்!
தவிப்புள்ளோருக்குத் தாரகர்!
நீர் நன்மருந்து என்னையும்
குணப்படுத்தி, ரட்சியும்.

௩. இப்பந்தியிலிருக்கிறேன.
என்னை அன்பாக நோக்குமேன்
அசுத்தமான யாவையும்
நிவர்த்தியாக்கி, ரட்சியும்.

௪. இகத்தில் வந்த அப்பமே!
நிறைந்த உண்மையாகவே.
உம்மைப் புசிக்கச்செய்திடும்.
என்னை அன்பாயுயிர்ப்பியும்.

௫. நான் சாகும்போதென் ஆவியை
நீர் சேர்த்துக்கொள்ளும், மோட்சத்தை
அடையச்செய்யும், கர்த்தரோ!
புகழ் உமக்குண்டாகவே.

338. ௩௱௩௮-ம். கீதம். C. M.

*The same.*

௧. உம்மாலேதான், என் ஏசுவே!
ரட்சிக்கப்படுவேன்.
உம்மாலேதான் பேரின்பத்தை,
அடைந்து களிப்பேன்.

௨. இப்பந்தியில் நீர் ஈவது,
ஞானத்திரவியம்.
இனி நான் பெற்றுக்கொள்வது
பரம போக்கிஷம்.

௩. இவ்வேஊ அடியாருக்கு
பூரணத்தைத் தந்தீர்.
சஞ்சலம் வரும்பொழுது
நீர் என்னைத்தேற்றுவீர்.

௪. பூமியில் தங்குமளவும்,
உம்மை நான் பற்றுவேன்
என் வேலைசெய்யும் பொழுது,
தினமுந் துதிப்பேன்.

௫. முடிவிலே நான் மரித்து,
உயிர்த்தெழும்புவேன்.
மெய்யான முத்தியடைந்து,
என்றைக்கும் வாழுவேன்.

339. ௩௩௯-ம். கீதம். L. M.

*Unworthiness to partake of the Lord's Supper.*

க. என் பாவத்தின நிவர்த்தியை
உண்டாக்க அன்பாய் சீவனை
கொடுத்து, சிலுவையிலே
மரித்த தேவசுதனே.

உ. அநேகபாவம் செய்தோனாய்
மா! நீசனும் ஏழையுமாய்
திருவிருந்துக்கு வரும்
அடியேனை தள்ளாதேயும்.

௩. உமக்கு வந்தோனாகவே
குணம் அளியும் ஏசுவே.
அசுத்தமான யாவையும்
நிவர்த்தியாக்கி அருளும்.

௪. இருண்ட நெஞ்சில் ஒளியும்
மெய் ஞான விசுவாசமும்
கொடுத்தென்பாவக்குணமே
அடங்கப்பண்ணும் கர்த்தரே.

340. ௩௪௰-ம். கீதம். L. M.

*The Lord's Supper instituted.*

க. நன்மேய்ப்பர் ஆடுகளுக்காய்
மரிக்கவந்து சாவிலே
கிடந்த நம்மைத்தயவாய்
நினைக்கும் அன்றிராவிலே.

௨. அன்பாகக்கையில் அப்பத்தை
எடுத்துப்பின்பு துதித்து
தமது சீஷர்கள் அதை
புசித்துக்கொள்ளும் படிக்கு.

௩. புசிக்க வாருங்கள் இது
உங்களுக்காய்ப் படைத்தது
பங்கிட்டதுமாம் எனது
சரீரமென்று சொல்லியும்.

௪. பிரகு பாத்திரத்தையும்
எடுத்துத் தந்தன்பாகவே
தம்மை நினைக்கயாவரும்
இதில் குடிப்பீரென்றுரே.

௫. ஆ, ஏசுவே உமக்கென்றும்
துதி உண்டாவதாகவே
இப்பந்தியாலே யாவரும்
பிழைத்துக் கொள்வோமாகவே.

341. ௩௱௪௰௧-ம். கீதம். S. M.

*Prayer at the Lord's table for steadfastness.*

க. நான் முழு ஆசையாய்
விருந்துக்கு வந்தேன்,
என் ஏசுக்கிறிஸ்துவே அன்பாய்
நீர் என்னை நோக்குமேன்.

உ. ஆ! என்னைத் தயவாய்
இப்போதுயிர்ப்பியும்,
நான் உம்மைச்சேர்ந்த சீஷனாய்
பின் சென்றேன்னேரமும்.

௩. உ று தி யு ட னே
முடியும் அளவும்
உம்மில் நிலைப்பேனாகவே,
என்னைக்காத்தருளும்.

342.    ௩௱௪௨-ம். கீ த ம்.    S. M.

*Benefits from the Lord's Supper.*

க. கர்த்தாவின் நேசத்தை
இப்பந்தி காட்டுமே,
தமது பலவீனத்தை
உணர்ந்தவருக்கே.

உ. இத்தாலே பேலனும்,
தீமையைப் பத்தியால்
அடக்க மனத்திடனும்
உண்டாம் இவ்விருந்தால்.

௩. நாம் தாழ்மையுடனே
இருந்து பாவத்தை
மெய் மனஸ்தாபத்துடனே
வெறுத்து நீதியை.

௪. மா! வாஞ்சையுடனே
தொடர்ந்தால் அடைவேன்.

அளவில்லாத நன்மையே
கிடைக்கும் எனக்கே.

**343.** ௩௱௪௩-ம். கீதம். L. M.

*Feeding on Christ at his table.*

க ஆ, ஏசுவே! நான் பண்ணின
நல் நிண்ணயம் பலப்பட
பசாசை ஓட்டியருளும்,
எப்போதும் என்னை ஆண்டிடும்.

உ. நான் உம்மில், வானத்தப்பமே!
மகா வணக்கத்துடனே
புசித்து உம்மை என்றைக்கும்
நினைத்துக்கொள்ள அருளும்

௩. நான் இவ்விருந்தின் நன்மையால்
சுத்தாங்கனுய்ப் பிதாவினுல்
மன்னிக்குங் கிருபையையும்
அடையக் கட்டளையிடும்.

௪. ஆ! உமக்கென்னையாவிலும்
நீர் ஏற்றேனுகக் கொண்டிரும்,
தினமும் என்னை யும்மிலே
தரிக்கப்பண்ணுங் கர்த்தரே.

௫. மரிக்கும்போதென் ஆவியை
மோட்சானந்தத்தில் உம்மண்டை
சேர்த்தென்னை உம்மால் என்றைக்கும்
திருத்தியாக்கி அருளும்.

344.　　ரு௱௪௪-ம். கீதம்.　　8, 7, 4.

*The proper reception of the Lord's Supper.*

௧. ஏசுக்கிறிஸ்து நமக்காக
வந்து, மா அன்புடனே
தேவ ஆட்டுக்குட்டியாக,
அன்று பலி போலவே
பாடுபட்டு,
மாண்டு நம்மை மீட்டாரோ.

௨. தம்முடைய பரிசுத்த
மேனி ரத்த உவமை
தம்மை ஞாபகப்படுத்த
நமக்கிங்கே ஈகிறுரோ;
அதை வாங்கி
தோத்திரிப்போமாகவே.

௩. வந்துசேர்பவன் நன்றுக
தன்னைத்தானே ஆராய்ந்தே,
பாவம் யாவும் வெறுப்பாக
விட்டு நேராய் நடந்தே,
நேசத்தோடு
தம்மைப்பற்றுமென்றுரோ.

௪. இந்தப் பரிசுத்த நன்மை
நமக்காகும் பொழுதே,
அந்தத்திரு ரத்தம் நன்மை
பரிசுத்தராக்கவே
தம்மை நோக்கி
நம்பிக்கொள்ளச்சொன்னுரோ.

345. ௩௱௪௫-ம். கீதம். L. M.

*Access to the throne of grace through the death of Christ.*

க. இரக்க ஆசனத்தைப் பார்,
அதற்குன்னை அழைக்கிறார்,
அங்கே அன்புள்ள தேவனார்
வேண்டுதல் கேட்டருளுவார்.

உ. இரட்சகரின் ரத்தமே
நமக்குச் சிந்தப்பட்டதே,
அதே கர்த்தர் முன்பாகவே,
உன் பாவ நாசமாயிற்றே.

௩. என் சித்தமே, உன் இஷ்டத்தின்
படிக்குக்கேள், நல் மீட்பரின்
இரத்தம் சிந்தப்பட்டதே
நிறைவுண்டாக ஈவாரே.

௪. உன் மீட்பரின் சாயலையும்,
உனக்கு வேண்டும் யாவையும்,
அவரின் அன்பு வல்லமை
கொடுக்குமே, அதை நினை.

346. ௩௱௪௬-ம். கீதம். 8, 7.

*"Lord! dismiss us with thy blessing."*

க. தேவ ஆசீர்வாதத்தோடே
அடியாரை அனுப்பும்,

வார்த்தையாகும் அப்பத்தோடே
போஷித்து வளர்ப்பியும்.

௨. அப்போதும்மைத் தேடிக்கொண்டு
மனதாரப்போற்றினோம்
மோட்சலோகத்தில் களித்து
உம்மைவாழ்த்தித் தொழுவோம்.

௰௨-ம் பிரிவு.

சமயங்கள்.

ஒய்வு நாள்.

347. ௩௱சஎ-ம். கீதம். 8, 7, 4.

*The Sabbath.*

௧. வாழ்க! சீயோன் பத்தர் யாரும்,
கீதம் பாடி வாழ்கவே!
கர்த்தாவின் வீட்டுக்கு வாரும்,
களிப்பான நாள் இதே:
துதியுங்கள்,
நம்மை மீட்ட ஏசுவை.

௨. லோக சோலி ஆசை வேலை
அற, யாரும், சுத்தமாய்,
சூழநிற்கும் மோட்ச சேனை
துதிசெய்யுந் தன்மையாய்,
சொல்வோமாக
நம்மை மீட்ட ஏசுவை.

௩. கோடா கோடி தூதரோடும்
பாடிப்பாடித் துதிப்போம்;

மோட்ச கதி, சோதியோடும்
தோன்றும், தோன்றும், நம்புவோம்.
என்றென்றைக்கும்
அவர் சாயல் ஆகுவோம்.

ச. லோகமெங்கும், தேசத்தார்கள்
வந்து, சுத்த ஆவியால்
ஸ்நானம் பெற்றுத், துதிப்பார்கள்.
வானம், பூமி, அவரால்
புதி தாகும்.
அல்லேலூயா மாந்தரால்.

348. நாசஅ-ம். கீதம். L. M.

*The same.*

க. இதே கர்த்தாவின் ஓய்வு நாள்,
விசாரம் வேலையை எல்லாம் :
மறந்து தேவ நன்மையை
சந்தோஷமாகவே நினை.

உ. கர்த்தர் படைத்தவை யெல்லாம் :
அவர்க்கு மா புகழ்ச்சியாம்,
இருள் இருந்த பொழுதே
வெளிச்சந் தோன்றச் செய்தாரே.

ந. விசேஷமாகப் பாவத்தை
நிவிர்த்தி செய்த மா தயை
அவர் விளங்கச்செய்ததால்
ரட்சிப்பு மாந்தருக்குண்டாம்.

ச. அதின் மிகுந்த சோதியில்
இக்காலத்தோர் நடக்கையில்
எல்லாரும் மா அன்பாகவே ;
அதைப்புகழ்வோமாகவே.

349. ளாசக-ம் கீதம். L. M.

*The Sabbath welcomed.*

க. வெற்றிசிறந்த ஏசுவே !
நாம் செய்த பாவம் யாவையும்
நிவர்த்தி செய்த நாள் இதே,
புகழ்ச்சி கீர்த்தி என்றைக்கும்.

உ. வானோர் பாடின ஓசையால்
வானம் நிரம்பிக் களிக்கும்
தூதர்களும் யாரும் மா அன்பால்
சாஷ்டாங்கமாய் வணங்கவும்.

ந. ஆ ! தோழரோ, விண்ணோரைப்போல்
வெற்றிசிறந்த நாயனை
நாம் பாடிப்போற்றும் வேளையில்
சுத்தாங்கமாம் ஆராதனை.

ச. நாம் அங்கே சேர்ந்துபாடியே
மாட்சிமை கொண்டு வாழுவோம்,
பரத்திற சேனையுடனே
வணக்கமாய்க் கொண்டாடுவோம்.

ரு. வாழ என்றைக்கும் மீட்பரோ
விண் மண் தலத்தோர் யாவரும்

கீர்த்தனஞ் செய்து அன்போடே
வணங்கிப்பாடிப் போற்றிடும்.

350. ஙாருயஂ-ம் கீதம். L. M.

*The Sabbath.*

க. உன்னதமான கர்த்தரே!
இந்நாளை நியமித்தீரே,
அதற்காய் உம்மை நித்தமும்
போற்றி, சேவித்துக் களிப்போம்.

உ. அடியார் உமதாளுகை
இரக்கம், ஞானம், வல்லமை,
பேலன், மகத்துவத்தையும்,
மேன்மையில் உணர அருளும்.

ங. கெட்டோருக் கனுசாரமும்,
ரட்சிப்பும் நித்த பூரிப்பும்
கிடைக்க, இன்று ரட்சகர்
குழியை விட்டேழுந்தவர்.

ச. உயிர்த்தெழுந்த கிறிஸ்துவே!
நீர் எங்களாத்துமாவிலே
இருந்து, எந்த நன்மைக்கும்
அடியாரை உயிர்ப்பியும்.

ரு. தேவாவியே! நல்லறிவும்,
மெய்விசுவாசம், நேசமும்,
சபையில் நீரே சொல்லிய
நல் வார்த்தையால் பெருக.

ரு. வெளிச்சம் தந்தடியாரில்
அன்பாக தங்கும் எங்களில்,
எல்லாம் கர்த்தாவின் மேன்மைக்கு
பலிக்கவே கடவது.

351. ஙாருக-ம். கீதம். L. M.

*Commencing Sabbath worship.*

க. விஸ்தாரமான லோகத்தை
படைத்த சுவாமி எங்களை
இந்நாள்வரையில் தேவரீர்
விசாரித்தே யிருக்கிறீர்.

உ. எல்லாரும் உமதாளுகை,
விவேகம், அன்பு, வல்லமை,
மற்றேந்த மாட்சிமையையும்
அறிந்து, போற்றச் செய்திடும்.

ங. உயிரடைந்த கிறிஸ்துவே!
நீர் எங்கள் ஆத்துமாவிலே
தரித்து எந்த நன்மைக்கும்
இந்நேஞ்சத்தை யுயிர்ப்பியும்.

ச. தேவாவியே! நற்புத்தியும்
மெய் நம்பிக்கையும் நேசமும்
சபையில் மேன்மையாகவே,
வளர்ந்திருக்கச் செய்வீரோ.

காலை ஆராதனை.

352.        ௩௨-ம். கீதம்.        7, 6.

*The same.*

க. நிற்பந்தத்தை அன்பாக,
நீர் போன ராவிலே
விலக்கினதற்காக,
துதிப்பேன் கர்த்தரே!
ஆ! இந்த நாள்வரைக்கும்
நான் செய்த தீமைக்கும்,
எல்லாப் பிழைகளுக்கும்,
மன்னிப்பை அருளும்.

உ. மகா பொல்லாங்கனான
பசாசு தனது
விஷமுங் கேடு மரண
வினையால், எனக்கு
பொல்லாங்கு யாவும் இன்று
செய்ய விடாதிரும்:
நான் தப்பிக்கொள்வதற்கு,
சகாயஞ் செய்திடும்.

௩. சருவத்துக்கும் வல்ல
உன்னித கர்த்தரே!
குறைவில்லாத நல்ல
விசாரிப்புடனே,
என் நோக்கம் நிறைவேற,
கிருபை புரியும்:
அப்போதெல்லாம் முற்றாக
களிப்பாய் முடியும்.

353. ௩௫௩-ம். கீதம். C. M.

*Mercies of the night acknowledged.*

௧. கர்த்தாவே! போனராவிலே
என்னை இரக்கமாய்
தற்காத்ததாலே, உம்மையே
நான் துதிப்பேன், அன்பாய்.

௨. இருளில் என்னை நீர் அன்பால்,
எவ்விக்கினத்துக்கும்
விலக்கிக், காத்திராவிட்டால்
பொல்லாங்கு நேரிடும்.

௩. அதற்கு நான் இஸ்தோத்திரம்
செலுத்த நிற்கிறேன்:
என்னில் நீர் கண்ட தப்பிதம்
மன்னிக்கக் கேட்கிறேன்.

௪. என்னாளும் என்னைச்சதுரு
கெடுக்கப்பார்க்குமே,
அநேகமான கண்ணிக்கு
நேர்போகப் பண்ணுமே.

௫. திரியேகரே! இரக்கமாய்
என்னைக்காப்பாற்றிடும்:
விழித்துக்கொள்ள, மா அன்பாய்
பலத்தைத் தந்திடும்.

454. ஙாருச-ம். கீதம். 7's.

*The same.*

க. பலனுதும் எனக்கும்,
பெற்ருர் சுற்றத்தாருக்கும்
என்றுஞ் சீவன் ஈந்தோரோ,
கர்த்தராம் என் மனமே !

உ. சென்றுபோன ராவிலும்
துன்பம் மோசம் யாவுக்கும்,
நீக்கிக்காத்த தேவனை
ஆத்துமாவே ! நீ நினை.

ஙா. தூக்கத்தால் நல்லறிவு
அற்றுப்போன பொழுது,
உன்னைக்காத்த சுவாமிக்கே
துதிசொல், என் மனமே !

ச. பட்சிசாலம் ஓசையாய்,
தேவனைத் துதிக்கவே,
நீயுங்கூட இன்பமாய்,
துதிசெய். என்மனமே !

ரு. இன்றைக்கு நற்பாதையை
காட்டியே உன்னடியை
காத்துக்கொள்ள, ஏசுவை
வேண்டிக்கோள் என் மனமே !

355. ௩௱௫௫-ம். கீதம். S. M.

*Morning Hymn.*

க. தினமும் புதிதாய்
அனுக்ரகத்துக்கே,
இன்றைக்கு மா வணக்கமாய்,
துதி உண்டாவதே.

உ. தப்பாமல் எங்களை
நேரிட்டு ரட்சியும்.
எல்லா இக்கட்டு பாவத்தை
விலகச்செய்திடும்.

௩. துன்னாளிற் றீவினை
திரட்சி வந்தாலும் ;
நிலைத்திருக்க எங்களை
பெலப்படுத்திடும்.

ச. பரத்துக்கோட்டமாய்,
மா வாஞ்சையுடனே
அடியார் ஓடத்தயவாய்,
ஆளும் தேவாவியே!

356. ௩௱௫௬-ம். கீதம். 7, 6.

*The same.*

க. விடியக்காலமான
இப்போ திரும்பவும்
வெளிச்சத்தை நான் காண,
எல்லாப் பொல்லாப்பையும்

அடியேனை விட்டோட்டி
ரட்சித்தீர் கர்த்தரோ!
அத்தால் நான் உம்மைப்போற்றி
துதிக்க நியாயமே.

உ. ஆ! இஸ்ரவேலைக்காக்கும்
கர்த்தாவே! இன்றைக்கும்
நீர் என்னை அன்பாய்ப்பார்க்கும்
தகப்பனு யிரும்:
துரைகளைத்தற்காரும்
சபை யனைத்தையும்
இரக்கமாகப்பாரும்;
அடியாரோடிரும்.

ஙூ. அடியாரும் பின்னுக
வாறேரும் உம்மையே
வணங்கிறதுக்காக,
எங்களிடத்திலே
மெய்ப்போதகந் தரித்து,
நன்றாய் விளங்க நீர்
பய்ச்செயலை யழித்து
விலக்கக் கடவீர்.

ச. சரீர அவதிக்கும்
இரங்கி அருளும்,
இக்கட்டனுபவிக்கும்
சனத்தை ரட்சியும்.
மெய்க்கிறிஸ்தவர்கள் நாடும்
அமர்ந்த சீவனம்

உண்டாகப் பார்த்துவாரும்,
அதும்முடட வரம்.

௫. அவனவன் சீருள்ள
சுத்தாங்க மார்க்கத்தில்
நடந்து, தனக்குள்ள
தொழிலின் வேலையில்
பாட்டாளியா யுழைத்து
தன் பத்தி யாவையும்
நீர் சொன்னசொல் மேல்வைத்து,
சுகித்திருக்கவும்.

௬. தெய்வீக கிரியைக்கும்
சபைக்கு மானதை
பிசாசு என்றென்றைக்கும்
தடுக்க என்னத்தை
செய்தாலும், வீணாய்ச் செய்யும்
ஆண்டோர் நீர் ஏசுவே !
சபைக்கெந்நாளிலேயும்
நீர்தான் துணையாமே.

௭. நீர் தீவி திராட்சியான
செடியும் அதிலே
அடியார்கள் பயிரான
கொடிகளுமாமே.
ஆ! நாங்கள் வெகுவாக
கனி கொடுக்க நீர்
அனுக்கிரகம் அன்பாக
அளிக்கக் கடவீர்.

மாலை ஆராதனை.

357. ஙாருஎ-ம். கீதம். 7, 6.

*Evening Hymn.*

க. வெளியில் ஊரில் யாவும்
எல்லாச் சீவாத்துமாவும்,
இப்போ அமையுது,
என் மனதே! நீ பாடி
உன் கர்த்தரைக் கொண்டாடி,
சேபத்தியான மாயிரு.

உ. பகலோன் அஸ்தமித்து
இராவந்ததால் ஒளித்து,
காணமற் போயிற்று,
போகட்டும், ஏசுவான
பகலோன் என்ற ஞான
வெளிச்சமே என் பூரிப்பு.

ஙா. இந்நாளின் வேலையாலும்
தலையும், கையும், காலும்
சலித்துப்போயிற்று;
ஆனால் இனி எப்பாடும்
எப்பாவக் கேடும்மாறும்,
என் மனதே! மகிழ்ந்திரு.

ச. அடுத்தவர்கள் மீதும்
இரவில் கேடுந் தீதும்
வராமல் யாவரும்,
அருள் நிழலின் கீழே

சுகித்து தூங்க நீரோ
அன்பாகக் கட்டளையிடும்.

358. ௩௱௫௰௮-ம். கீதம். 8, 7, 4.

*The same.*

௧ நல்ல சிந்திப்பாய் விழித்து
தெளிவாய் என்நெஞ்சமே!
தேவ அன்பையே சிந்தித்து
தோத்திரி என்னுள்ளமே!
இந்த நாளில்
என்னிடத்திருந்தாரோ.

௨. ஆ, பிதாவே! மா அன்புள்ள
சுவாமீ! நீர் என் வேலையை
வாய்க்கப் பண்ணித் துன்பமுள்ள
பார விக்கினங்களை
நீக்கிப்போட்டீர்:
உமக்கே தோத்திரம்.

௩. ஆ! என் கெட்ட சுபாவத்தாலே
தேவரீர் என்நெஞ்சிலே
கண்டபாவத்தை அன்பாலே
நீர் துடையும் கர்த்தரோ!
கிறிஸ்தைக் கொண்டு
என்னையும் ரட்சியும்.

௪. கிருபையின் சோதியான
சுவாமீ! இந்த ராவிலும்

என்னில் தேவரீர் அன்பான
சோதியாய்ப் பிரகாசியும் :
என்றென்றைக்கும்
என்னைக் கைவிடாதிரும்.

ரு. எனதாவி, தேகம் ஆஸ்தி,
வீட்டார் சுற்றத்தாரையும்
தேவரீர் அன்பாகக் காத்து
என் பகைஞர் யாரையும்
கேட்டினின்று
நீக்கிக் காத்திரட்சியும்.

359. ரூாருகூ-ம். கீதம். L. M.

*The same.*

க. மெய்ப்பொழுதுதான் கிறிஸ்துவே!
நீர் மங்கிப்போவதில்லையே!
எப்போதும் எங்கள் யாருக்கும்
வெளிச்சங் காண்பித்தருளும்.

உ. பொல்லாத விக்கினங்களை
விலக்கிப்போட்டு எங்களை
நீர் இந்த இராத்திரியிலே,
அன்பாய்க்காப்பாற்றும், கர்த்தரே!

ன. அடியார் தூங்கிக் கொள்ளவே
அடியார் நெஞ்சும்முடனே
சஞ்சாரம் பண்ண, அதை நீர்
எழுப்பி வரக்கடவீர்.

360. ருாசுய-ம். கீதம். C. M.

*The same.*

க. இப்போது தூங்கிக்கொள்ள, நான்
என் கண்ணை மூடுவேன்
என் காவற்காரர் கர்த்தர்தான்
கலக்கமாயிரோன்.

உ. அகன்றுபோக, நீங்குங்கள்
துர் யோசனைகளே:
கர்த்தர் காப்பார், தன்பிள்ளைகள்
நான் ஒப்புவித்தேனே.

ரு. என் சீவன் இந்த ராவிலே
சென்றாலும், கர்த்தரோ!
என் ஆத்துமாவை உம்மிலே
எடுத்துக்கொள்வீரோ.

ச. உயிர் நின்றாலும், மீட்பரோ!
நான் உம்முடையவன்:
மரித்துங் கேடும் இல்லையே
நீர் என் பராபரன்.

361. ருாசுக-ம். கீதம். C. M.

*The same.*

க. இருட்டுண்டாகவே இந்நாள்
முடிந்து போகையில்
இளைத்தயாவும் தூக்கத்தால்
படுத்துக்கொள்கையில்.

உ. கர்த்தாவே! நீர் விழிக்கிறீர்:
உறக்கமற்றவர்:
இருட்டிலேயுந் தேவரீர்
வெளிச்சமானவர்.

ங. கர்த்தாவே! என்னை மா அன்பாய்,
நீர் இந்த ராவிலும்
நினைத்து, என் தகப்பனுய்
என் பக்கத்தில் இரும்.

ச. என்னுல் உண்டான பாவத்தால்
மனங் கலங்குமே;
ஆனுலும், கிறிஸ்தின் ரத்தத்தால்
என் குற்றம் நீங்குமே

ரு. பரத்திலே இரட்சகர்
விண்ணப்பஞ் செய்கிறுர்:
மரித்துயிர்த்தெழுந்தவர்
மன்னிப்பை ஈகிறுர்.

சு. இரக்கம்வைத்த உமக்கே
புகழ்ச்சி நித்தமும்,
செலுத்த வேண்டும் கர்த்தரே!
அதைத் தள்ளாதிரும்.

362. ஙாசுஉ-ம். கீதம். 8's. & 7's.

*The same.*

க. என் கண்ணிமைகள், கர்த்தாவே!
துக்கத்தாலே மூடியும்,

ஆத்துமா தன் வாஞ்சையாலே
தேவரீரைச் சார்ந்திடும் :
தூங்கினாலு மும்மிடத்திலே
ஐக்கப்பட்டிருப்பேனே :
இராவில் விழித்திருக்கில்
உம்மைப் பற்றிக்கோள்வேனே.

௨. ஆசீர்வாதத்தை அளித்து
எனக்கிந்த இராவிலே
சுக நித்திரையைத் தந்து,
என்னைக்காப்பீராகவே
என் வீட்டாரும் என் இனத்தாரும்
நேசரும், பகைஞரும்
யாரும், பர வாழ்வு பெறும்
அன்பைக் காட்டி, ரட்சியும்.

௩. அமளி, திகில், வியாதி,
மா யுத்தத்தின் கலகம்
வேள்ளம், தீ. முதல் உபாதி,
பெருவாரி. விக்கினம.
உமதடியேனிடத்தில்
அணுக ஒட்டாதிரும்
காலையில் எழும்பி, உம்மில்
பாடக், கிருபை செய்யும்.

363. ௩௱௬௰௩-ம். கீதம். L. M.

*"Glory to thee my God this night."*

௧. இந்நாள் மட்டாக ஏழையை
தயவாய்க் காத்த தேவனே,

உமக்கு நல்ல தோத்திரம்
செய்கின்றதே என் ஆத்துமம்.

உ. தேவர் மன்னர்க்கு மன்னனே
கிருபைச் செட்டையின் கீழே
என்னை அணைத்துச்சேர்த்திடும்,
இரக்கமாகக் காத்திடும்.

ங. நித்திரைகொள்ள முன்னமே
எல்லாரோடும் இணங்கவே
ஆ! ஏசுவின் நிமித்தியம்
என் குற்றம் யாவும் மன்னியும்.

ச. உறக்க நேரந்தன்னிலும்
எனக்குத் தஞ்சமாயிரும்,
பரத்தின் வாஞ்சை நேஞ்சிலும்
ஊற்றுக ஊறச்செய்திடும்.

ரு. நித்திரைகொள்ளுந் தன்மையாய்
பயப்படாமல் ஊக்கமாய்
மரித்தும் நானும் மோட்சத்தில்
களிக்கச்செய்யும் இன்பத்தில்.

சு. பிதாவே! என்றும் எனது
அடைக்கலம் நீர் உமது
முகத்தைக்காணுங் காட்சிதான்
ஆனந்த செல்வம் முத்தியாம்.

எ. அருளின் ஊற்றும் தேவனை
பிதாக்குமாரன் ஆவியை

துதி செய்ய வான சேனையே,
பூலோகமும் நீ துதிசெய்.

வருஷப்பிறப்பு.

364. ௩௱௬௰௪-ம். கீதம். P. M.

*The new year.*

க. வருஷப் பிறப்புண்டேன்று
புதுப் பத்தியுடனே
தேவரீரை நான் பின்சென்று
வர நீர்தான் ஏசுவே!
எனக்கும் என் வேலைக்கும்
வழிக்காட்டியா யிரும்
எனக்கிப்போதும் இனியும்
ஆசீர்வாதத்தை யளியும்.

உ. இது கிருபைபொழியும்
வருஷமாகட்டுமேன்.
என்னைப் பிரகாசிப்பியும்;
என் அழுக்கை யடியேன்,
மனஸ்தாபத்துடனே,
பார்த்தருவருக்கவே,
நற்குணத்தையுமளியும்;
பாவம் யாவையும் மன்னியும்.

௩. நீர் என் அழுகையைக் கண்டு,
துக்கத்தாற் கலங்கின
அடியேனைத் தேற்றிவந்து,
நித்தம் நித்தம் உம்முட

கையால் என்னைத்தாங்கவும்,
பாவத்துக்குங் கேட்டுக்கும்
தப்புவிக்கவும் அன்பாக
தயவருளுவீராக.

ச. மாயமற்ற கிறிஸ்தோனாக
இந்த வருஷத்திலே
நான் நடக்கதக்கதாக
ஈவளியுங், கர்த்தரோ!
யாவர் மேலும் பட்சத்தை
வைத்து தேவபத்தியை
எனக்கிரட்சிப்புண்டாகக்
காண்பித்தே யிருப்பேனாக.

ரு. பூரிப்பாய் இவ்வருஷத்தை
நான் முடிக்க என்னை நீர்
தாங்கி உம்முட கரத்தை
என்மேல் வைக்கக் கடவீர்:
சகல இக்கட்டிலும்
என்னை யாதரித்திரும்,
உம்மைப்பற்றிச்சுகமாக
சாவிலும் கேலிப்பேனாக.

வருஷ முடிவு.

365. ஙாகூரு-ம். கீதம். 7's.

*The end of the year.*

க. சீவன் தந்த கர்த்தரோ!
அத்தியந்தமாகவே

உண்மையாகப் பணிவாய்
தோத்தரிப்போம் களிப்பாய்.

உ. நாட்கள் சொல்போல் கழியும்,
தண்ணீர்போல வடியும்,
போயினும் இவ்வனைக்கே
சீவனேடிருந்தோமே.

ரு. வலுசர்ப்பம் செய்வினை
நெஞ்சிலாகும் துரிச்சை
மற்றும் யாவும் தப்பினேம்
தேவ மீட்சியைக் கண்டோம்.

ச. வல்ல சர்த்தர் நீட்டும் கையை
பட்டபாடு சிலுவை
நோக்கி நம்பும் எவனும்
துதிசெய்வான் என்றைக்கும்.

விவாகம்.

366. ருாகூகூ-ம். கீதம். 7's.

*Marriage.*

க. லோகம் ஆளும் ஆண்டவர்,
ஆணும் பெண்ணுஞ் செய்தனர்,
இரண்டு பேரும் வாழ்கவே
கட்டளை கொடுத்தாரே.

உ. ஆதலால் விவாகமே
நல் விசேஷமானதே,
அந்த நன்மைக்காக நாம்
துதிசெய்ய நியாயமாம்.

௩ தேவ சொல்லுக்கேற்றதாய்
தேவ பக்தியுள்ளோராய்
நடந்தால் மா நன்மையே
எங்களுக்கு ஈவாரோ.

**367.** ௩௱௬௰௭-ம். கீதம். P. M.

*The same.*

௧. கர்த்தாவே ! இரண்டுபேரையும்
அன்பாகப் பார்த்திரட்சியும் ;
இவர்களால் புகழ்ச்சியே
உமக்குண்டாவதாகவே.

**368.** ௩௱௬௰௮-ம். கீதம். 7's.

*The same.*

௧. வாழ்க ! நேசமுள்ளோரே,
இனஞ் சனங்கூடியே
களிப்புடன் கூடுவோம்,
வாழ்த்தல் சொல்லிப்பாடுவோம்.

௨. கர்த்தர் தாமே ஆதியில்
பாவமின்றிருக்கையில்,
தந்தை தாயும் ஏகமாய்
கூட்டினர் விவாகமாய்.

௩. ஆதிமுதலாய் வரும்
இந்த அருள் உத்தமம்,
மெய் விவாக நன்மைக்கே
தோத்திரிப்போமாகவே.

ச. நெஞ்சு நெஞ்சுடன் அன்பாய்
ஐக்கமாக்கித், தயவாய்
சமுசார வாழ்விலும்
காத்துக்கொண்டிரட்சியும்.

ரு. நாங்கள் யாரும் நேசமாய்,
கூடுவோம் மா களிப்பாய்,
இன்றும், அன்றும், என்றைக்கும்,
கர்த்தருக்குத் தோத்திரம்.

*பிரயாணம்.*

369. ஈாசுகூ-ம். கீதம்.

*Journeying.*

க. இப்போது வழிபோகையில்,
கர்த்தாவே! என்னைப்பாரும்:
பிதாவே! நீர் என்னண்டையில்,
எப்போதுங் கூடவாரும்:
என்னுயிர் உடல் சுகமும்
நான் செல்லும் நோக்கங்கூடவும்,
உமக்கே ஒப்புவிப்பேன்.

உ. மோசங்கள் என்னை வழியில்
சுற்றுதிருப்பதில்லை,
மெய்யான இளைப்பாறுதல்
புவியில் எனக்கில்லை:
நான் இங்கும் அங்கும் உலைவாய்,
நிலையில்லாதவனுமாய்,
நடக்கும் பரதேசி.

௩. ஆனாலும், என் சகாயர் நீர்
என் பாரச்சுமையோடும்
விழாதபடி, தேவரீர்
காப்பீர் இரட்சிப்போடும்,
சா வந்தும், மோட்ச வீட்டிலே,
உம்முடன் முடிவின்றியே,
நான் வாழ்வேன் என் கர்த்தாவே !

## ஆபத்து.

370. ௩௭௰-ம். கீதம். L. M.

*Public calamity.*

க. மகா இக்கட்டாம் ஆபத்து
உண்டாக்கி, எங்கள் மனசு
ஓர் யோசனையும் இன்றியே,
கலங்கிக் கொண்ட பொழுது.

உ. கர்த்தாவே ! மனத்தாழமையாய்.
உம்மண்டையிற்சேர்ந்தேகமாய்,
அனுக்கிரகத்தைக் கேட்பதே,
எங்கள் ஆறுதலாகுமே.

௩. நொறுங்கிய நெஞ்சுடனே
வந்தோம் ; இரங்கும் கர்ததரே!
மன்னித்துக்கொள்ளும் மிகவும்
கோபமாய்த் தண்டியாதிரும்.

ச. இக்கட்டில் ஏசுமூலமாய்
மன்றாடினோரைத் தயவாய்,

இரட்சிப்போமென்றும், தேவரீர்
நல்வாக்குத்தத்தம் பண்ணினீர்.

ரு. ஆ! எங்கள் மீறுதல்களை
பாராமல், ஏசுக்கிறிஸ்துவை
பார்த்தெங்கள் வாதையாவையும்,
அன்பாக நீக்கி அருளும்.

பஞ்சகாலம்.

371. ருாஎக-ம். கீதம்.

*Drought.*

க. ஆ! நீதியுள்ள கர்த்தரோ!
தரைவரண்டதாலே,
எச்சீவனும் வதங்குமே.
இக்கேடு எங்களாலே
நடத்தபாவத்தின் பலன்
என்றெங்களில் ஒவ்வொருத்தன்
துக்கித்துச்சொல்வானாக.

உ. ஆ! எங்கள் மீறுதல்களை
அன்பாய் மன்னித்துக்கொள்ளும்.
நீரோ அடியார் நம்பிக்கை :
சகாயஞ்செய்யவாரும்.
கர்த்தாவே! நல்ல தயவால்
மழையைத்தந்து, அதனால்
நிலத்தைச் செழிப்பாக்கும்.

ரு. தயாபரா! நீர் உமது
நல்வாக்கின் படியாக,

தயவாய்க்காய்ந்த பூமிக்கு
தண்ணீர் இறைப்பீராக.
நீர் வானவாச கர்த்தரோ!
மழையை உம்மையன்றியே,
ஆர்பண்ணக்கூடும்?

அசன தோத்திரம்.

372. ௩௱௭௨-ம். கீதம், L. M.

*Thanks before or after a Meal.*

க. இப்போ படியளந்த
கர்த்தாவை யவர் தந்த
நல்லீவுகளுக்காக
இஸ்தோத்தரிப்போமாக.

பெற்றோர் வேண்டல்.

373. ௩௱௭௩-ம். கீதம். C. M.

*A maternal Prayer.*

க. நேச மீட்பர்! உம்மாற்கூடி
சேருவோம், சமீபம்.
கிருபாசனத்தில் அஞ்சி,
சார்வோம் வாக்குத்தத்தம்.

௨. எம்பிள்ளையில் அன்புவைத்து,
நேசத்துடன் பாரும்.
மேலே தோன்றுந் துணைதந்து
நம்புமேம்மைப்பேணும்.

௩. பிள்ளைகள் சொல்லுஞ் செபங்கேளும் ;
தயைசெய்யும், காத்து;
நெறிப்படும் மோசம் நீக்கும்,
வஞ்சம் நீங்கச் செய்து.

௪. இளமையில் அருள் நாடி,
வேண்டும்படிசெய்து,
பரிசுத்த இன்பமுத்தி
பெறச்செய்யும், காத்து.

௫. அருளானந்த காரணர் !
மாதர் கூட்டம் பார்த்து,
நடத்துவீர் நம்மை நேசர்
என்றும் மோட்சந்தந்து.

௬. எங்கள் நேசம்பிள்ளை மோட்சர்
உடன்கூடிபாடி,
உம்மைப் போற்றும்படி, முத்தர்
செய்யும் தயாநிதி !

374. ௩௱எ௪-ம். கீதம். C. M.

*"They brought young children to him, that he should touch them."* MARK x. 13.

௧. இஸ்ரேலின் சாந்த மேய்ப்பர்!
தாங்கி நன்மை செய்ய,
ஆட்டுக்குட்டிதேடி நிற்பர்,
பாரும் ! நேசமாக.

உ. "பிள்ளைபோல்வார் தம்மைக்காப்ப
விண்ணோர்க்காதி தேவர்
வந்தார்" என்றுயாரும் ஏத்த,
அருள்செய்வார், மேய்ப்பர்.

ந. அருள் பெற்றுக் களிகூர்ந்து,
கையிற்பிள்ளை ஏந்தி,
"ஸ்வாமி! இதைப்பாரும்" என்று
சொல்வோம், தயை தேடி.

பிள்ளைகளைக்குறித்தது.

375. நாஎடு-ம். கீதம். 7, 6.

*Praise to God.*

க ஆத்துமாவே! உன்னையும்
மற்றெல்லாப்படைப்பையும்,
சிஷ்டியாக்கினோருக்கு
வாழ்த்தல் செய்தன்பாயிரு.

உ. உன்னைப் பாவச்சேற்றிலே
நீங்கச்செய்த கர்த்தரே!
மேன்மையுள்ளோரோன்றுரை
நாதனை அன்பாய் நினை.

ந. காலத்திற்குத் தக்கதாய்,
உன்னைக்காத்து தயவாய்,
மா மகா கடாட்சத்தை
தந்த வல்ல தேவனை.

ச. நீ நினைத்து என்றைக்கும்,
நல்ல பிள்ளைப்போலவும்,
நாதனுக்கு கீழ்ப்படி
நித்தம் நித்தம் தோத்திரி.

376. ௩அஎ௬-ம். கீதம். P. M.

*Children praising God.*

க. தூதர்போற்றும் வல்லதெய்வம்
கேளும் பாலர் துதியை :
மண் விண் யாவுமும்மை யென்றும்
போற்றிச்சொல்வார் கீதத்தை:
அல்லேலூயா !
அல்லேலூயா ! அல்லேலூயா ! ஆமன்.

௨. சர்வதேசம்ஆளும் கர்த்தர்!
தயவுள்ள மைந்தனே !
பாலர்முதியோருமெங்கும்,
உம்மை வாழ்த்த நீதியே :
அல்லேலூயா !
அல்லேலூயா ! அல்லேலூயா ! ஆமன்.

377. ௩அஎஎ-ம். கீதம். 7's.

*A child coming to Christ.*

க. சாந்தமுள்ள ஏசுவே !
பாரும், பாலன் முகத்தை :
என்னில் தயை வைத்திடும்,
என்னிலே தரித்திடும்.

உ. உம்மைத்தேடி பறறுவேன்:
என்னை ஏற்றுக்கொள்ளுமேன்:
மோட்ச ராச்சியத்திலே
தாரும், எனக்கிடமே.

௩. கை என்தலைமேல்வையும்:
உம்மால் நான் பிழைக்கட்டும்:
தேவமார்பிற் சார்ந்திடும்,
நான் உறங்க அருளும்.

ச. திருமுகங் காட்டியே,
என்னை ஏந்தி கையிலே,
உமக்கேற்றோனகவே,
ஆசீர்வாதம் தாருமே.

ரு. பாவமற்றுக் களித்து,
மன இருள் தெளிந்து,
பாவத்தைத் தொடாமலும்,
நான் நடக்கச் செய்திடும்.

சு. தீயோர் செய்கை போலவே,
நான் செய்யாதிருக்கவே,
எனக்குதவிசெய்யும்.
என்னை சுத்திகரியும்.

எ. ஆ! அன்புள்ள ஏசுவே!
யேழையேனைப்பாருமே:
என்னை அன்பால் ரட்சியும்:
மோட்ச வீட்டிற் சேர்த்திடும்.

378. ௩௭௮-ம். கீதம். 7's.

*A child's Hymn.*

௧. ஏழைப்பிள்ளையாயினும்,
கர்த்தர் உடை உணவும்
தந்து என்னைக் காக்கிறார்:
என்னில் நேசம் வைக்கிறார்;

௨. நித்திரை விழிப்பிலும்,
வேலைசெய்யும் வேளையும்,
ஏசுவின் நிமித்தியம்,
என்னைக் காப்பார் நித்தமும்.

௩. அவர் மோட்ச பாதையே
காட்டி, என் செபத்தையே
கேட்க, அருட்செவியை
சாய்க்கிறார், மகா தயை.

௪. வானம் ஆளும் ஆண்டவன்.
என்னைப்போலப் பாலகன்
ஆகி, நீதி செய்யவே,
ஏழைரூபெடுத்தாரே,

௫. குருவிக்கும் நரிக்கும்
உண்டு, கூடும் குழியும்
தலை சாய்க்கத்தேவனே,
இடம் இல்லை என்றாரே.

௬. இங்கிருக்கு மட்டுக்கும்
என்னை ஆசீர்வதித்தும்,

சீவன்போகும் பொழுதே,
மோட்சம் எனக்கீவாரோ.

379. ஙாஎகூ-ம் கீதம். P. M.

*Children's sabbath Hymn.*

க. சேல்வோம், கோவிலுக்கு,
ஓய்வுநாட்கள் தோறும்.
துதிசெய்வோம் நன்று,
ஓய்வு நாட்கள் தோறும்.
பாரும், நேசதெய்வம்!
கேளும், எங்கள் செபம்:
ஆற்றும், எங்கள் நெஞ்சம்;
ஓய்வு நாட்கள் தோறும்.

உ. நாம் வேலை விடுவோம்,
ஓய்வு நாட்கள் தோறும்.
நாம் உம்மை வாழ்த்துவோம்,
ஓய்வு நாட்கள் தோறும்.
ஆசாபாசம் நீக்கும்:
மனம் வசப்பண்ணும்:
உமதருள் ஊற்றும்,
ஓய்வுநாட்கள்தோறும்.

ங. கேட்போம் தேவர் வாக்கை,
ஓய்வு நாட்கள் தோறும்:
அது சித்தியாக்கும்,
ஓய்வு நாட்கள் தோறும்,
நாம் போமிடம் எங்கும்,

கூடவாரும், என்றும்.
ஆசீர்வாதம் செய்யும்,
ஓய்வு நாட்கள் தோறும்.

380. ஙாஅயம். கீதம். 7's.

*Morning Hymn.*

க. பாலனுக்கும் எனக்கும்,
பெறறோர் சுற்றத்தாருக்கும்,
என்றுஞ் சீவன் ஈந்தோரோ
கர்த்தர்தான், என் மனமே.

உ. சென்று போன ராவிலும்
துன்பம், மோசம், யாவுக்கும்,
நீக்கிக் காத்த, தேவனை
ஆத்துமாவே! நீ நினை.

ங. தூக்கத்தால் நல்லறிவு
அற்றுபோன பொழுது,
உன்னைக் காத்த சுவாமிக்கே
துதி சொல் என் மனமே!

ச. பட்சி மெத்த ஓசையாய்
தேவனைத் துதிக்கவே;
நீயுங்கூட இன்பமாய்
துதி செய் என் மனமே!

ரு. இன்றைக்கு நற்பாதையை
காட்டியே உன் அடியை

காத்துக்கொள்ள ஏசுவே!
வேண்டிக்கோள், என் மனமே!

381. ஙாஅுக-ம். கீதம். L. M.

*Evening Hymn.*

க. ஏழைகளுக்கன்பாகவே,
சேவிகொடுக்குங் தேவனே!
சகல நன்மை ஊற்றும்
நீரோ எனக்குத் தஞ்சமாம்.

உ. உன்னதமான பரனே!
கேளும் என் விண்ணப்பத்தையே;
நீர் இன்று பாலனும் என்னை
தற்காத்த தயை எத்தனை!

ங. செய்கை, நினைவு, வாக்கிலே,
தீயவை யுண்டு மன்னித்தே,
நித்திரை பண்ண முன்னமே
ஒப்புர வாக்கும் தேவனே!

ச. இராவில் உமது கரத்தில்
தூங்கி அடியேன் காலையில்
விழித்துத், தோத்திரத்தையே
செலுத்தச் செய்யும் ஏசுவே!

ரு. இராவும் பகலும் மாறியே
சென்றோட, வாழ் நாளையே
நிமிஷவேளையாக, நீர்
எண்ணிக்கணக்கிடுகிறீர்.

சு. மரிக்கும்போது நித்திரை
செய்தாற்போல என்னுத்துமாவை
மடியிற்சாய்ந்து பூரித்தே
விழிக்கச்செய்யும் ஏசுவே!

382. ருாஅஉ-ம். கீதம். C. M.

*God is everywhere.*

க. கர்த்தர் உயர்ந்த வானத்தில்
இருக்கிறார் அல்லோ?
பாலன் விண்ணப்பம் பண்ணுகில்,
அதையுங் கேட்பாரோ?

உ. பயப்படாதே பாலனே!
உன் பரமபிதா
மழலைப்பேச்சுப்பிள்ளையை
அன்புடன் கேட்கிறார்.

ரு. கர்த்தர் உயர்ந்த வானத்தில்
இருக்கிறார் அல்லோ?
நான் தீமைசெய்யும் வேளையில்
என் குற்றங் காண்பாரோ?

ச. ராவும் பகலும் அவரோ
எல்லாரையுங் காண்கிறார்:
அவரோ இந்த லோகத்தை
நடத்திக்கொள்ளுகிறார்.

ரு. கர்த்தர் உயர்ந்த வானத்தில்
இருக்கிறார் அல்லோ?
ஓர் அற்ப பொய் நான் சொல்லுகில்,
அதையுங் கேட்பாரோ?

சூ. நீ மேத்தமெல்லச் சொல்லினும்
நன்றாக அறிவார்,
நீ எப்படி ஒளிக்கினும்,
பிடித்துக் கொள்ளுவார்.

எ. கர்த்தர் உயர்ந்த வானத்தில்
இருக்கிறார் அல்லோ ?
அவரைப்போற்றிச் செய்திடில்
நான் அங்கே சேர்வேனே.

அ. இன்னமுங் காலமுள்ளது,
இவ்வுலகத்தில் நீ
அவரை நம்பி நேசித்து
பின் மோட்சத்தில் துதி.

383. ஙாஅங-ம். கீதம். 7's.

*"Holy Bible! book divine!"*

க பரிசுத்த வேதமே,
விலைபெற்ற செல்வமே,
நீயே தேவ புத்தகம்,
நீயே நல்ல பொக்கிஷம்.

உ. நான் இன்னான் எவ்விடத்தான்
வரும் வாழ்வு என்னவாம்
சொல்லும் புத்தகம் நீயே,
நீ என் வழி காட்டியே.

ங. ஏசு உண்டு பண்ணின
பாவ மீட்டைச் சொல்லிய
நல்ல சாட்சி நீ தானே
என்னை ஞாயந் தீர்ப்பதே.

ச, துன்பகாலம் ஆறுதல்
உண்டு—உன்னால் சாகுதல்
விசுவாசம் உள்ளோர்க்கே
இன்பமாகு மென்றுமே.

ரு. மோட்ச பாக்கியத்தையும்
பாவி படும் பாட்டையும்
கூறும் தேவ புத்தகம்
நீயே நல்ல பொக்கிஷம்.

384. ஙாஅச-ம். கீதம். S. M.

*Holy Scriptures.*

க. நான் சிறுவயதே,
மெய் வேத வாக்கியம்
ஆராய்ந்து பார்ப்பேன்: அதுவே,
எனது பாக்கியம்.

உ. நற்கதி வேதத்தில்
அடைந்ததால், நானே
மகிழ்ச்சியோடே, கர்த்தரில்
அன்பாயிருப்பேனே.

ங. அறியாப்பேதைக்கு,
வேதம் இலாபமே.
இருள் நிறைந்த, பாதைக்கு,
அதே நல் தீபமே.

ச. அதை ஆராயவே,
நன்மதியைத்தாரும்:
அதால் நான் பாவம் போக்கவே.
சுத்தாவியைக்கொடும்.

ரு. அவ்வீவுக்காக, நான்
புகழ்ச்சி அவர்க்கே
நன்மனதோடே, நித்தந்தான்
செலுத்தல் ஞாயமே.

385. ஙாஅரு-ம். கீதம். 7's.

*"O that will be joyful."*

க. துக்கம் நோவிங்கே யுறும்,
நம்மிசைவிங்கேயறும்,
விண்ணில் அஃதில்லையே:
ஆ, மகா சந்தோஷம்,
சந்தோஷம், சந்தோஷம்,
ஆ, மகா சந்தோஷம்
அங்கும் நாம் சந்திக்கையில்.

உ. இங்கே தேவன்புள்ளவர்,
சாவதில் விண்ணேகுவர்
மீட்பையே கொண்டாடுவார்:
ஆ, மகா சந்தோஷம், மு.

ங. கர்த்தர் செப வழியே
தேடி பாலர் யாருமே
லோகம் விட்டு சேருமே:
ஆ! மகா சந்தோஷம், மு.

ச. பற்றிய விண்ணேகிடும்
போதகர் பெற்றோர்களும்
கூடியே மகிழ்வார்:
ஆ, மகா சந்தோஷம், மு.

ரு. உன்னத சிம்மாசனம்
மீதில் மீட்பரைத்தினம்
கண்டு நாம் பூரிப்போம் :
ஆ, மகா சந்தோஷம், மு.

சு. வாரும் நாமும் பாடுவோம்
கிறிஸ்துவைக் கொண்டாடுவோம்
விண்ணையே நாடுவோம் :
ஆ, மகா சந்தோஷம், மு.

எ. தயவுள்ள தேவனே
ஞாயத்தீர்ப்பின் நாளிலே
எம்மை ஏற்றுக்கொள்ளுமே
ஆ, மகா சந்தோஷம்
சந்தோஷம், சந்தோஷம்
ஆ, மகா சந்தோஷம்
அங்கும் நாம் சந்திக்கையில்.

386. ௬௱அசு-ம். கீதம். S. M.

*A School Hymn.*

க. அன்புள்ள ஏசுவே !
இப்பள்ளிக்கூடத்தில்
இருக்கும் எந்தப்பிள்ளையே,
சேரட்டும், மோட்சத்தில்.

உ. நான் கற்குங் கல்வியே,
மெய்ப்பத்தியோடேயும்,
என்னை நடத்தும் படிக்கே,
ஊக்கந் தந்தருளும்.

ஈ. சிற்றின்பம் யாவையும்
  வெறுத்து, உமக்கே
புசித்துக் கற்று, எதையும்
  முடித்துச்செய்வேனே.

ச. உவாத்தி, குருவும்,
  சொல்வதை மதிப்பேன்:
அடுத்த பிள்ளைகளையும்,
  நேசித்து நடப்பேன்.

ரு. இவ்வருள், ஏசுவே!
  என்நெஞ்சிற் செய்திடும்.
என்றைக்கும் இதற்காகவே,
  உமக்குத் தோத்திரம்.

387. ஈாஅஎ-ம். கீதம். P. M.

*Hymn for an Infant school.*

க. ரட்சை செய்யும் ஏசு சுவாமி!
சிசுக் கூட்டம் பாருமே;
தாரும் தேவ பயபத்தி:
உம்மைப் போற்ற, ஏவும்.
  சிசுநேசர்!
ஆசீர்வாதம் தாருமே.

உ. நித்தம் எம்மைப் பேணிக்கொள்ளும்
எங்கள் போக்குவரவில்.
மனோதுக்கம் நீக்கிவிடும்,
தீமைவருங்காலத்தில்.
  சிசுநேசர்!
எம்மைச் சேரும், நெஞ்சத்தில்.

௩. தினம் செவிக்கேறும் போதம்
சித்தியாக்கும் மனசில் :
அப்போ நாங்கள் தேவர்சித்தம்
காட்டுவோமே நடையில் :
சிசுநேசர் !
நம்மைச்சேரும் மோட்சத்தில்.

பலபொருள்.

388. ௩௮௮-ம். கீதம். L. M.

*Fall of man and salvation by Christ.*

க. ஒரே கர்த்தர் இருக்கிறார்,
பிதா. குமாரன், ஆவியார்,
அவர் எல்லாம் படைத்தவர்
எப்போதும் காத்துக்கொண்டவர்.

உ. படைப்பில் ஆதிமானிடர்
தெய்வீக சாயலானவர்,
அவர்களுக்குண்டானது
மெய்ஞானம, சுத்தம், களிப்பு.

௩. பசாசின் தந்திரத்தினல்
அவை இழந்து போனதால்
இயல்பாய் யாரும் கெட்டோர்கள்,
நடத்தையாலும் பாவிகள்.

௪. அதற்கு தேவ கோபமே
உண்டாகப், பேயின் கையிலே
விழுந்து சாவுக்குட்பட்டோம்,
நரகத்திய்க்கு நேரானோம்.

ரு அதற்கு தப்பி மோட்சத்தை
அடைய பார்த்தும், ஓர்வகை
நம்மால் தோன்ருது, நாதனே
ரட்சிப்புண்டாக்க வேண்டுமே.

389. ௩௱அகூ-ம். கீதம். P. M.

*The ten Commandments.*

க. நான் தமக்குப் பயப்பட
சீனா மலையின்மேல்க கர்த்தா
கொடுத்த பத்துக் கற்பனை
ஏதேன்றுகேட்டு, சீரடை, மனிதனே!

உ. உன் தேவனும் கர்த்தர்தாமே,
வேறொன்றையும் பணியாதே,
நீ விக்கிரக வணக்கத்தை
வீண் பத்தி யாவையும் பகை, மனிதனே!

௩. கர்த்தாவின் நாமத்தை வீணில்
வழங்காயாக, ஏனெனில்:
வீணில் வழங்கும் யாவர்க்கும்
தப்பாத ஆக்கினைவரும், மனிதனே!

ச. நீ ஓய்வு நாளிற் சகல
லௌகீக வேலையை விட
நினைத்த நாளும் முழுதும்
நீ பரிசுத்தமாக்கவும், மனிதனே!

ரு. சுகத்துடன் உன் ஆயிசு
நீடித்திருக்கிற தற்கு,
தகப்பனையுந், தாயையும்
நீ எணணிச்சட்டைபண்ணவும் மனிதனே

சா. கொலைசெய்யாமல், உனக்கு
அடுத்தவனை நேசித்து,
எல்லார் ரொட்சிப்பை யாசையாய்
விரும்பித்தேடக்கடவாய், மனிதனே!

எ. நீ விபசாரம் பண்ணாதே,
அசுத்த உலகத்திலே
உன்நெஞ்சும் வாக்கும் மார்க்கமும்
சுத்தாங்கமாயிருக்கவும், மனிதனே!

அ. நீ களவு செய்யாமலும்,
திருக்கும் அவஞாயமும்,
பண்ணாமலும், கர்த்தருக்குப்
பயந்து, உண்மையாயிரு, மனிதனே!

௯. பொய்ச் சாட்சியை பிறருக்கு
விரோதமாய்ச் சொல்லாதிரு.
பொய்க்காரரான மனிதர்
பிசாசுடைய புத்திரர், மனிதனே!

௰. அடுத்தோன் வீடு வஸ்துக்கள்
பெண்சாதி வீட்டாள் சீவன்கள்
உண்டே, அதில் ஒன்றாகிலும்
நீ இச்சிக்காதிருக்கவும், மனிதனே!

௰௧. இக்கற்பனைகளாலே நீ,
நீ குற்றவாளி என்றறி,
கிறிஸ்துக்குள்ளாய்க் கிறிஸ்தோனைப்போல்
இந்நூல்ப்படி நடந்துகொள், மனிதனே!

௰௨. ஆ, ஏசு சுவாமி! தேவரீர்
இதற்கோத்தாசை பண்ணுவீர்,
அடியார் கிரியை யெல்லாம்
மகா பிழை குறையுமாம், இரங்குமே.

## தோத்திரம்.

**390.** ௩௱௯௰-ம். கீதம். P. M.

Ps. CVII. *Doxology.*

க. பூலோகத்திலுண்டாம் எச்சாதிகளுமான
நராளக்சளே மசா தயை பெருத்தோரான
கர்த்தாவை போற்றுங்கள்!
மகிழ்ச்சியுடனே,
இஸ்தோத்திரியுங்கள் எல்லாச் சனங்களே!

உ. அதேனென்றால் இதோ அவர் விளங்கப்பண்ணும்
தயையும் உண்மையும் வாங்கத்தக்கதாய் அன்றன்றும்,
எத்தேசகாலமும்
அடியார்பேரிலே
நிலைக்கும், அவர்க்குத் துதியுண்டாகவே.

**391.** ௩௱௯௰௧-ம். கீதம். 7's.

*The same.*

க. சிரேஷ்ட தூதர் தேவனை
போற்றிசொல்வார் கீதத்தை.
எதிரொலியாக நாம்,
முழங்கி ஆராதிப்போம்:
நித்தம் வாழ்க சுத்தரே,
மண் விண் யாவும் உம்மையே
போற்றும் என்றுந் துதித்து
சொல்வார் உள்ளம் மகிழ்ந்து.

**392.** ௩௱௯௰௨-ம். கீதம். L. M.

*The same.*

க. ஒன்றாக ஆண்டிருக்கிற
திரியேக தெய்வமாகிய
பிதா குமாரன் ஆவிக்கே
இஸ்தோத்திரமுண்டாகவே.

393. ௩௱௯௩-ம். கீதம். S. M.

*The same.*

க. அருளின் ஊற்றுந்தேவனை
பிதாக்குமாரன் ஆவியை,
துதிசெய் வானசேனையே ;
பூலோகமும் நீ துதிசெய்.

394. ௩௱௯௪-ம். கீதம். C. M.

*The same.*

க. பிதாவுக்கும் சுதனுக்கும்
தேவாவிக்கும் எல்லா,
இடங்களிலும் என்றைக்கும்
புகழாம் அல்லவா.

395. ௩௱௯௫-ம். கீதம். L. M.

*The same.*

க. சர்வசீவ தயாபரர்,
பிதா சுதன் ஆவி இவர்
மண் விண் எங்கும் இவர் நாமம்
போற்றக்கடவீர் என்றும்.

396. ௩௱௯௬-ம். கீதம். P. M.

*The same.*

க. மேன்மை, கனம், துதி, பலம்
கர்த்தருக்கென்றும் இருக்கும்,
எங்கள் மீட்பர், ஏசுக்கிறிஸ்து

அல்லேலூயா, அல்லேலூயா,
கர்த்தருக்கிஸ்த்தோத்திரம்.

397. ௩௱௯௰௭-ம். கீதம். C. M.

*The same.*

௧. எல்லா சிஷ்டிகளாலேயும்,
பிதா, குமாரன், ஆவிக்கும்,
அனந்தக்காலமாக,
அல்லேலூயா! மகத்துவம்.
பேலன் துதி இஸ்தோத்திரம்
உண்டாயிருப்பதாக,
ஆமன், ஆமன்,
அவர் முன்னும், அவர் பின்னும்,
பரிசுத்தம்,
பரிசுத்தம், பரிசுத்தம்.

398. ௩௱௯௰௮-ம் கீதம். P. M.

*The same.*

௧. தோத்திரம் புகழ்ச்சி கீர்த்தி
ஏசுவுக்கு என்றும் ஏற்கும்
கிறிஸ்துநாதர் லோகமீட்பர்,
அல்லேலூயா, ஆமன்.

முற்றிற்று.

## கீ த மா லை யி ன்

# அகராதி.

---

### அ.



### ஆ.

# அகராதி.



## இ.

# அகராதி.

பக்கம்

## கோ.



## ச.



## சா.



## சி.



## சீ.



## சு.



## சூ.

பக்கம்.

செ.



சே.



த.



தா



தி.



து.



தூ.



தெ.



தே.

## தோ.



## ந.



## நா.

## மா.



## மி.



## மீ.

பக்கம்.

### மு.



### மெ.



### மே.



### மோ.



### யா.



### யூ.



### ர.



### ரா.

பக்கம்.

வீ.



வே.



வே.



வை.



---

## அட்டவணை.

---

கு.

கீதம்.

கே.

யூ.

வ.

வி.

வெ.

வே.

---

# INDEX

OF

# SUBJECTS AND OCCASIONS

—o—

# INDEX

OF

# SCRIPTURES ILLUSTRATED.

---o---

No. 1.









# TUNES.

No. 1. EATON. 6. 8's, or 112th Metre.










No. 2. DUNKIRK, OR 7. 6's.



No. 3. LYDIA. C. M.



No. 4. HART'S. 7's.



No. 5. CRANBROOK. S. M.



No. 6. BURNHAM. 148th METRE.








No. 7. HELMSLEY. 8. 7. 4.








No. 8. A GERMAN AIR. P. M.



No. 9. A GERMAN AIR. P. M.



No. 10. PERU. L. M.










# முகவுரை.

இஃது தமிழ்க் கிறிஸ்தவர்களிற் சிலருக்கு வேண்டுமென்கிற நோக்கத்தைக்குறித்தும், அவர்களுக்குப் பிரிமாயெழுப்புதலுண்டாகுதலைக்குறித்து, மற்றவர்களியற்றிய ஞானப்பாட்டுகளிற் சிலவற்றை யாராய்ந்தெடுத்துக், கீதமாலையாகச் செய்யப்பட்டது. இதனாலவர்கள், தேவாலயங்களிலும் வீடுகளிலுஞ் செலுத்துகிற துதிகளுக்கும் விசுவாசம், அன்பு, தைரியம், சாக்கிரதை, முதலான நற்குணங்களுக்குமுதவியாயிருக்கிறதுமல்லாமற், றுன்பப்படுகிறகாலத்திலுமாறுதலாயிருந்தாலெங்களுக்கு மன மகிழ்ச்சியாயுந் திர்ப்தியாயுமிருக்கும்.

சிலர் பாடும்பொழுது, பாட்டினிராகத்தை மாத்திரம் கவனிக்கிறார்களே யொழிய, க. கொரி. ιச : ιரு. வசனத்திற் கூறியபடி, ஆவியினாலு முண்மையினாலும் பொருள் விளங்கும்படிக், கவனிக்கிறதில்லை; ஆகையாலிந்த மாலையை யேற்றுக்கொள்ளுகிறவர்களவருடைய கருத்தின்படிக் கவனிப்பீர்களாக.

இதைப்பாடுவதற்காக வதிகவழக்கமுள்ள விராகத்தின் மாதிரி யிதனோடு சேர்க்கப்பட்டிருக்கிறது : மற்றவைகட்கு முன்னச்சிற் பதிப்பித்திருக்கிற பழைமையான பெப்ரிசியுஸ் ஐயரவர்கள் செய்த புத்தகத்திற்காகச் செய்யப்பட்டிருக்கிற விராகப்புத்தகத்திற் காண்பீர்களாக.

நமக்காக விந்தப்பாட்டுகளைப் பாடினவர்களாகிய வனேகம்பெயர்கள் மரித்தவர்களாக விருந்தாலுமிப்பொழுது வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களை விசுவாசத்தினு



